உ

## பூவாளூர் வித்துவான் தியாகராச செட்டியார் .



உ

# திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி

ஆசிரியர்
பூவாளூர்
**வித்துவான். சி. தியாகராச செட்டியார்**

உரைவிளக்கம்

குன்றக்குடி ஆதீனப்புலவர். தமிழாகரர்.
சைவத் தமிழ்மணி. சைவத் தமிழறிஞர். சித்தாந்தச் செல்வர்.
வித்துவான். க. கதிரேசன் எம். ஏ; பிஎட்
பூவாளூர் 621 712.
பேசி 098651 93754.

**தோரணவாயில்.**

தமிழறிஞருலகில் அனைவராலும் போற்றப்பெறும் பெரும்புலமை நலங்களும், பண்புநலன்களும் ஓருருவாய் அமைந்த பெருமையர் திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள். இவர்களால் பட்டைதீட்டப்பெற்ற ஒளியாலும் பருமனாலும் உயர்வற உயர்நலம் உடையவர் பூவாளூர் சி. தியாகராச செட்டியார் ஆவார்.

இவ்விருவரைப்பற்றியும், குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனக் குருமகாசந்நிதானம் வணக்கத்திற்குரிய திருப்பெருந்திரு தெய்வசிகாமணி

அருணாசலதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் ( தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் );

“ மகாவித்துவான் தியாகராச செட்டியார்,மகாவித்துவான் கவிமழை மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆகியவர்களிடையே இருந்த நட்புறவு நாடறிந்தது. தமிழ்ப்புலவர்கள் இருவர் இணையமாட்டார்கள் என்ற வசைமொழியை மாற்றியமைத்தவர்கள் மாணவர் ஆசிரியராகிய இந்தப் பெரும்புலவர்கள். இவர்கள் காலத்தில் பெரும்புலமை இருந்தது. இவர்கள் தமிழ்ப்புலமைத் திறனுக்குச்சான்றாக விளங்கியவர்கள். மகாவித்துவான் தியாகராச செட்டியார் அவர்கள் இயற்றிய **மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அந்தாதி நூல்;** தமிழ்வரலாறாகும், செழுந்தமிழ் வழக்கில் தெளிவு இருக்கும், தமிழ்ப்பண்பாட்டினைப் பாடும் நூலாகவிளங்கும். “ என்கிறார்.

“ நன்றி. பூவாளூர் ப, சண்முகவேலாயுதம் அவர்கள் வெளியிட்ட “திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அந்தாதி” யில் வாழ்த்துரை.

திருப்பணிச்செல்வரும். பெரும்புலமைசான்றவரும் ஆகிய திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்கள், மேற்படிநூலின் முன்னுரையில்

“ தமிழ் அமிழ்தினும் இனியது. செந்தமிழ், வெந்தழலில் வேகாது விளங்கியது, எலும்பைப் பெண்ணாகச் செய்தஅருமையும் பெருமையும் பெற்றது. இத்தகு வித்தகத்தமிழை வளர்த்து வளம்பெறச் செய்தவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள்.

ஒருலட்சம் கவிகள் பாடி, பத்துக் கம்பன் என்று புகழ்பெற்றவர். பிள்ளையவர்களின் பாடல் என்றும் குன்றாது ஓடும் ஜீவநதி போன்றது. தேனமுதம் போல வானமுதாய் இனிக்கப்பாடிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களை நினைந்து போற்றுவது நன்றிக்கடனாகும்.

பிள்ளையவர்களின் பிரதம மாணவர் பூவாளூர் மகாவித்துவான் தியாகராச செட்டியார், தமது குருநாதர் மீது அன்பினால் என்பும் உருக இன்பத்தமிழால் பாடிய **மீனாட்சிசுந்தரம் பிள்ளை அந்தாதி**ப் பாடல்கள் 92 இன்சுவைக் கவிகளாகும்.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில், குன்றாதவளமும்பொன்றாத புகழும் படைத்த திருத்தலம் பூவாளூர். மகாவித்துவான் தியாகராஜ செட்டியார் அவதரித்த பெருமையுடையது, பண்புள்ள அன்பர்கள் வாழ்கின்ற திருத்தலம் இது. இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்மீது மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் **பூவாளூர்ப் பதிற்றுப்பத்து அந்தாதி** பாடியுதவினார். இந்த அரியபாடல்கள் முத்திக்குத் துணைசெய்து தித்திக்கும் திறமுடையன. இந்த உயர்நூலில் இப்போது கிடைக்கும் பாடல்கள் 25. “ என்று போற்றுகிறார். ( இப்பதிற்றுப் பத்து அந்தாதி 25 பாடல்களைப் பூவாளூர்

பதிகங்கள் நூலில் முன்னரே நான் வெளியிட்டுவிட்டதால் இதனை இந்நூலில் சேர்க்கவில்லை )

பூவாளூர் வித்துவான் சி . தியாகராச செட்டியார் பற்றி தமிழ்த்தாத்தா. உ. வே. சா அவர்கள் ( இவர், மகாவித்துவான் தி. மீ. சு. பிள்ளையவர்களின் மற்றொரு மாணவர் ) 1903 இல் தாம் பதிப்பித்த ஐங்குறுநூறு நூலினைத் தியாகராச செட்டியாருக்குக் காணிக்கையாக்கி " திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவானும், என் ஆசிரியருமாக விளங்கிய திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களுடைய கண்மணிபோன்ற முதல் மாணாக்கரும், பாடம்சொல்லுதல், செய்யுள் செய்தல், நூலாராய்தல் முதலியவற்றில் அவர்களைப் போன்றவரும், முன்பு கும்பகோணம் கவர்மெண்ட் காலேஜ் தமிழ்ப்பண்டிதராய் இருந்தவரும், வேறு கவலையின்றி நூலாராய்ச்சியையே செய்துகொண்டு காலம்கழிக்கும்படி வற்புறுத்திக்கூறி அவ்வாறே யான் நடத்தற்குக் கரும்புதின்னக் கூலிகொடுத்தாற்போலத் தம்முடைய அரிய வேலையை அன்புடன் எனக்கு எளிதிற்கிடைக்கச் செய்தவரும், இரந்துபுன் மாக்கள்தமை என்றும் துதியாவரம்தர என்முன்நின்ற வள்ளலும் ஆகிய திரிசிரபுரம் வித்துவான் ஸ்ரீ தியாகராச செட்டியார் அவர்களுடைய பேருதவி எழுமையும் மறக்கற்பாலதன்று. அவர்கள் செய்த மேற்கூறிய அரிய உதவியில்லையேல் எனக்கும் பழைய தமிழ்நூல் ஆராய்ச்சிக்கும் இக்காலத்தில் யாதோர் இயைபுமின்று என்பது திண்ணம். ஆதலால் இனியதும் அரியதுமான இந்நூற்பதிப்பை அவர்களிடத்துள்ள நன்றியறிவிற்கு அறிகுறியாக அவர்களுக்கு உரித்தாக்குகிறேன் " என்கிறார்.

( வித்துவான் தியாகராச செட்டியார் - மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சா. பக்கம்165. )

மேலும், " தியாகராச செட்டியார் சிறந்தபண்டிதர்; உபகாரி; ஆற்றலுள்ள ஆசிரியர்; நல்ல அன்பர்; இவருடைய அன்பர்கள் இவருடன் பழகியகாலத்தில் நிகழ்ந்த ஏதேனும் ஒருநிகழ்ச்சியையாவது மறவாமல் நினைத்திருப்பார்கள். இவருடைய இயல்பும் செயல்களும் பழகுவோர் மனத்தில் பதிந்து நிற்பன.

தமிழுலகம் இவ்வகையான மனிதர்களைப் பெறுவது அருமை "
( மேற்படி நூல் பக்கம் 181. ).

" இமயத்துக் கோடுஉயர்ந்தன்ன தம்இசைநட்டுத் தீதில் யாக்கையொடு மாய்ந்த " தியாகராசர் **1826** இல் கல்விக்குடையார் கோத்திரத்துச் ச. சிதம்பரம் செட்டியார்க்கு மகனாகத் தோன்றினார்.

**இவர் இயற்றிய நூல்கள்** : **1.** மீனாட்சிசுந்தரம் பிள்ளை அந்தாதி , **2.** வீரை உமையம்மை பிள்ளைத் தமிழ், **3.** சவரிராயலு நாயகர் இரட்டைமணி மாலை, **4.** திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி, **5.** திருவாரூர் பாதி

திருவொற்றியூர் பாதிவெண்பா அந்தாதி, 6. திருவாரூர் மருந்து வெண்பா மாலை, 7. வியாசக்கோவையின் பிற்பகுதி.

**இவர் பதிப்பித்த நூல்கள்** : 1. உறையூர்ப் புராணம், 2. திருக்குடந்தைப் புராணம், 3. திருப்பெருமண நல்லூர் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ், 4. திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ், 5. திருவிடைக் கழி முருகன் பிள்ளைத்தமிழ், 6. திருவானைக்கா அகிலாண்ட நாயகி மாலை, 7. பூவாளூர்ப் புராணம்.

இவர் இயற்றிய திருச்சிற்றம்பல வெண்பாஅந்தாதி, திருவாரூர்பாதி திருவொற்றியூர்பாதி வெண்பாஅந்தாதி., திருவாரூர் மருந்து வெண்பாமாலை, ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அந்தாதி ஆகிய நான்குநூல்களை மட்டும் அடியேன் சந்திபிரித்து, குறிப்புரை, பொழிப்புரை, விளக்கமேற்கோள்,மற்றும் இன்றியமையா இலக்கணக்குறிப்பு ஆகியவற்றுடன் இதில் தந்துள்ளேன். படித்துச் சுவைத்து இன்புறுக.

அன்புடன்

குன்றக்குடி ஆதீனப்புலவர். தமிழாகரர்,
சைவத்தமிழ்மணி, சைவத்தமிழறிஞர்,
சித்தாந்தச் செல்வர்,
வித்துவான். க. கதிரேசன். எம். ஏ; பி.எட்
பூவாளூர். 621 712.
அலைபேசி : 098651 93754.


******************************

உ

## திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி

சிறப்புப் பாயிரம்

**டாக்டர் . உ, வே. சா** அவர்கள்

1. பண்பாவந்(து) ஆதிரைநாள் பண்ணவனைப் போற்றிஒரு
வெண்பாஅந் தாதி விளம்பினான் - விண்பால்நன்(கு)
ஓடும் தியாகரா உத்தமஎன்(று) ஏத்தாரைச்
சாடும் தியாகரா சன்.

**குறிப்புரை** : ஆதிரை நாள்= திருவாதிரை நாளில். பண்ணவன்= கடவுள் - தில்லைக் கூத்தப்பிரான். ஓடும்= வளர்ந்த - எங்கும் நிறைந்த. தியாகரா= சிவனே. சாடும்= கடிந்துகொள்ளும்.

**பொழிப்புரை** : வானளவாய் எங்கும் நிறைந்த கூத்தப்பிரானே ! உத்தமனே ! என்று வணங்காதவரைக் கடிந்துகொள்ளும் தியாகராசன் என்பவன், பத்திமையுடன் திருவாதிரைநாளில் வந்து கூத்தப்பிரானைப்

போற்றி ஒப்பற்ற வெண்பாவாலான அந்தாதி இலக்கியம் இயற்றினான்

**இலக்கணக்குறிப்பு** : சிவபெருமானைக் குறிக்கும் தியாகரன் என்பது விளியேற்றுத் தியாகரா என்றுவந்தது.

2. வெள்ளியகொக் கிற(கு)அறுகு மதிநதிநீ(று) அர(வு)ஆதி
மிலைந்து வந்தே
ஒள்ளியபூந் திருக்கயிலை வீற்றிருக்கும் நடராசற்(கு)
உவப்புச் செய்வ(து)
உள்ளியாஃ(து) என்(று)அறிஞர் சொலவெண்பா அந்தாதி
ஒன்று பன்னூல்
தெள்ளியசீர் தியாகரா சக்கவிஞர் ஏ(று)இனிது
செப்பி னானால்.

**கூட்டுமுறை** : ஒள்ளிய பூந்திருக்கயிலை வந்தே, வெள்ளிய ........... வீற்றிருக்கும் நடராசற்கு..........

**குறிப்புரை** : மிலைந்து= சூடி. உள்ளியது= நினைந்து போற்றத்தக்கது.

**பொழிப்புரை** : ஒளிவடிவான அழகிய தெய்வத்தன்மைவாய்ந்த கயிலை மலையிலிருந்து வந்து, வெண்மையான கொக்கிறகு, அறுகம்புல், பிறை, கங்கை, வெண்ணீறு, நல்லபாம்பு முதலியவற்றைச் சூடி, தில்லைச் சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள நடராசப்பெருமானுக்கு மகிழ்வுதருவதும், அறிஞர்கள் நினைந்து போற்றத்தக்கதும் இதுவே என்று சொல்லக்கேட்டு, பலநூல்கள் தெளிந்த சிறப்புடைய தியாகராசக் கவிஞனாகிய ஆண்சிங்கம் இந்த வெண்பா அந்தாதியை இயற்றினான்.

## திருச்சிற்றம்பல வெண்பாஅந்தாதி

ஆசிரியர்

பூவாளூர். வித்துவான். சி. தியாகராச செட்டியார்

### காப்பு:

### விநாயகர்.

1. பூமேவு செம்பொன் பொதுவி(ல்)நடிக் கும்பெருமான்
பாமேவு அந்தாதி பகரவே - நாமேவும்
அற்பகத்தின் மேவி அமரும் ஒருகோட்டுக்
கற்பகத்தின் அம்பொற் கழல்.

**குறிப்புரை** : பூ= பொலிவு. பொது= சிற்றம்பலம். பா= அழகு. அற்பகம்= அன்பு + அகம்= அன்புவடிவான உள்ளம். நா= பொலிவு. பொன்=ஒளி. கழல்= திருவடி.

**பொழிப்புரை** : பொலிவுபொருந்திய சிறந்த பொன்னாலான

சிற்றம்பலத்தில் திருக்கூத்தியற்றும் கூத்தப்பெருமான் மேல் அழகுபொருந்திய அந்தாதி இலக்கியம் பாட, அன்புவடிவமான உள்ளத்தில் பொருந்தி எழுந்தருளும் ஒற்றைக்கோடுடன் அழகுபொருந்திய கற்பக விநாயகரின் அழகிய ஒளிவடிவான திருவடிகள் காப்பாகும்.

**இலக்கணக்குறிப்பு** : கழல் - தானியாகுபெயர்.

2. **சமயாசாரியர் .**

மாண்டபுகழ்க் காழி மறைக்குழவும் சூலைகொடுத்(து)
ஆண்டஅர சும்நாவல் அண்ணலும் - நீண்ட
திருவாத வூர்வேதச் செம்மலும்எஞ் ஞான்றும்
ஒருவாத வூர்என் உளம்.

**குறிப்புரை** : மாண்ட= மாட்சிமை பொருந்திய. குழவு= குழந்தை - திருஞானசம்பந்தர். நாவல் அண்ணல்= திருநாவலூர்ச் சுந்தர். ஒருவாத ஊர்= நீங்காத ஊர்.

**பொழிப்புரை** : மாட்சிமைபொருந்திய புகழ்வாய்ந்த சீர்காழியினரான மறைஓதும் கவுணியர் கோத்திரத்துத் திருஞானசம்பந்தரும், சூலைநோய் தந்து ஆட்கொள்ளப்பெற்ற திருநாவுக்கரசரும், திருநாவலூர்ச் சுந்தரரும், நீண்ட புகழுடைய திருவாதவூரில் வேதம்ஓதும் குலத்துத்தலைமை சான்ற திருவாதவூரரும் ஆகிய நால்வரும் எக்காலத்தும் நீங்காத ஊர் எனது உள்ளமாகும்.

3. **தீட்சாகுரு.**

துன்னுபெரும் செல்வத் துறைசை கயிலைஎன
மன்னி அமரும்எழில் மாணிக்கம் - மின்னுபுகழ்ப்
பீடார் குருசுப் பிரமணிய தேசிகன்சீர்
பாடார் படித்(து)என் பயன்.

**குறிப்புரை** : துன்னு= செறிந்த. பெருஞ்செல்வம்= அருட்செல்வமும் பொருட்செல்வமும். துறைசை= திருவாவடுதுறை. மன்னி அமரும்= நிவையாக எழுந்தருளும். மாணிக்கம்= செம்மேனியனான சிவபெருமான். குரு= தீக்கை வழங்கிய குரு.

**பொழிப்புரை** : அருட்செல்வமும் பொருட்செல்வமும் செறிந்த திருவாவடுதுறையிலும் கயிலையிலும் நிலையாக எழுந்தருளியுள்ள மாணிக்கச் செம்மேனியனாம் சிவபிரானாகிய, ஒளிரும் புகழ்வாய்ந்த பெருமைபொருந்திய என்குருமூர்த்தியாகிய சுப்பிரமணிய தேசிகரின் சிறப்புகளைப் பாடாதவர் மிகப்படித்துப் பயனில்லை.

**விளக்கம்** : “ கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின் “ என்ற திருக்குறளை நினைப்பித்தார்.

## நூல்

1 சீர்பூத்த அம்பலத்தில் தேவிமலர்க் கண்களிக்க
நார்பூத்த இன்ப நடநவிலும் - கார்பூத்த
கண்டன் மறைச்சிலம்பு காட்டு மலர்ப்பாதம்
உண்டுதுணை நாயேன் உயிர்க்கு.

**குறிப்புரை** : நார்பூத்த= அன்பே மலர்ந்த. கண்டன்= திருக்கழுத்தன். மறைச்சிலம்பு= மறைகளாகிய சிலம்புகள்.

பொழிப்புரை : சிறப்புகள் மலர்ந்த பொன்னம்பலத்தில் சிவகாமியம்மை தனது தாமரைமலர்க் கண்களால் கண்டு களிக்க, உயிர்கட்கெல்லாம் அன்பே மலர்ந்த இன்பம் வழங்கும் ஆனந்தத் தனிப்பெருங்கூத்தியற்றும் கருமை பொருந்திய திருக்கழுத்துடைய கூத்தப்பிரானைக் காட்டுகிற, மறைகளாகிய சிலம்புகள் அணிந்த தாமரைமலர் ஒத்த திருவடிகள், நாயேனாகிய எனது உயிர்க்கு என்றும் துணையாய் அமையும்.

**விளக்கம்** : அம்மை காண நடமிடல் : " அருட்சூல் கொண்ட ஐயரித் தடங்கண், திருமாண் சாயல் திருந்திழை காணச், சிற்சபைபொலியத் திருநடம் புரியும், அற்புதக் கூத்த " ( சிதம்பரமும்மணிக் . 2: 18 - 21 ). உயிர்களைத் தன் ஐந்தொழிலால் ஈடேற்றுவது ஆதலின் அந்நடம் இன்பநடம் எனப்பெற்றது. மறைச்சிலம்புகாட்டும் எடுத்தமலர்ப்பாதம் அம்மையினது ஆதலின் நாயேன் உயிர்க்குத் துணையுண்டு என்றார்.

2. உயிரே உயிர்த்துணையே உண்ணத் தெவிட்டா
அயிரேதீங் கண்டே அமுதே - செயிரே
மருவாச்செந் தேனேபொன் மன்றத்தில் ஆடும்
ஒருவாயான் தொண்டன் உனக்கு.

**குறிப்புரை** : அயிர்= வெல்லக்கட்டி. கண்டு= கற்கண்டு. செயிரேமருவா= குற்றம் பொருந்தா. ஒருவா= ஒப்பற்ற பரம்பொருளே. என்றும் புதிதாய் விளங்குவதாதலின் செயிரே மருவாச் செந்தேன் என்றார்.

**பொழிப்புரை** : இதன்பொருள் வெளிப்படை.

3. உனக்(கு)அடிமை யானென்று ஓங்குதில்லை நம்பா
எனக்(கு)இறைநீ என்றும் இசைப்பேன் - மனக்கிசைய
உன்னை அடியேன் ஒருநாள் மறப்பேனோ
அன்னையே அப்பா அருள்.

**குறிப்புரை** : நம்பா= விரும்பத்தக்கவனே.

**பொழிப்புரை** : அருள்ஓங்கிய தில்லையில் எழுந்தருளியுள்ள விரும்பத்தக்கவனே ! உனக்கு என்றும் நான் அடிமை, எனக்குநீ இறைவன் என்று கூறுவேன். எனது மனத்துக்கிசைந்த உன்னை என்றும் மறவேன். அம்மையே அப்பா எனக்கு அருள்க.

4. அருட்பிழம்பை ஆனந்த ஆழியைஅஞ் ஞான
இருட்பிழம்பைப் பாற்றும் இனனைத் - தெருட்பிழம்பை
உற்றாரே பற்றுமன்றத்(து) உம்பர் பெருமானை
மற்(று)ஆரே பற்ற வலர்.

**குறிப்புரை** : ஆனந்த ஆழி= பேரின்பக்கடல். பாற்றும்= அழிக்கும். இனன்= ஞாயிறு. மற்று - வினைமாற்றுப் பொருளது. உம்பர்பெருமான்= தேவர் தலைவன். தெருட்பிழம்பை உற்றாரே= ஞானப்பிழம்பைச் சரணடைந்தவரே. வலர்= வல்லவர். மற்று ஆரே= பிறரெல்லாரும் யார் ? வல்லமையற்றவர் - மனிதரல்லர்.

**பொழிப்புரை** : அருளின்திரட்சியாய், பேரின்பக்கடலாய், அறியாமையாகிய இருளை அழிக்கும் ஞானக்கதிரவனாய் விளங்கும் ஞானத் திரளைச் சரணடைந்தவரே வல்லவர். பிறரெல்லாரும் யார் ? மனிதரல்லர்.

5. வல்ஆர் முலைச்சசியோன் வாழ்வும்அயன் மால்வாழ்வும்
பல்லார் பணிஅம் பலக்கூத்தன் - எல்லார்
மலரடியை வாழ்த்தி வணங்குபே ரன்பர்
அலர்பெரிய வாழ்விற்(கு) அணு.

**கூட்டுமுறை** : பேரன்பர் அலர்பெரிய வாழ்வுக்கு வல்ஆர் .................மால் வாழ்வும் அணு.

**குறிப்புரை** : எல்ஆர்= ஒளிவடிவான.. அலர்= மகிழ்ச்சி - இன்பம். பெரியவாழ்வு= வீடுபேற்று வாழ்வு,

**பொழிப்புரை** : சூதாடு கருவிஒத்த முலைகளுடைய சசிதேவியின் ( தேவேந்திரன் மனைவி ) வாழ்வும், நான்முகன், திருமால் வாழ்வும் மிகப்பலரும் வணங்கும் பொன்னம்பலவாணனின் ஒளிவடிவான தாமரைத் திருவடிகளை வாழ்த்தி வணங்குவோரின் பேரின்பமே மலர்ந்த வீடுபேற்றின்ப வாழ்வின்முன் அணுவாகும் - அற்பவாழ்வாகும்.

**விளக்கம்** : சசிதேவியைக் கூறியதன்மூலம் இந்திரனை உட்படுத்தினார். இந்திரன் மால் அயன் கூறவே பிறதேவர் அவருள் அடங்கினர். இவர்களின் இன்பவாழ்வு எல்லைக்குட்பட்டது. இவர்களின் வாழ்வு பிறப்புஇறப்புக்கு உட்பட்டது. ஆதலின் இவர்களை, " செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் " என்பார் ஸ்ரீ குமரகுருபர அடிகள். " நூறு கோடி பிரமர்கள் நொந்தினார், ஆறு கோடி நாராயணர் அங்ஙனே, ஏறு கங்கைமணல் எண்ணில் இந்திரர், ஈறி லாதவன் ஈசன் ஒருவனே " என்பார் அப்பரடிகள். இவர்கள் இவ்வாறிருக்க, " பேரன்பர் " பிறப்பினோடு இறப்புமில்லா வீட்டுவாழ்வினர் " ஆதலின் இவர்கள்முன் அவர்கள் வாழ்வு அணுஎன்றார்.

6. அணுமலை யாக அணுவாய் மலையே
நணும்அணு வாக நகமாய் - புணரவலன்

ஏவன்எழில் பொன்மன்றத்(து) இன்பநடம் செய்பெருமான்
ஏவன்அவன் உம்பர்க்(கு) இறை.

**குறிப்புரை** : நணும்= பொருந்தும். நகம்= மலை.

**பொழிப்புரை** : தான்பொருந்திய அணுமலையாக, தான் அந்த அணுவுக்கும் அணுவாய், தான்பொருந்திய மலை அணுவாக, தான் அந்த மலையாக அணுவாகச் சேரவல்லவன் யாரோ? அழகிய பொன்னம்பலத்தில் இன்பநடம் புரியும் பெருமான் யாரோ ? அவனே தேவர்களுக்கும் இறைவன்.

**விளக்கம்** : “ அணுவுக்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய் “ விநாயகர் அகவல்.

7. இறைவா உவந்தேத்தும் இன்பஅன்பர் உள்ளத்(து)
உறைவாய்நீ எல்லாம் உணர்வாய் - மறைவாழ்த்தும்
பொன்னம் பலவாநின் பூங்கழல்சேர் நாயேனுக்(கு)
இன்னம் பலவா இடர்.

**குறிப்புரை** : இறைவன்= எவ்விடத்தும் தங்கியுருப்பவன்.

**பொழிப்புரை** : எவ்விடத்தும் தங்கியிருப்பவனே ! இனிய அடியவர் உள்ளங்களில் எல்லாம் நீதங்கியிருப்பாய் . எனவே அவர்கள் நினைப்பன வெல்லாம் நீஉணர்வாய். மறைகள் போற்றும் பொன்னம்பலவனே ! உனது மலர்போன்ற திருவடிகளை மனத்தாலும் சேர்ந்த நாயாகிய எனக்கு இன்னும் பலஇடர் உண்டோ ? இடர் தீர்த்தருள்.

8. இடர்கெடுமா(று) எண்ணுதியேல் என்இனிய நெஞ்சே
படர்சடைமேல் கங்கை பனிக்க - நடம்நவிலும்
அம்பலத்தான் மேருவில்ஆக்(கு) அம்பலத்தான் இன்(பு)ஆய
நம்பலத்தான் சீரே நவில்.

**குறிப்புரை** : பனிக்க= துளிக்க. நம்பலத்தான்= நமக்குப் பலமானவன்.

**பொழிப்புரை** : எனது இனியநெஞ்சமே ! உனது துன்பம்கெட நினைத்தால், மேருமலையை வில்லாக்கிய பொதுவனும், நமக்குப் பலமாக உள்ளவனுமாகிய படர்ந்த தனது சடைமேல் கங்கை துளிக்கத் திருக்கூத்தியற்றும் பொன்னம்பலத்தானை நினை.

9. நவிலுமறைக்(கு) எட்டாத நல்லமணி நால்வர்
கவிபுகலக் கேட்டுக் களிக்கும் - சவிமணிசீர்
குன்றாப்பே ரின்பம் கொடுக்குமணி செங்கனக
மன்றாடும் என்கண் மணி.

**குறிப்புரை** : நவிலும்= போற்றப்பெறும். சவி= அழகு.

**பொழிப்புரை** : சிறந்த பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றும் என்கண்மணி; போற்றப்பெறும் மறைக்கு எட்டாத நல்லமணி; நால்வர்

பெருமக்கள் கவிபாடக் கேட்டுக் களிக்கும் அழகியமணி; அனைவர்க்கும் குன்றாத வீடுபேற்றின்பம் கொடுக்கும் மணியாவான்,

10. மணிகண்டா அம்பல வாணா வருத்தும்
பிணிகண்டு நெஞ்சிரக்கம் பேணாய் - பணிகண்டப்
பூணாய்ப்பொன் மன்றாடும் புண்ணியா நீசற்றுக்
காணாய்நா யேன்மறைந்த கண்.

**குறிப்புரை** : மணிகண்டா= நீலமணிஒத்த திருக்கழுத்தனே. பிணி= கண்ணோய். பணிகண்டப் பூணாய்= பாம்பினைக் கழுத்தணியாக் கொண்டவனே.

**பொழிப்புரை** : நீலமணிஒத்த திருக்கழுத்தனே ! அம்பலவாணனே ! பாம்பினைக் கழுத்தணியாக அணிந்து பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றும் புண்ணியனே ! என்னைவருத்தும் நோய்கண்டு நீ மனமிரங்கு. நாயேன் ஒளிஇழந்த கண்ணைக் கண்டு ஒளிஅருள்

11. கண்ஒளி மாய்த்(து)அன்பர் கவிபுகலக் கேட்(டு)அடியேன்
கண்ஒளி மாய்க்கக் கருதினாய் - பண்ஒளிரப்
பாடஅறி யேன்அம் பலவரதா நின்நடனம்
நாட ஒளிர்கண் நலம்.

**குறிப்புரை** : அன்பர்= சுந்தரர். நாட= விருப்புடன்காண.

**பொழிப்புரை** : முன்பு சுந்தரர் கண்ணொளி மறைத்து அவர் இனிய கவிபாடக் கேட்டுக் கண்ணொளி தந்தாய். இப்போது என்பாடல் கேட்க விரும்பி என்கண்ணொளி மாய்த்தாய் போலும். நான் பண்சிறக்கப் பாட அறியேன். பொன்னம்பலத்து எழுந்தருளி வரம் அருள்பவனே ! உனது திருநடனத்தை விரும்பிக்காணக் கண்ணொளி அருள்க.

12. நலம்ஒன்று உனக்(கு)உரைப்பேன் நன்நாவே கேட்டி
பலமொன்று பேரம் பலவன் - வலம்ஒன்று
சூலத்தான் மால்குருதி துன்னிநிறை யும்கரக
பாலத்தான் பொன்னடியே பாடு.

**குறிப்புரை** : பலம்= பேராற்றல். வலம்= வெற்றி. துன்னி நிறையும்= பெருகி நிறையும். கரகபாலம்= கையில் ஏந்திய மண்டையோடு.

**பொழிப்புரை** : என்நல்லநாவே உனக்கு நன்மைதரும் ஒருசெய்தி கூறுகிறேன் கேட்பாயாக. ஆற்றல் பொருந்திய பொன்னம்பலவனும், வெற்றி பொருந்திய சூலம் ஏந்தியவனும், திருமாலின்குருதி பெருகி நிறையும் கபாலத்தைக்கையில் ஏந்தியவனும் ஆகியவனது பொலிவார்ந்தவனது திருவடிகளையே நீபாடு.

**விளக்கம்** : திருமால், நரசிம்மாவதாரத்தில் இரணியனைக்

கொன்றுஅவன் குருதியைக் குடிந்து வெறிகொண்டபோது அவ்வெறியடக்கச் சிவபிரான் சரபராகவந்து அதன் வெறியடக்க மோதி அதன்குருதியைத் தன்கையில் ஏந்திய மண்டையோட்டில் ஏந்தினார் என்பது புராணம்.

13. பாடேன் இனியகவி பாடித் திருமுன்நின்(று)
ஆடேன் மலர்கொண்(டு) அருச்சியேன் - நீடுமறை
போற்றுகழல் சென்னி புனையேன்பொன் னம்பலவா
சாற்(று)அடியேன் உய்யும் சரி.

**குறிப்புரை** : உய்யும் சரி= ஈடேறும் வழி.

**பொழிப்புரை** : பொன்னம்பலவாணா ! நான் உன்புகழ்பாடவில்லை, உன்திருமுன் நின்று மெய்ம்மறந்து கூத்தாடவில்லை, மலர்களால் உன்னை அருச்சிக்கவில்லை, மிக்கமறை போற்றும் உன்திருவடிகளை என்தலையில் சூடிக்கொள்ளவில்லை. இந்நிலையில் நான் ஈடேறும் வழியை எனக்குக் கூறிஅருள்க.

**விளக்கம்** : “ ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற்கு அன்பிலை என்புருகிப், பாடு கின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை பாதமலர் சூடு கின்றிலை சூட்டுகின்றதுமிலை .........” ( திருவாசகம் 35 ) நினைக.

14. சரிந்த பவளச் சடைதிசை எல்லாம்
விரிந்தாடக் கங்கைதுளி வீசப் - புரிந்தநட
மன்றத்தான் முப்புரங்கள் மாயத் தவராம்பொன்
குன்றத்தான் எங்கள்குணக் குன்று.

**குறிப்புரை** : சரிந்த= கீழே தாழ்ந்த. தவர் ஆம்= வில்லாக. பொன்குன்றம்= மாமேருமலை.

**பொழிப்புரை** : எங்கள் குணக்குன்றாக விளங்குகிறவன், கீழேதாழ்ந்த தனது செஞ்சடை திசையெங்கும் விரிந்து ஆடவும், கங்கையின் துளிகள் தெறிக்கவும், விரும்பிப் பொன்னம்பலத்தில் ஆடுகிறவன். அவன், முப்புரங்களும் அழிய மாமேருமலையை வில்லாக ஏந்தியவனாவான்..

**விளக்கம்** : புரமெரித்தது : “ நாண் என்றால் நஞ்சுஇருக்கும் நற்சாபம் கற்சாபம், பாணந்தான் மண்தின்ற பாணமே...... “ ( தனிப்பாடல் )

15. குன்றெடுத்தான் காணாத கோமான்பொற் குஞ்சிதத்தாள்
மன்றெடுத்து நின்றாடு மாதேவன் – என்றும்
இறைவன் எளியோமுக்(கு) ஏத்துமறை தோறும்
நிறைவன் பொருளாகி நின்று.

**குறிப்புரை** : குன்றெடுத்தான்= திருமால். குஞ்சிதத்தாள்= தூக்கிய திருவடி. பொருள்= மெய்ப்பொருள்.

**பொழிப்புரை** : திருமால், பன்றியாய் நிலமகழ்ந்து சென்றும் காணமுடியாத

தலைவனும், தூக்கிய திருவடியுடன் பொன்மன்றில் ஐந்தொழில் கூத்தினை நிலையாக இயற்றும் மாதேவனும், என்றும் எல்லாப் பொருள்களிலும் தங்கியிருப்பவனனும் போற்றும் மறைகளில் நிறைந்தவனும் ஆகியவன், எளிய எமக்குப் போற்றும் மெய்ப்பொருளாக நின்றான்.

**விளக்கம்** : ஆயர்பாடியினர் இந்திரனுக்கு வழிபாடு செய்யாமையால் அவன் சினந்து கடுமழையால் ஆயர்பாடி மக்களையும் பிறவுயிர்களையும் வாட்ட, அவர்களைக்காக்கும் பொருட்டுக் கண்ணபிரான் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தான் என்பதால் திருமாலைக் குன்றெடுத்தான் என்றார்.

16. நின்றேன் திருமுன்னர் நின்று நெடுங்கருணைக்
குன்றே எனஅழைத்துக் கும்பிட்டேன் - மன்(று)ஏய்ந்த
ஆனந்தக் கூத்தன் அழியாத முத்திநலம்
ஏன்அந்தம் நல்கான் எனக்கு.

**குறிப்புரை** : மன்று ஏய்ந்த= அம்பலத்தில் ஆடும். எனக்கு அந்தம் ஏன் அருளான். அழியாத முத்திநலம் அருள்வான் என்க.

**பொழிப்புரை** : அம்பலத்தில் ஆடும் ஆனந்தக்கூத்தன் திருமுன் போய் நின்று, அவனை மிகப்பெரிய கருணை மலையே என்று அழைத்துக் கும்பிட்டேன். அதனால் அவன் எனக்கு இறப்பினை அருளான். ஏனெனில் என்றும் அழியாத முத்திநலம் அருள்வான் .

17. கும்பிடவே முத்திநலம் கூடும் எனமறைகள்
நம்பிடவே சாற்றுகின் நன்மையின்என் - கம்படுவெந்
தீயெழுத்தை நீர்எழுத்தாச் செய்பிரமா ஓரைந்து
பாயெழுத்தான் சிற்றம்பலம்.

**குறிப்புரை** : கம் படு வெந்தீ எழுத்து= தலையில் எழுதப்பட்ட கொடிய தீய எழுத்து - தலைஎழுத்து. நீரெழுத்தாச் செய்= நீரில் எழுதிய எழுத்துப் போல் அழித்து. பா எழுத்து= எங்கும்பரவியுள்ள சிவாயநம / நமசிவாய.

**பொழிப்புரை** : ஒப்பற்ற திருவைந்தெழுத்தாக எங்கும் பரவியுள்ள சிற்றம்பலத்தானைக் கும்பிடுவதால் முத்திபெறுதற்குரிய நலங்கள் மிகும்என்று நாம்நம்புமாறு கூறும் மறைகள் காரணமாக, அவனைக் கும்பிடுவதால் தலையில் எழுதிய கொடிய தீயஎழுத்தாகிய தலையெழுத்தை எழுதியநான்முகன் அதனை நீர்மேல் எழுத்துப்போல் தொடக்கநிலையிலேயே அழிப்பான்.

**விளக்கம்** : எழுதிக் கொண்டிருக்கும் போதே அழிவது நீர்மேலெழுத்து. “ நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே “ என்பது மூதுரை. 23.

18. சிற்றம்ப லத்தாடும் செல்வா சிறியேன்செய்
குற்றம் பொறுத்தாள்வாய் கோமானே - குற்றம்
பொறுப்பாயேல் பொல்லான் பொறுத்தான்என்(று) உன்னை
ஒறுப்பார் எவர்இங்(கு) உளர்.

**குறிப்புரை** : பொறுப்பாயேல்= மன்னித்து அருளினால். பொல்லான்= பொல்லாதவனாகிய இவனை.

**பொழிப்புரை** : சிற்றம்பலத்தில் திருக்கூத்தியற்றும் செல்வனே ! பெருந்தலைவனே ! என்குற்றங்களை நீ மன்னித்து அருளினால், பொல்லாதவனான இவனை மன்னித்து அருள்புரிந்தான் என்று உன்னைத் தண்டிப்பவர் யாருமில்லை. எனவே அற்பனான நான் செய்த குற்றங்களைப் பொறுத்து எனக்கு அருள்புரிவாயாக.

**விளக்கம்** : உனக்குமேல் ஒருவர் இல்லாத பெருந்தலைவன்நீ ஆதலின் உன்னை விசாரிப்போர், தண்டிப்பார் இல்லை என்றார்.

19. உள்ளமே நீகொள் உறுதி இதன்மேலென்
கள்ளமே என்றும் கலவாது - வெள்ளஞ்
சடையணிந்த அம்பலவன் தாள்கமலப் போதைத்
தொடையணிந்த பாவால் துதி.

**குறிப்புரை** : வெள்ளம்= கங்கைநீர். போது=மலர். தொடை= எதுகை மோனைமுதலிய தொடைகள்.

**பொழிப்புரை** : கங்கைநீரினைச் சடையில் அணிந்த அம்பலவாணனின் திருவடிகளாகிய தாமரைமலர்களை, எதுகை மோனைத்தொடைகள் அமைந்த பாக்களால் உள்ளமே துதி. நீ இதில் உறுதியாய் இரு. உன்பால்கள்ளநினைவு எக்காலத்தும் கலவாது. ( இதனால் நலமெலாம் வாய்க்கும் ) . இதற்குமேல் உனக்கு என்ன வேண்டும்.

20. துதிப்போம் அவன்புகழே சொல்வோம் ஓவாது
மதிப்போம்எஞ் ஞான்றும் மறவோம் - கதிக்கே
புகவிடுமோ மன்றாடும் புண்ணியன்எல் லாரும்
நகவிடுமோ நெஞ்சே நமை.

**குறிப்புரை** : ஓவாது= இடைவிடாது. கதி= வீடுபேறு.

**பொழிப்புரை** : மனமே ! பெருமான் புகழையே சொல்வோம், துதிப்போம், இதைவிடாது அதனையே மதிப்போம், நொடியும் அதனை மறக்கமாட்டோம். பொன்மன்றாடும் அப்புண்ணியன், எல்லாரும் நம்மை ஏளனம் செய்யுமாறு கைவிடுவானோ ? மாட்டான். மாறாக வீடுபேறு அடையச் செய்வான்.

**இலக்கணக்குறிப்பு** : நகவிடுமோ - ஓகாரம் எதிர்மறை. புகவிடுமோ - ஓகாரம் அசைநிலை.

**21.** நமர்காள் நமனுக்கேன் நம்மிடத்து வேலை
அமர(ர்)பணி தென்புலியூர் அத்தன் - தமர்ஆனோம்
அஞ்சா(து) அடர்த்தால் அறைவோம் அயர்த்தனைகொல்
எஞ்சாதுஎண் மாணிசெயல் என்று.

**குறிப்புரை** : நமர்காள்= நம்மவர்களே. தென்புலியூர்= சிதம்பரம். அடர்த்தால்= நெருங்கினால். எஞ்சாது= முழுவதும். அயர்த்தனை கொல்= மறந்துவிட்டாயா. மாணி= பிரம்மசாரி - மார்க்கண்டேயர்.

**பொழிப்புரை** : நம்மவர்களே ! தேவர்கள் வணங்கும்சிதம்பரத்துத் தலைவனுக்கு நாம் தம்மவர் ஆனோம். எனவே நம்மிடம் யமனுக்கு வேலை இல்லை. ஒருவேளை அஞ்சாமல் உயிர்கவர நெருங்கினால் பிரமசாரியாகிய மார்க்கண்டேயர் பொருட்டுப்பட்டதை முற்றும் மறந்தாயா ? நினைத்துப் பார் என்று அவனைக் கேட்போம். அதனால் அவன் நம்மை நெருங்கான்.

**விளக்கம்** : " கன்றிய காலனைக் காலாற் கடிந்தான் அடியவற்கா " ( அப்பர். கோயில் திருவிருத். 2 )

**22.** என்(பு)அரவம் பூண்ட இறையைப்பொன் அம்பலத்துத்
துன்(பு)அகலக் கண்டு தொழு(து)ஏத்தும் - அன்பர்
அடிப்பங் கயப்போதை அம்பொன் முடியா
முடிப்பர் அமரர் முடிக்கு.

**குறிப்புரை** : அடிப்பங்கயப் போது= திருவடித் தாமரைமலர். முடிக்கு முடியா முடிப்பர்= தலைக்கு மகுடமாகச் சூட்டிக் கொள்வர்.

**பொழிப்புரை** : தமது துன்பம்நீங்க, எலும்பு மாலையும் நல்லபாம்பும் அணிந்த சிவபிரானைப் பொன்னம்பலத்தில் கண்டு வணங்கிப் போற்றும் அடியவரின் திருவடித் தாமரைமலரை, தமது தலைக்கு மகுடமாகத் தேவர்கள் சூடிக் கொள்வர்.

**23.** முடியாப் பெருவாழ்வே முன்னவா என்றும்
வடியாத ஆனந்த வாரி - கடியாரும்
பூங்கொன்றைத் தாமா புலியூராய் நாயேனைத்
தாங்(கு)ஒன்றைத் தாநீ சரண்.

**குறிப்புரை** : முடியாப்பெருவாழ்வே= என்றும் நிலைத்தவனே. முன்னவன்= முதன்மையானவன். வடியாத= வற்றாத வாரி= கடல். கடிஆரும்= மணம்பொருந்திய. புலியூர்= சிதம்பரம். தாங்கு ஒன்றை= தாங்குகிற ஒப்பற்றதை. சரண்தா= திருவடிகளை அருள்.

**பொழிப்புரை** : என்றும் நிலைத்தவனே ! முதன்மையானவனே ! என்றென்றும் வற்றாத பேரின்பக் கடலே ! மணம்பொருந்திய அழகிய கொன்றைமாலையாணிந்தவனே ! சிதம்பரத்தானே ! என்னைத் தாங்கும் உனது ஒப்பற்ற திருவடியை அருள்க.

**24.** சரம்ஒன்று தொட்டுத் தழல்விழிக்கு நேராய்ப்
புரம்ஒன்ற வெந்த புதல்வன் - திறம்ஒன்றக்
காவானைக் காஎன்றல் கைவிட்டுத் தென்புலியூர்
மூவானை நன்னெஞ்சே முன்னு.

**குறிப்புரை** : சரம்= மலரம்பு. தொட்டு= எய்து. நேராய்= இலக்காகி. புரம்= உடம்பு. புதல்வன்= மகனான மன்மதன். திறம்ஒன்ற= வலிமைமுழுவதையும் காவான்= காக்கவியலாத திருமால். மூவான்= மூத்தல் - அழிவு. முன்னு= நினை.

**பொழிப்புரை** : ஒரேஒரு மலரம்பினை எய்து அதனால் சிவபிரானின் தழல்விழிக்கு இலக்காகி, உடலம்முழுதும் வெந்த தனது மகனாகிய மன்மதனின் வலிமைமுழுவதையும் காக்கவியலாத திருமாலிடம், என்னைக் காத்தருள் என்று வணங்குவதைக் கைவிட்டு, எந்நாளும் மூப்பற்ற - அழிவு இல்லாத சிதம்பரத்துக் கூத்தனை மனமே நீ நினை.

**விளக்கம்** : தன்மகனையே காக்கவியலாதவனா உன்னைக் காக்கப் போகிறான் என்றார்.

**25.** முன்னுவாய் நெஞ்சே முடிந்தபவம் எத்தனையோ
பின்னும் வருபவங்கள் எத்தனையோ - பொன்னம்
பலவனைக்கண்(டு) ஏத்திப் பவம்தொலைத்தல் செய்யா(து)
அலமருவாய் என்னோ அறை.

**குறிப்புரை** : முன்னுவாய்= எண்ணிப்பார். முடிந்த பவம்= இதுவரை எடுத்த பிறப்புகள். பவம்= பிறப்பு. அலமருவாய்= வருந்துகிறாய். என்னோ அறை= காரணம் என்ன கூறு.

**பொழிப்புரை** : நெஞ்சமே ! நீ இதுவரை எடுத்த பிறப்புகள் அளவற்றன. இனியும் எடுக்கவுள்ள பிறப்புகள் எத்தனையோ ! பிறவித்துன்பம் ஒழியப் பொன்னம்பலவனை ஏத்து. அவன் உன்பிறப்பு ஒழிப்பான். அவனை ஏத்தாமல் வருந்தக் காரணமென்ன கூறு.

**விளக்கம்** : எண்ணத்தொலயாப் பிறப்புகள், அவற்றில் துன்பங்கள் :
" பெறுகின்ற எண்ணிலி தாயரும் பே(று)உறும் யானும்என்னை உறுகின்ற துன்பங்கள் ஆயிரங்கோடி." (கோயில் நான்மணிமாலை . 30 )

**26.** அறைகூவி நின்றே அமர்உவந்(து) ஆண்ட
இறைவர் பலவர் இறந்தார் - நிறைஓத
நஞ்சமுண்டும் சாவாத நம்பனைப்பொன் னம்பலத்துத்
தஞ்சம்என நெஞ்சேநீ சார்.

**குறிப்புரை** : அமர்= போர். ஆண்ட= மேற்கொண்ட. இறைவர்= கடவுளர் / அரசர்கள். நிறை ஓதம்= நிறைந்த அலைகளுடைய பாற்கடல். நம்பன்= விரும்பத்தக்கவன்.

**பொழிப்புரை** : நெஞ்சமே ! பிறரை அறைகூவி அழைத்து விரும்பிப் போர்மேற்கொண்ட கடவுளர் / அரசர்கள் பலரும் இறந்துபட்டனர். ஆனால், நிறைந்த அலைகள் கொண்ட பாற்கடலில் எழுந்த நஞ்சினை உண்டும் சாவாதவனாய்ப் பொன்னம்பலத்தாடும் விரும்பத்தக்கவனை அடைக்கலமாச் சென்றடைக.

**விளக்கம்** : " விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும் , உண்ணாத நஞ்சு உண்டு இருந்து அருள்செய்குவாய் " ( சிலம்பு. வேட்டுவவரி. )

27. சாரும்பே ரின்பநலம் தாரணியீர் நம்மைவிட்டுப்
பேரும் பிறவிப் பெருந்துன்பம் - யாரும்
மதிக்கும் பெருமான்செய் மாணிக்கக் கூத்தைத்
துதிக்கும்பொன் மன்றம் தொழின்,

**குறிப்புரை** : பேரின்பநலம்= வீடுபேற்றுநலம் .

**பொழிப்புரை** : எத்தகையவரும் மதித்துத் துதிக்கும் கூத்தப்பிரானின் அழகிய திருக்கூத்தைப் பொன்னம்பலத்தில் கண்டு தொழுதால், வீடுபேற்று இன்பநலங்கள் நமக்கு வாய்க்கும், பிறவிப்பெருந்துன்பம் நம்மைவிடோடும்.

28. தொழுதும் துதித்தும் துகளிலன்பு தாஎன்(று)
அழுதுநினை அன்பர் அடைந்தார் - முழுதும்
மறமே புரிவேன் மறலிக்(கு)என் சொல்வேன்
அறமே திகழ்புலியூ ராய்.

**குறிப்புரை** : துகளில்= குற்றமற்ற.

**பொழிப்புரை** : அறத்தின் வடிவமாக விளங்கும் தென்புலியூர்ப் பெருமானே ! நின் அன்பர் அனைவரும் உன்னை வணங்கியும் துதித்தும் குற்றமற்ற அன்பினை நின்பால் எனக்குத்தா என்றுவேண்டி அழுதும் திருவடிப்பேறு - வீடுபேறு பெற்றனர். வாழ்நாள் முழுதும் பாவங்களே செய்தநான் என்னுயிர் கவரவரும் எமனுக்கு ஏதும்சொல்லித் தப்பவியலாது. உன்னருள்தா.

**விளக்கம்** : இறைவன் அறவன் :" அறவாழி அந்தணன் " ( திருக்குறள் )

29. ஆயேன்சி வாகமத்தை ஆய்ந்தார் பணிபுரியேன்
பேயேன்ஆய்ந் தாற்போல் பிதற்றுவேன் - தூயேனும்
அல்லேன்எவ் வா(று)உன்னை ஆய்மலர்கொண்(டு) அர்ச்சிப்பேன்
நல்லாய்பொன் னம்பலவா நான்.

**பொழிப்புரை** : நல்லவனே ! பொன்னம்பலத்தானே ! நான் சிவாகமங்களை ஆராயவில்லை, அவற்றை ஆராய்ந்தவர்க்குத் தொண்டு செய்யவில்லை. ஆனால் பேயேனாகிய நான் அவற்றை ஆய்ந்தவன்போல்

உளறுவேன், தூயவனும் அல்லேன், இந்நிலையில் நன்மலர்கள் கொண்டு உன்னை அர்ச்சிக்கவும் இல்லை. நல்லன செய்ய அருள்.

**30.** நாவிருக்க நீயிருக்க நாமம் பலவிருக்கப்
பாவிருக்க நின்பெருஞ்சீர் பாடிடேன் - பூவிருக்கும்
கொன்றையாய் மன்றிடைநின் கூத்துத் தரிசியேன்
என்(று)ஐயா யான்உய்கு வேன்.

**குறிப்புரை** : பூ= பொலிவு.

**பொழிப்புரை** : ஐயா ! பொலிவார்ந்த கொன்றை சூடியவனே ! நின்னைப் போற்ற என்நாவிருக்க, உனக்கு மிகுதியாகத் திருப்பெயர்கள் இருக்க, நான் இவற்றால் உனது அளப்பரிய பெரும்புகழைப்பாடவில்லை , சிற்சபையில் உனது ஐந்தொழிற் கூத்தினைத் தரிசிக்கவும் இல்லை. நான் ஈடேற்றம் பெறுவது எந்நாளில் ? உன்னைப்பாட, ஈடேற்றம் பெற, அருள்க

31. ஏனோ பலபவம்ஏற்(று) இன்னாவுறல் வேண்டும்
மானோஎன் கண்ணாள் மகிழவே - தேனோதான்
என்னும் பிரான்மன் றிடைசெய் நடங்கண்டு
மன்னும்பே ரின்(பு)அடையா மல்.

**குறிப்புரை** : மானோ= மான்தானோ. கண்ணாள் = கண்களுடைய சிவகாமி அம்மை.

**பொழிப்புரை** : மான்தானோ என்னுமாறு மருண்ட கண்களுடைய சிவகாமியம்மை கண்டு மகிழுமாறு, தேன்தானோ என்னும் சிவபிரான் பொன்னம்பலத்தில் நிகழ்த்தும் ஐந்தொழிற்கூத்தினை கண்டு பேரின்பம் அடையாமல் பற்பல பிறப்பகளில் பிறந்து ஏன்துன்புறவேண்டும் ?

**விளக்கம்** : தில்லை அம்பலவாணனை கண்டு வணங்கின் பிறப்பு அறும், வீடுஉறும் என்க.

**32.** மலநோய் துரக்கும் மலிபவங்கள் மாற்றும்
கலர்காணாது என்றும் கரக்கும் - மலர்இமயக்
குன்றின் முளைத்த கொடிபடர்ந்த வாமத்து
மன்றில் நடிக்கும் மருந்து.

**குறிப்புரை** : மலர்= பொலிவு. கொடி= கொடியாகிய அம்மை. - பார்வதி தேவி. கலர்= சகலர் பிரளயாகலர் விஞ்ஞான கலர் ஆகியோர்.

**பொழிப்புரை** : பொலிவார்ந்த இமயமலையில் தோன்றி , சிவபிரானின் இடப்பக்கம் படர்ந்த கொடியாகிய பார்வதி காணச் சிற்றம்பலத்தில் திருக்கூத்தியற்றும் மருந்து - கூத்தப்பிரான் , நம் மும்மலநோயினை ஓட்டி, மிக்க பிறப்புகளை மாற்றும், மும்மலத்தார் காணவியலாது எந்நாளும் மறைந்திருக்கும்.

33. மருந்தே பவப்பிணிக்கு மன்றத்தில் ஆடும்
அருந்தத் தெவிட்டா அமுதே - பொருந்தார்
புரம்எரித்த முக்கண் புனிதாநிற் பாட
வரம்அடியே னுக்(கு)அருள் வாய்.

**பொழிப்புரை** : பிறவிப்பிணி தீர்க்கும் மருந்தே ! பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றும் அருந்தத் தெவிட்டா அமுதமே ! பகைவரது முப்புரங்களை எரித்தழித்த முக்கண்ணுடைய புனிதனே ! உன்னைப் பாடுதற்கு உரிய வரத்தினை அடியேனுக்கு அருள்க.

34. வாரணிந்த கொங்கை மலைக்குமரி கண்(டு)உவக்கச்
சீரணிந்த மன்றில் திருநடனம் - நீரணிந்த
பெம்மான் புரிவன் பெறும்பே(று) இதன்மேல்என்
அம்மாகண்(டு) ஏத்தல் அழகு.

**குறிப்புரை** : கொங்கைமலைக் குமரி= கொங்கைகளாகிய மலைகளையுடைய உமையவள் / கொங்கை மலைக்குமரி= கொங்கைகளை யுடைய இமயம் பெற்ற குமரி. நீர்= கங்கை.

**பொழிப்புரை** : கச்சணிந்த கொங்கைகளாகிய மலைகளையுடைய உமையவள் கண்டுமகிழச் சிறப்புவாய்ந்த பொன்னம்பலத்தில் கங்கைசூடிய கூத்தப்பிரான் திருக்கூத்தியற்றுவான். அதனைக் கண்டு வழிபடல் அழகுதரும். இதனைக்காட்டிலும் பெரியபேறு வேறில்லை.

**விளக்கம்** : அம்மை குமரி : “ முன்பு உலகீன்ற முகிழ்முலைக்கன்னி “ ( சிதம்பரச் செய்யுட்கோவை. 31. ). “ பவன்பிரம சாரியாகும் பான்மொழி கன்னியாகும் “ ( சித்தி.167. )

35. அழுத மறைமழவிற்(கு) அம்மை முலைப்பால்
பழு(து)அகலத் தந்தபாண்டம் - கழுவுபுனல்
உண்ணும் தவமேனும் உண்டோபொன் னம்பலவா
எண்ணும் அடியேனுக்(கு) இயம்பு.

**குறிப்புரை** : மறைக்குழவி= மறையோதுங் குலத்துத்திருஞானசம்பந்தர். பழுது= பசிநோய். பாண்டம்= பொற்கிண்ணம். எண்ணும்= விரும்பும்.

**பொழிப்புரை** : பொன்னம்பலவனே ! பசியாலழுத மறைக்குலத்துத் திருஞானசம்பந்தரின் பசி தீர, அம்மை தனது முலைப்பாலைச் சுரந்து தந்த கிண்ணத்தைக் கழுவிய தண்ணீரைப் பருகவிரும்பும் அடியேனுக்கு அத்தகுதவம் உண்டா ? கூறு. அஃதில்லையேல் தந்தருள்க.

36. இயலார்ந்த பல்புலவோர் ஏத்தும்இறை வாபெண்
பயலார்ந்த மேனிப் பரமா - மயலார்ந்தோர்
காணாத அம்பலவா கல்நெஞ்சேன் அன்பில்லேன்

நாணா(து) அடிமைஎன்பேன் நான்.

**குறிப்புரை** : இயல்ஆர்ந்த= உழுவலன்பு. . பயலார்ந்த= பாதியிற் கொண்ட.

**பொழிப்புரை** : உழுவலன்புடைய புலவர் பலரும் போற்றும் இறைவா ! உடம்பின் இடப்பாதியில் பெண்ணையுடைய பரமனே ! மனமயக்கமுடையார் காணவியலாத அம்பலவனே ! அன்பற்றவனாம் கல்நெஞ்சனான நான் சிறிதும் நாணமின்றி உனக்கு அடிமை என்றுசொல்லிக்கொண்டிருக்கிறேன்.

**விளக்கம்** : அடிமைப்பட அன்பு இன்றியமையதது என்க.

37. நானே தவமுடையேன் நானே தவமுடையேன்
தேனே அமுதே செழும்பாகே - ஆனாத
செல்வமே என்றுகவி செப்பச்சிற் றம்பலதான்
நல்வரம்தந்(து) ஆண்டமையால் நன்று.

**குறிப்புரை** : நன்று ஆண்டமை= செம்மையாக அடிமைகொண்டமை.

**பொழிப்புரை** : சிற்றம்பலத்தான் எனக்கு நல்லவரமருளிச் செம்மையாக அடிமைகொண்டதால், அவனைத் தேனே, அமுதே, மிக்கவெல்லப்பாகே, குறைவில்லாச் செல்வமே என்று கவிதையால் போற்ற நான் தவமுடையேன் ஆனேன், நான் தவமுடையேன் ஆனேன்.

**விளக்கம்** : " அவனருளாலே அவன்தாள் வணங்கி " என்பதால்தன்னை அவன்தாள் போற்றும்வகை ஆண்டான் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : நானே தவமுடையேன் நானேதவமுடையேன் - உறுதி பற்றிவந்த அடுக்குத்தொடர்.

38 நன்றோ புலவீர் நலமிலாப் பேதையரைக்
குன்றேய்பு யாவென்று கூறுவீர் - கொன்றைமலர்த்
தாமத்தாய் தென்புலியூர்ச் சங்கரா வெற்(பு)அரசி
வாமத்தாய் என்றல் மறந்து.

**குறிப்புரை** : நலம்= உடல்வலிமை. ஏய்= ஒத்த. என்றல்= என்று போற்றல். சங்கரன்= இன்பம் தருபவன்

**பொழிப்புரை** : கொன்றைமலர் மாலையனே ! சிதம்பரத்துச் சங்கரனே ! பார்வதிதேவியை இடப்பாகம் கொண்டவனே ! என்று பரம்பொருளைப் போற்றுவதை மறந்து, உடல் வலிமையில்லாத அறிவற்றவரைக் குன்றுஒத்த தோள்களுடையவன் - வலிமையுடையவன் என்று கூறுதல், புலவர்களே நன்றன்று

**இலக்கணக்குறிப்பு** : நன்றோ - ஓகாரம் எதிர்மறை.

39. மறந்து நினையன்றி வழுத்துமோ என்நா
இறந்து பிறப்பாரை என்றும் - சிறந்ததே

மாங்கனிஉண் வாய்உணுமோ வன்காஞ் சிரங்காய்பொன்
ஓங்கனிகர் மன்றாய் உவந்து.

**குறிப்புரை** : உணுமோ= உண்ணாது. ஓங்கல் + நிகர்= ஓங்கனிகர்.

**பொழிப்புரை** : மாமேருமலை ஒத்தசிறப்புடைய பொன்னம்பலவாணா ! சிறந்த இனிய மாங்கனியைச் சுவைத்தவாய், கசக்கும் கொடியகாஞ்சிரங்காய் உண்ணாது ; அதுபோல, உன்னைப் போற்றிய வாய், உன்னைத்தவிர, இறந்துபிறக்கும் மனிதரை / உயிரினத்தவரான கடவுளரை மறந்தும்கூடப் போற்றாது.

**விளக்கம்** : பரம்பொருளைத்தவிர, பிறதெய்வங்கள் அனைத்தும் செத்துப் பிறக்கும் உயிரினமே. ஆதலின் அவற்றை " மற்றத் தெய்வங்கள், வேதனைப்படும் இறக்கும் பிறக்கும்மேல் வினையும் செய்யும் " ( சித்தி. சுபக். 25 ). என்பதால் உயிர்க்குலத்துடன் அத்தெய்வங்களையும் உட்படுத்தி, இவர் " இறந்து பிறப்பார் " என்றார். ஸ்ரீ குமரகுருபர அடிகள் அத்தெய்வங்களைச் " செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் ' என்றும், சிவபரம்பொருளாகிய முருகப்பிரானை அவற்றுக்கு " மணவாளன் " என்றும் குறிப்பார். ( முத்துக் குமாரசாமி பிள்ளைத், செங்கீரை. 1-5 மகுடம் ) ( உயிர்க்குலத்தைப் பெண்கள் என்பது சைவமெய்யியல் ஆதலின் அவைஅடையவேண்டிய பரம்பொருளை, மணவாளன்= கணவன் என்றார். மேலும் மணம்= நன்னிலை என்றும் பொருள் தருமாதலின். பிறதெய்வங்களின் நன்னிலைகளை அவற்றுக்குத் தந்து ஆள்பவனாதலின் சிவமாம் முருகனை மணவாளன் என்றார் எனினும்ஒக்கும்.

40. உவந்துநினைப் பூசை உஞற்றல் ஒழிந்தேன்
பவம்தொலையு மாறு படரேன் - தவந்தானம்
சிந்தியேன் தென்புலியூர்த் தேவாநின் சேவடிகள்
வந்தியேன் உய்வேன்கொல் மற்று.

**குறிப்புரை** : உஞற்றல்= செய்தல். படரேன்= வாழவில்லை.

**பொழிப்புரை** : சிதம்பரத்துச்சிவமே ! நான் உள்ளமகிழ்வுடன் உன்னைப் பூசிக்கவில்லை; என்பிறவி ஒழியுமாறு வாழவில்லை; தவம் தானம் பற்றிச் சிந்திக்கவில்லை; உனது சேவடிகளை வணங்கவும் இல்லை. இந்நிலையில் நான் உய்வேனோ ?

**இலக்கணக்குறிப்பு** : கொல் - ஐய இடைச்சொல்.

41. மற்(று)என் உறல்வேண்டும் வந்தித்தால் முத்திநலம்
சிற்றம் பலத்தாடும் தேவ(ர்)பிரான் - உற்(று)அருள்வன்
என்றால் விரையார் எவரே மடநெஞ்சே
சென்(று)ஆடல் கண்டுகதி சேர்.

**குறிப்புரை** : கதி= நற்கதி - வீடுபேறு. மடம்= அறியாமை.

**பொழிப்புரை** : கூத்தப்பிரானை வணங்கினால் வேறு என்னபயனடைய

வேண்டும் . அறியாமைவயப்பட்ட நெஞ்சமே ! ஞானசபையில் திருக்கூத்தாடும் அத்தேவர் தலைவன் வந்து அருள்புரிவான் என்றால் யார்தான் விரைந்து செல்லாதவர் ? அனைவரும் செல்வர். நீயும்சென்றுஅவன் திருக்கூத்தினைக் கண்டு வீடுபேறு பெறுக.

**இலக்கணக் குறிப்பு** : மற்று - அசைநிலை.

42. சேரார் பவப்பெருநோய் தீரார்எவ் வா(று)அந்தோ
வாரார்பே ரானந்த வாரிபுகல் - நீரார்ந்த
செஞ்சடையான் ஓரிருவர் சேவிக்க மன்றாடு
மஞ்சுடைய தில்லை வனம்.

**குறிப்புரை** : நீர் - கங்கை. ஓரிருவர்= பதஞ்சலியார் வியாக்கிரபாதர். பேரானந்தவாரி= மிகப்பெரிய இன்பக்கடல்.

**பொழிப்புரை** : பதஞ்சலி முனிவரும் வியாக்கிரபாத முனிவரும் வணங்கவுள்ள கங்கைதங்கிய செஞ்சடையனான அம்பலவாணன், மேகம்தவழும் மன்றில் ஆடும் தில்லைவனத்தை அடையாதவர் பிறவிப்பெருநோய் தீரமாட்டார். இந்நிலையில் அவர்கள் எல்லயற்ற பேரின்பப் பெருங்கடலாகிய வீடுபேறடைதல் எவ்வாறு ? அந்தோ பிறவிப்பயன் இழந்தனரே !

**விளக்கம்** : அந்தோ என்பது அதிசய இரக்கம் குறித்தது.

43. வனம்அடைந்து புன்சருகு வன்காய் கிழங்குண்(டு)
இனன்எதிர்நின்(று) ஓர்கால் எடுத்தும் - கனலிடையே
சேர்ந்தும் தவம்செயல்என் தில்லை மன்றில் எம்பெருமான்
ஆர்ந்தநடம் காணல் அயர்ந்து.

**குறிப்புரை** : இனன் எதிர்= ஞாயிற்றின் எதிரே. ஆர்ந்த= பொருந்திய.

**பொழிப்புரை** : தில்லையம்பலத்தில் பொருந்திய கூத்தப்பிரானின் நடனம் காணச்சோர்ந்து, காட்டினை அடைந்து அற்பச்சருகு, கடினமான காய், கிழங்கு ஆகியன உண்டும்; ஞாயிற்றின் எதிரே ஒருகால்மடித்துஒருகாலூன்றி நின்றும், நெருப்பின் அருகிலிருந்தும் தவம்செய்வதால் என்னபயன் ? பயனில்லை.

44. அயில்வேல் அனுக்கும் அரிமதர்க்கண் பாவாய்
மயில்ஏய்மென் சாயல் மடந்தாய் - குயில்ஏய்இன்
சொல்லாய் எனப்பலகால் சொல்லும்பொன் மன்றாடல்
வல்லாய் எனிற்குறைஎன் வாய்க்கு.

**குறிப்புரை** : அயிவேல்= கூர்மையான வேல். அனுக்கும்=(தோல்வியால்) வருந்தச்செய்யும். அரிமதர்க் கண்= செவ்வரிபடர்ந்த செழித்தகண். ஏய்= ஒத்த.

**பொழிப்புரை** : கூர்மையான வேலினினையும் தன்கூரிய பார்வையால்

வருந்தச்செய்யும் செவ்வரிபடர்ந்த செழித்த கண்களையுடைய அழகியே, மயிலொத்த மென்சாயலுடைய பெண்ணே, குயில் ஒத்த இன்சொல் பேசுகிறவளே என்று பலமுறை சொல்லும் வாயால் பொன்னம்பலத்தில் ஐந்தொழிற் கூத்தாட வல்லவனே என்று கூறினால் அவ்வாய்க்கு என்ன குறைநேரும் ? நிறைநற் பயனே வாய்க்கும்.

45. வாய்மைஅன்பு சற்றுமிலேன் வன்நெஞ்சப் பாறையிடைச்
சேய்மையின்றிப் பூத்துத் திகழுமோ - தூய்மைதிகழ்
குன்றாத பேரன்பர் கோதில்உள வாவிமலர்
மன்றாடு பூந்தா மரை.

**குறிப்புரை** : கோது இல் உளவாவி= குற்றமற்ற மனமாகிய குளம். பூந்தாமரை பூத்துத் திகழுமோ.

**பொழிப்புரை** : தூய்மைவிளங்கும் பேரன்பு குன்றாத உள்ளமாகிய குளத்தில் மலரும் தாமரையாகிய பொன்னம்பலத்தில் ஆடும்பெருமானின் மென்மையான திருவடித்தாமரைகள், வாய்மை அன்பு சிறிதும் இல்லாத எனது வலியமனமாகிய பாறையில் பூத்துவிளங்குமோ ? ( அது பூத்து விளங்க வாய்மையும் அன்பும் இன்றியமையாதன என்றார். )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முற்றுருவகவணி.

46. மறைஎகினம் வான்பறந்தும் வன்றிமண் கீண்டும்
பிறைமுடியும் தாளும் பெறாமல் - நிறைபெருமான்
பற்றாத சிற்றம் பலத்துளெங்கன் நின்றாடும்
முற்றா முலையாய் மொழி .

**குறிப்புரை** : மறை எகினம்= மறைஓதும் அன்னப்பறவையான நான்முகன். வன்றி= பன்றிவடிவெடுத்த திருமால். கீண்டும்= தோண்டியும். பெறாமல்=காணப்பெறாமல். நிறை= எங்கும் நிறைந்த. பற்றாத= சிறிய இடமாகிய. முற்றா முலை= இளமுலை.

**பொழிப்புரை** : இளமுலையுடையவளே ! மறைஓதும் அன்னமான நான்முகனும், நிலத்தைத் தோண்டிய திருமாலும் முறையே திருமுடியும் திருவடியும் காணப்பெறாதவனாக எவ்விடத்தும் நிறைந்த சிவபிரான், சிறிய இடமாகிய பொன்னம்பலத்துள் நிறு ஆடுவது எப்படி ?

**விளக்கம்** : அங்குஇங்கு எனாதபடி எங்கும் சோதியாய் - அருவமாய் எங்கும் நிறைந்தவன் ஆதலின் இருவரும் காணவில்லை. கூத்தப்பிரானாய் உருவுதாங்கினான் ஆதலின் சிறிய இடத்தில் - சிற்றம்பலத்தில் அனைவரும் காண ஆடுகிறான்.

47. மொழியத் தெவிட்டா முதல்வநின்சீர் முற்றும்
மொழியப் புகல்வேனென்(று) உன்னின் - இழிவுடைய

சிற்றெறும்பு வாரிமுற்றும் சேரவுண்ண உன்னாதோ
சற்(று)உரைசிற் றம்பல நாதா.

**குறிப்புரை** : உன்னின்= நினைத்தால். இழிவு= அற்பம்.

**பொழிப்புரை** : சிற்றம்பலவா ! சொல்லச்சொல்லத் தெவிட்டாத உனது சிறப்புகள் முழுவதும் சொல்லநினைத்தால் அது அற்பமான சிற்றெறும்பு கடல்முழுவதையும் ஒருசேர உண்ணநினைப்பது போன்றதாகும். (என்னாலோ எறும்பாலோ இயலாதன அச்செயல்கள் என்க.)

48. தாமரைக்கண் சூன்(று)ஒருவர் தாளிட்டார் மற்றொருவர்
மாமரைக்கண்(டு) ஊன்கண்வைத் தார்இவருள் - ஆம்ஒருவர்ப்
பொன்னடிவைத் தாய்ஒருவர்ப் போக்கினாய் ஆழிகொடுத்து
என்னஅறம் மன்றுடையாய் ஈது.

**குறிப்புரை** : ஒருவர்= திருமால். சூன்று= தோண்டி எடுத்து. தாள்= திருவடி. மற்றொருவர்= கண்ணப்பரான திண்ணனார். மாமரை கண்டு= சிறந்த மான்தோல் மிதியடியால் அடையாளம் கண்டு. ஊன்= தனது ஊனாகிய கண். பொன்னடிவைத்தவர்= கண்ணப்பர். போக்கியது= திருமாலினை.

**பொழிப்புரை** : திருமால், தனது தாமரைஒத்த கண்ணைத் தோண்டி உன் திருவடியில் மலராக இட்டார். திண்ணனார் தனது சிறந்த மான்தோல் மிதியடியால் அடையாளம் கண்டு தனது ஊனாகிய கண்ணை அப்பினார். இவ்விருவருள் கண்ணப்பரை நீ உன் திருவடிக்கீழ் வைத்துக்கொண்டாய், திருமாலுக்குச் சக்கரப்படை தந்து அனுப்பிவிட்டாய் இது அறமல்லவே.

**விளக்கம்** : திருமால் ஆயிரமாவது தாமரை மலராகத் தன்கண்ணை இடந்து திருவடியில் இட்டது தன்னலம் கருதியசெயலாதலின் அவருக்கு ஆழிதந்து அனுப்பினான். திண்ணனார் தன்கண் இடந்து அப்பியது பயன்கருதாதது ஆதலின் வீடுபேறுஅருளினான். எனவே இது அறமேயாம்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் எதிர்நிரல்நிறையணி.

49. ஈதே கருண இறைவாபொன் னம்பலவா
தீதே தமியே(ன்)நனி செய்திடினும் - போதே
அனையநின்பொற் பாதம் அடைந்தபின்னும்
தீய வினையகற்றி ஆளா விடின்.

**குறிப்புரை** : தமியேன் தீதே நனிசெய்திடினும். தமியேன்= அடியேன்.

**பொழிப்புரை** : எங்கும் இருப்பவனே ! பொன்னம்பலவனே ! அடியேன் தீமைகளையே மிகச்செய்தாலும், தாமரைமலரொத்த நின்திருவடிகளை அடைக்கலமாக அடைந்தபின்னும் நீ என் தீயசெயல்களை என்னிடமிருந்து அகற்றி ஆளாவிடின் உன்கருணை அவ்வளவுதானா ? தீவினையகற்றி ஆள்க.

50. விட்டோம் பயனில்லா வீணர் உறவெல்லாம்
தொட்டோம்இன் பம்செய்யும் தொண்டுகளை - நட்டோம்நல்
தொண்டர் பெருங்குழுவைத் தூய நடராசன்
அண்டர்தொழு மன்றம் அடைந்து.

**குறிப்புரை** : நட்டோம்= நட்புக்கொண்டோம். அண்டர்= அண்டத்தார்.

**பொழிப்புரை** : அண்டத்தவர் அனைவரும் வந்து வணங்கும் இயல்பாகவே மலங்கள் அண்டாத தூயவனாகிய கூத்தப்பிரானின் பொன்னம்பலத்தை அடைந்ததால், நற்பயனில்லா வீணர் உறவுகளை விட்டோம், பிறர்க்கு இன்பமேசெய்யும் தொண்டுகள் செய்யத்தொடங்கினோம். நல்லதொண்டர்களின் பெருங்குழுவுடன் விரும்பி நட்புக்கொண்டோம்.

51. அடைந்தார் எவரேனும் ஆனந்த வெள்ளம்
குடைந்தாட வம்மின்கள் கும்பிட்(டு) - உடைந்தோட
நும்பிறவி ஓட்டுமின்கள் என்று நுவலுதல்போல்
அம்பலத்தில் ஆடும் அரன்.

**பொழிப்புரை** : என்னை அடைந்தவர் யாரேயாயினும், வணங்கி உமது பிறவியை உடைந்து ஓடுமாறு செய்யுங்கள் என்று கூறுவதுபோல் அம்பலத்தில் சிவபிரான் திருக்கூத்தியற்றுகிறான். எனவே, அவனது திருக்கூத்தாகிய பேரின்ப வெள்ளத்தில் மூழ்கித்திளைக்க வாருங்கள்.

52. அர(வு)அமைந்த செஞ்சடையான் அம்பலவன் என்னோ
புர(வு)அமைந்த வள்ளன்மை பூண்டும் - இர(வு)அமைந்தே
ஏற்றான் தலைக்கலம்கை எண்ணான்கு அறம்செய்ஓர்
கூற்றாள்உள் நாணம் கொள.

**கூட்டுமுறை** : எண்ணான்கு ..........கூற்றாள், புரவுஅமைந்த .......பூண்டும், உள்நாணம்கொள, அரவு அமைந்த.......... அம்பலவன், இரவுஅமைந்தே தலைக்கலம் கை ஏற்றான். என்னோ.

**குறிப்புரை** : ஓர்கூற்றாள்= இடதுபாதியளாகிய அம்மை.புரவு= காத்தல். இரவு அமைந்தே= பிச்சையெடுக்க. தலைக்கலம்= மண்டையோடாகிய பிச்சைப்பாத்திரம். என்னோ= வியப்புக்குரியது.

**பொழிப்புரை** : முப்பத்திரண்டு அறங்களையும் காஞ்சிபுரத்தில் இருந்துகொண்டு செய்து அண்டம் காக்கும் அம்மை தனது இடதுபாகத்தில் இருக்கவும், அவள்நாணம் கொள்ளுமாறு, நல்லபாம்பினைச் சூடிய செஞ்சடையப்பன் ஆகிய அம்பலவாணன் பிச்சையெடுக்கத் தன்கையில் பிரமனது மண்டையோடாகிய பிச்சைப் பாத்திரம் ஏந்தினான். இது வியப்பபுக் குரியது.

**விளக்கம்** : “ உனக்கு ஆண்டுதோறும், நல்வாய்மை அறம் வளர்க்கும் வித்தாநெல் இருநாழி தருகேம் அந்த, நெல்லாலே இகபரத்தும்

உயிர்ப்பைங்கூழ் தழைகஎன நிறுவல் செய்தார். ( சிவஞானரின் காஞ்சிப் புராணம் தழுவக் குழைந்த. 429 )

53. கொள்ளக் குறையாத கோதில் அருட்கடலே
எள்ளப் படாதபே ரின்பமே - வெள்ளம்
முடித்த சடைமுடியாய் முன்னவா மன்றில்
நடித்தகழல் நாயேற்கு நல்கு.

**குறிப்புரை** : நடித்த கழல்= திருக்கூத்தியற்றிய திருவடி.

**பொழிப்புரை** : எல்லாரும் அள்ளிகொள்ள அள்ளிக்கொள்ளக்குறையாத குற்றமற்ற அருள்வடிவான கடலே ! இகழப்படாத பேரின்பவடிவனே ! கங்கையைச் சூடிய சடைமுடியுடையவனே ! யாவர்க்கும் முன்னவனே ! பொன்னம்பலத்தில் நீ திருக்கூத்தியற்றிய திருவடியை எனக்குத் தந்தருள்.

54. நல்குவாய் என்(று)உன்னை நம்பினேன் அன்பர்உளத்(து)
அல்கும்இருள் ஓட்டும் அவிர்ஒளியே - மல்குதிருச்
சிற்றம் பலவஅருள் செய்யாய் சிறியேன்செய்
குற்றம் குணமாகக் கொண்டு.

**குறிப்புரை** : அல்கு= தங்கிய.

**பொழிப்புரை** : அடியவர் மனத்தில் தங்கிய ஆணவஇருளை ஓட்டி ஒளிரும் ஒளிவடிவனே ! அருளேபெருகிய சிற்றம்பலத்தானே ! கீழான நான் செய்த குற்றங்களைக் குணமாக ஏற்று, அருள்புரிவாய் என்று உன்னை நம்பியுள்ளேன். அருள்புரிக.

55. கொண்டோம்பொன் மன்(று)ஆடும் கூத்தன் கழல்சிரமேல்
விண்தோய் நெடும்துயர்செய் வெம்பிறவி - அண்டர்உள்ளே
நம்பேறு யார்பெற்றார் நாடித் துருவிடினும்
வம்பேறு கொங்கைமட வாய்.

**குறிப்புரை** : வம்பு= கச்சு. நாடித் துருவிடினும்= முயன்று ஆராய்ந்தாலும். மகடூ முன்னிலைச் செய்யுள் இது.

**பொழிப்புரை** : கச்சணிந்த முலைகளுடையவளே ! பொன்னம்பலத்து ஆடும் கூத்தப்பிரானின் திருவடிகளை நான் என்தலையில் விருப்புடனே சூடிக்கொண்டேன். இதனால் வானளவு உயரமான - மிகப்பெரிய - துன்பம் செய்யும் பிறப்புகளையுடைய இவ்வண்டத்தில் வாழ்வாருள் நம்மைப்போல் பேறுபெற்றவர் யாருமில்லை.

**விளக்கம்** : திருவடிசூடிக் கொண்டதால் இறப்பு பிறப்பில்லா வீடுபேறு வாய்ப்பதால், பிறப்பில் உழலும் அண்டத்தவருள் தன்னை ஒத்தாரில்லை என்றார்.

56. வாயார வாழ்த்துவார் மன்னுநடம் கும்பிடுவார்
தோயாஆ னந்தம் துளைகுவார் - ஓயாது
நின்(று)உருகு வார்ஐய நின்அன்பர் யான்ஆர்பொன்
மன்றுபுக நின்தாள் மதித்து.

**குறிப்புரை** ஆனந்தம் தோயா= பேரின்பத்தில் முழுகி. துளைகுவார்= திளைப்பார். நின் பொன்மன்றுபுக யான்ஆர்= உனது பொன்னம்பலத்துள்வர எனக்கு அத்தகுதி இல்லை.

**பொழிப்புரை** : ஐயனே ! நின் அன்பர்அனைவரும் நின்மன்றம் புகுந்து நின்னை வாயார வாழ்த்துவார், பெருமை பொருந்திய நினது திருநடனத்தை வணங்குவார், பேரின்பத்தில் முழுகித்திளைப்பார், இடைவிடாது மனம் உருகுவார். உன்பொன்னம்பலம் புக நான்யார் ? அத்தகுதி எனக்கில்லை.

**இலக்கணக் குறிப்பு** : தோயா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். நின்று - அசைச்சொல் .

57. மதிதவழும் செஞ்சடையும் வான்புலவர் பாடும்
துதிதவழும் பூந்தாளும் தோற்றிக் - கதிதவழும்
அம்பலத்தில் நின்றாடும் அப்பன் அயன்திருமால்
வெம்பிவிண்மண் கீள விடுத்து.

**குறிப்புரை** : புலவர்= ஞானியர். கதி= ஆதரவு. பூ= மென்மை. தோற்றி= தோன்றுமாறு. வெம்பி= நொந்து. கீள= தோண்ட.

**பொழிப்புரை** : நொந்து முடிதேட வானில் அன்னமாகப் பறக்க நான்முகனையும், நிலத்தைத் தோண்டித் திருவடிதேடப் பன்றியாகத் திருமாலையும் அனுப்பிவிட்டு, பிறைதவழும் செஞ்சடையும் சிறந்த ஞானியர் துதிதவழும் திருவடிகளும் தோன்றுமாறு உயிர்களுக்கு ஆதரவுதவழும் பொன்னம்பலத்தில் அப்பன் நிலையாக ஆடுகிறான்.

58. விடஅரவம் சென்னி மிலைந்து புலியும்
படஅரவும் கண்டு பணிய - நடநவில்வோன்
அம்பலம்கண்(டு) ஏத்தும் அதுவே அறிஞர்அடை
செம்பலன்வே றென்நெஞ்சே தேர்.

**குறிப்புரை** : புலி= புலிக்கால் முனிவர். அரவு= பதஞ்சலி முனிவர்.

**பொழிப்புரை** : மனமே ! நல்லபாம்பினைச் சடையில் சூடி, புலிக்கால் முனிவரும் பதஞ்சலிமுனிவரும் கண்டு வணங்கப் பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றுவோனைக் கண்டு வணங்குவதே பிறப்பினால் அடையும் சிறந்தபலன். வேறெதுவுமில்லை என்பதை ஆய்ந்தறி.

59. தேர்ந்(து)உணர்ந்த மெய்ஞ்ஞானச் செல்வர் எலாம்கூடி
வார்ந்தபுகழ் வாயார வாழ்த்தியே - நேர்ந்துநின்தாள்

மன்றடைந்து கும்பிட்டு வாழ்வுற்றார் யான்ஐய
என்(று)அடைவேன் நின்தாள் இணை.

**பொழிப்புரை** : ஐயனே ! மெய்ஞானத்தைத் தேர்ந்து உணர்ந்த ஞானச்செல்வமுடையார் அனைவரும் பொன்மன்றடைந்துகூடி, நினது மிகப்பெரும்புகழை வாயாரவாழ்த்தியும் திருவடியைக் கும்பிட்டும் இறப்பும் பிறப்பும் இல்லாத வாழ்வுபெற்றார்கள். உன்திருவடியை நான் அடைவது எப்போது ? அருள்புரிக.

**விளக்கம்** : திருவடிச்சிறப்பு : " திருவடி யேசிவம் ஆவது தேரில், திருவடி யேசிவ லோகம்சிந் திக்கில் திருவடி யேசெல் கதியது செப்பில், திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே " ( திருமந் . 138 )

60. இணையில்லா நின்னன்பர் எய்தும் பெருவாழ்(வு)
அணையநா யேன்எண்ணின் ஐய - பணையில்
குரண்டம்வான் கங்கைநதி கூடநினை யாதோ
அரண்தவாத் தென்புலியூ ராய்.

**குறிப்புரை** : பணை= பெருமை. குரண்டம்= கொக்கு. அரண்தவா= பாதுகாப்புக் குறையாத.

**பொழிப்புரை** : தலைவனே ! பாதுகாப்புக் குறையாத சிதம்பரத்தானே ! ஒப்பற்ற உன்அடியார் அடையும் பெருவாழ்வினைக் கீழானநான் அனுபவிக்க நினைத்தால், அது பெருமையில்லாத கொக்கு மேலான கங்கையை அடைந்து இன்புற நினப்பது ஒக்கும்.

62. ஆயர் மனையில் அளைதிருடிக் கட்டுண்ட
மாயன்பொன் மன்றம் மருவியும் - தாயனையான்
தன்னைக்கும் பிட்டின்பம் சாரா(து) இனும்துயில்வான்
என்ன புதுமை இது.

**குறிப்புரை** : ஆயர்= இடையர். அளை= வெண்ணெய்.

**பொழிப்புரை** : ஆயர் வீட்டில் வெண்ணெய் திருடியதால் உரலில் கட்டுண்ட கண்ணனான திருமால், பொன்னம்பலத்தை அடைந்தும் தனக்குத் தாயாகவிளங்கும் கூத்தனை வணங்கி ஈடேற்றம் பெறாமல் இன்னும் அங்கு உறங்குவது புதுமையாகும்.

63. இதுவோ பெருமை இரணியமன் றாடும்
விதுவேய் சடில விமலா - மதுவேய்நின்
பொன்இதழிப் பூந்தார் புரிந்தருளாய் செம்பவள
மன்இதழி உய்யும் வணம்.

**குறிப்புரை** : இரணியம்= பொன். விது= மூன்றாம்பிறை. பொன் இதழிப் பூந்தார்= அழகிய கொன்றைமலர் மாலை. மன் செம்பவளம்= பெருமை மிக்க

செம்பவளம். இதழி= உதடுகளுடைய இவள்.

**பொழிப்புரை** : பிறைசூடிய சடையுடன் பொன்னம்பலத்தாடும் விமலனே ! தேன்பொருந்திய உனது அழகிய கொன்றைமாலையை, பெருமைபொருந்திய செம்பவளம் ஒத்த இதழ்களுடைய இவள் வாழுமாறு இவளுக்குக் கொடுத்தருள். கொடாமை உனக்குப் பெருமையன்று.
( அகப்பொருட்சுவை அமைந்தது இது .)

63. வண்ணம் கரிய மணிமிடற்றாய் துன்புறுவேன்
எண்ணம் தெரியா(து) இருக்கின்றாய் - பண்ணைவயல்
ஆர்மன்றத்(து) ஆடும் அரசே நினைஎல்லாம்
ஓர்பெருமான் என்ப(து)எவ்வா(று) ஓது.

**குறிப்புரை** : பண்ணைவயல் ஆர்= நன்செய்நிலம் பொருந்திய

**பொழிப்புரை** : நன்செய் நிலம் மிகச்சூழ்ந்த பொன்னம்பலத்தாடும் அரசே ! நஞ்சினால் கருத்த அழகியதிருக்கழுத்தனே ! நான் துன்பத்தில் ஆழ்ந்துள்ளேன். நீ எனதுஎண்ணம் அறியாமல் இருக்கிறாய். அடிமையின் எண்ணம் அறிந்துஉதவுவதே தலைமைப்பண்பு. இந்நிலையில் உன்னை ஒப்பற்ற தலைவன் என்று எவ்வாறு கூறமுடியும்?

64. ஓதா(து) உணர்ந்த ஒருவர்உண ஞானப்பால்
கோ(து)ஆரா மல்கொடுத்த கோமானே - தீ(து)ஆரா
மன்றாடு மாமணியே மாணிக்க மேஅடியேன்
குன்றாநோய் தீர்த்(து)அடிமை கொள்.

**குறிப்புரை** : ஒருவர்= திருஞானசம்பந்தர். கோதுஆராமல்= குற்றம் பொருந்தாமல். குன்றாநோய்= பிறவி.

**பொழிப்புரை** : குற்றம் பொருந்தாத அம்பலத்தில் ஆடும் மாமணியே ! மாணிக்கமே ! அனைத்தையும் ஓதாது உணர்ந்த திருஞானசம்பந்தர்க்குக் குற்றம்பொருந்தாமல் ஞானப்பாலினைக் கொடுத்த அரசே ! அடியேனது குன்றாப்பிறவி நோயினைத் தீர்த்தருள்.

**விளக்கம்** : குற்றம் பொருந்தாமை= கறந்த நிலையில் / , உண்ணாமுலை என்ற பெயருக்குக் களங்கம் ஏற்படாது பொன்வள்ளத்தில் தந்தமை என்று கொள்ளினும் பொருந்தும்.

65. கொண்டால் எனைஅடிமை கோபிப்ப ரோஅடியார்
தண்டா அருட்பெரிய சாகரமே - கண்டார்
பிரியாப்பொன் மன்றாடும் பெம்மானே தீர்நோய்
எரியாய் வருத்தும் எனை.

**குறிப்புரை** : தண்டா= குறையாத. சாகரம்= கடல். எனை எரியாய் வருத்தும் நோய் தீர்.

**பொழிப்புரை** : குறைவற்ற பெரிய அருட்கடலே ! பார்த்தவர் பிரியவிரும்பாத பொன்னம்பலத்தானே ! என்னை அடிமையாக நீ ஏற்றால் உன் அடியார் சினம்கொள்ளார். எனவே என்னை அடிமைகொண்டு என்னைத் தீயாக எரிக்கும் பிறவிநோயினைத் தீர்தருள்.

66. என்னேநின் உள்ளம் இரங்கா(து) இருக்கின்றாய்
பொன்னே மணியே புகழ்அமுதே - இன்னே
எனைநோய்தீர்த்(து) ஆளின்மன்(று) ஈசா நினக்குப்
பினைவேறுண் டோபெருஞ்சீர் பேசு.

**குறிப்புரை** : எனை= என்னை. பினை= பின்னை - பிறகு.

**பொழிப்புரை** : பொன்னம்பலத்து ஈசனே ! பொன்னே ! மணியே ! அனைவரும் புகழும் அமுதமே ! என்மேல் உன்திருவுள்ளம் இரங்காமல் இருக்கின்றாய். எனது பிறவிநோய் தீர்த்து அடிமைகொண்டால், பிறகு உனக்கு இதைவிடப் பெரும்சிறப்புஏது ? கூறு. எனவே எனைஆள்க.

67. பேசுவேன் நின்பெருஞ்சீர் பேயேனை ஆட்கொள்வாய்
கூசுவேன் மற்றையர்சீர் கூறவே - நேசமொடு
நம்பினரைக் கைவிடுதல் நல்லறமோ மன்றாடும்
எம்பெருமான் நீசற்(று) இசை. .

**பொழிப்புரை** : அம்பலத்தாடும் எம்தலைவனே ! எப்போதும் உனது பெருஞ்சிறப்பையே பேசுவேன். பிறர் சிறப்பைப் பேசக் கூசுவேன். உன்னையே நம்பியுள்ள என்னைக்கைவிடுதல் சிறந்த அறமோ ? நீயே கூறு.

68. இசையார்ந்த தென்தில்லை ஈசாநின் அன்பர்
நசையார்ந்த பாக்கள் நவில்வார் - வசையார்ந்த
நாயேன்அவ் வாறு நவிலும்அன் புள்ளேனோ
தீயேன்என் செய்வேன்நீ செப்பு.

**குறிப்புரை** : இசைஆர்ந்த= புகழ்பொருந்திய. நசை= விருப்பம்.

**பொழிப்புரை** : புகழ்பொருந்திய தென்தில்லை ஈசனே ! உனது அடியவர் உனது புகழ்பொருந்திய பாடல்களால் உன்னைப்போற்றுவர். பழிபொருந்திய கீழானநான் அவ்வாறு கூறத்தக்க அன்பு உள்ளவனா ? தீயவனாகிய நான் என்னசெய்வேன் ! நீயே கூறியருள்க.

69. செப்பும் பலமறையும் சென்(று)ஏத்தும் தில்லைவனத்(து)
ஒப்பும் உயர்வும் ஒருவிநிற்கும் - அப்பனே
நின்அடியேன் துன்புறுதல் நேர்கண்டால் மற்றடியார்
உன்னைஏ சாரோ உரை.

**குறிப்புரை** : ஒருவி= நீங்கி.

**பொழிப்புரை** : போற்றத்தக்க மறைகள்பலவும் தில்லைவனத்துக்குப்

போய்ப் போற்றும் ஒப்போ உயர்வோ யாருமில்லாத அப்பனே ! உனக்கு அடியவனான நான் துன்பப்படுவதை உனது அடியவர் நேரில் பார்த்தால் உன்னைப் பழிக்கமாட்டார்களா ? எனவே என்துன்பம் தீர்த்தருள்.

70. உரையாத பொன்னே ஒளிர்சாணை யிட்டுக்
கரையாத மாணிக்கக் கல்லே - விரையார்ந்த
வார்குழலாள் நோக்கப்பொன் மன்றா(டு) அருட்கடலே
யார்துணைநா யேனுக்(கு) அருள்.

**குறிப்புரை** : உரையாத= மாற்றுக் கூறவியலாத. ஒளிர் மாணிக்கக்கல். விரைஆர்ந்த= நறுமணம் பொருந்திய. வார்= நீண்ட.

**பொழிப்புரை** : மாற்றுக்கூறவியலாது உயர்ந்த பொன்னே ! சாணையில் இடப்பெறாது ஒளிரும் மாணிக்கக்கல்லே ! நறுமணம் பொருந்திய நீண்ட கூந்தலுடைய அம்மை காணப் பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றும் அருட்கடலே ! கீழான எனக்கு உன்னையன்றித் துணையில்லை. நீ அருள்க.

71. அருளே உருவாய் அமைந்(து)இடப்பால் நின்று
பொருள்ஏய்நின் ஆடல் புரிந்து - தெருள்ஏய
நோக்(கு)அம்மை நிற்கும் நுவலாளோ மன்றாடீ
காக்கஎன்றே என்துயரம் கண்டு.

**குறிப்புரை** : பொருள் ஏய்= (ஐந்தொழில் புரியும்) தலைமைபொருந்திய. தெருள் ஏய்= ஞானவடிவாய். புரிந்து நோக்கு= விரும்பிப் பார்க்கும்.

**பொழிப்புரை** :. அருளே தன்வடிவமாய்க் கொண்டு, உனது இடப்பக்கம் இருந்து, உனது ஐந்தொழில்புரியும் தலைமைபொருந்திய திருக்கூத்தினைப் பார்க்கும் ஞானவடிவாய் விளங்கும் அம்மை, நான்படும் துன்பங்களைக் கண்டு, மன்றாடியே ! இவனுக்கு அருள்க என்று பரிந்துரையாளா !

**விளக்கம்** : கூத்தப்பிரான் ஐந்தொழில் புரிகிறவன் - " ஐந்தொழில் நடத்தும் பிரான் "( மீனாட்சிய. பிள்ளை. அம்புலி. 10 ). அம்மை ஞானவடிவள் - " சத்திதன் வடிவேது என்னில் தடையிலா ஞானமாகும் " ( சித்தி. 82 )

72. கண்டும்தே னும்பாலும் காமர் பசுங்கிளியும்
கொண்(டு)உவமா னம்சொல்லக் கூடாத - மண்டுசுவை
என்தாய்ச்சொல் நின்செவிகட்(கு) ஏறாமை என்கொடுமை
மன்றாய் அமரர்தலை வா.

**குறிப்புரை** : காமர்= அழகிய. என்கொடுமை= என்தீவினையே.

**பொழிப்புரை** : அம்பலத்தானே ! தேவர் தலைவனே ! கற்கண்டு, தேன், பால், அழகிய பச்சைக்கிளி ஆகியவற்றை உவமையாகச் சொல்ல அமையாத என்தாயின்சொல் - என்னைப்பற்றிய பரிந்துரை - நினது திருச்செவியில்

ஏறாமைக்குக் காரணம் என்தீவிவையே ஆகும்.

**இலக்கணக்குறிப்பு** : கண்டும் தேனும்............கிளியும் - எண்ணும்மைகள்.

73. வாமான் மறைஆக்கொள் மாதேவா மன்றாடும்
கோமானே எங்கள் குணக்குன்றே - ஏமாந்து
நின்அருளை நாடியே நிற்பேன் அடைந்திலேன்
என்ன வறுமை இயம்பு.

**குறிப்புரை** : வாமான்= தாவிச்செல்லும் குதிரை. வறுமை=பெறாநிலை.

**பொழிப்புரை** : தாவிச்செல்லும் குதிரையாக மறைகளைக் கொண்ட பெருந்தெய்வமே ! அம்பலத்தாடும் அரசனே ! எமக்குவாய்த்த குணக்குன்றே ! நான் உனது அருளையே விரும்பி ஏமாந்து நிற்கிறேன்; அதனை அடையவில்லை. அதனைப் பெறாமைக்குக் காரணம் என்ன கூறு.

74. இயம்ப நனிஇனிக்கும் இன்னமுதே பூஆர்
கயம்சுலவு தில்லைக் கரும்பே - நயம்குலவ
நின்னைப் புகழ நெடும்பாக் கியம்பெற்றேன்
என்ன குறைசொல் எனக்கு.

**குறிப்புரை** : பூஆர்= தாமரைமலர்கள் நிறைந்த. சுலவு= சூழவுள்ள. நயம்= மேன்மை.

**பொழிப்புரை** : சொல்லிய அளவிலேயே இனிக்கும் இனிய அமுதமே ! தாமரைமலர்கள் நிறைந்த குளங்கள் சூழ்ந்த தில்லையிலாடும் கரும்பே ! நான் மேன்மை பொருந்த உன்னைப்பாடும் பேறுபெற்றேன், எனக்குக்குறை யாதுளது சொல் ? எக்குறையுமில்லை.

75. எனக்குநின் பூந்தாள்அன்(பு) எய்தாதது என்கொல்
மனக்(கு)இன்பு அருளும் மணியே - புனக்கொன்றைப்
பூந்தாமா மன்றாடும் புண்ணியா வான்அமரர்
ஏந்தால் கயிலை இறையே.

**குறிப்புரை** : பூந்தாள்= மென்மையான திருவடிகள். என்கொல்= ஏன். புனம்= கொல்லை. தாமா= மாலையணிந்தவனே. ஏந்தால்= அரசனே.

**பொழிப்புரை** : நினைக்கும் மனத்திற்கு இன்பம்தரும் மணியே ! கொல்லையிலுள்ள கொன்றைமலர் மாலை அணிந்தவனே ! அம்பலத்தாடும் புண்ணியனே ! இந்திரன் முதலிய சிறந்த தேவர்கட்கெல்லாம் அரசனே ! கயிலைக் கடவுளே ! உனது மென்மையான திருவடிகளிடத்து எனக்கு அன்பு பொருந்தாத காரணமென்ன ?

76. ஏதோநின் நாமம் இயம்பத் தெரிந்திலேன்
தீ(து)ஓவு பாடல்எங்ஙன் செப்புவேன் - மாதோடு
நின்றுதில்லை மன்றாடும் நின்மலா நின்அருளை

என்றுபெறு வேன்தீய னேன்.

**குறிப்புரை** : ஏது= செல்வம். தீதுஓவு= தீதற்ற.

**பொழிப்புரை** : செல்வமாக விளங்கும் உனது திருப்பெயரைச் சொல்லவும் அறியேன். எனவே உன்னைப்பற்றிய தீதற்ற பாடல்களை எவ்வாறு கூறுவேன் ? அருள்தரு சிவகாமிஅம்மையுடன் பிரியாது தில்லை அம்பலத்தில் திருக்கூத்தியற்றும் இயல்பாகவே மலமில்லாதவனே ! தீயனான நான் உன்னருளைப் பெறுவது எந்நாள் ?

**இலக்கணக்குறிப்பு** : ஏதோ - ஓகாரம் அசைநிலை.

77. ஏனக்கொம்(பு) என்றும் இலங்கும் மணிமார்பா
கூனற் பிறைவேணிக் கோமானே - கானத்(து)
உறைவேடர் கோமான் உரைக்கும் இன்சொல்லோ
நிறைமன்றத் தாய்என்சொல் நிற்கு.

**குறிப்புரை** : ஏனக்கொம்பு= பன்றியின்பல். வேடர் கோமான்= கண்ணப்பர் ஆன திண்ணனார்.

**பொழிப்புரை** : பன்றியின்பல் அணியாகவிளங்கும் அழகிய மார்பா ! மூன்றாம்பிறையணிந்த தலைவனே ! அருள்நிறைந்த பொன்னம்பலத்தானே ! என்சொற்கள் உனக்கு, காட்டில்வாழ் வேடுவர்தலைவனான திண்ணனார் கூறிய இன்சொற்களோ ? அத்தகையன இல்லை.

**விளக்கம்** : குடுமிதேவர் வலத்திருக்கண்ணில் குருதி கண்டு " யாரிது செய்தார் ? என்று எழுந்ததுமுதல், இடது திருக்கண்ணிலும் குருதிகண்டு , " மற்றிதனுக்கு அஞ்சேன், மருந்துகை கண்டேன், இன்னுமுண்டு ஒருகண் அக்கண்ணை இடந்து அப்பி ஒழிப்பேன் " என்றதுவரையிலானவை திண்ணனார் அன்புச்சொற்கள்.

78. நின்னைப் பிதாவென்றும் நின்வாமத்(து) ஏய்ந்தமலைப்
பொன்னைஅன்னை என்றும் புகன்றமறை - என்னை
ஒழித்துச்சொல் லிற்றோ உவந்துபொன்மன்(று) ஆடும்
சுழித்தபுனல் செஞ்சடையாய் சொல்.

**குறிப்புரை** : வாமம்= இடப்பாகம். ஏய்ந்த= பொருந்திய. என்னை ஒழித்து= என்னை உமதுமகன் என்று கூறாமல்.

**பொழிப்புரை** : பொன்னம்பலத்தில் மகிழ்வுடன் திருக்கூத்தியற்றும் நீர் சுழித்த கங்கையுடைய செஞ்சடையனே ! உன்னை உயிர்களுக்கெல்லாம் அப்பன் என்றும், உன்இடப்பாகம் பொருந்திய பொன்போன்றவளை அன்னை என்றும் கூறிய மறைகள், என்னை மகனென்று கூறாமல் விட்டனவா ? குறிப்பால் மகன் என்று உணர்த்தியுள்ளன. மகனாம் எனக்கு அருள்க.

**விளக்கம்** : " யான் உனக்கு மகனலனோ ? நீஎனக்கு வாய்த்த தந்தையலையோ " ( திருவருட்பா )

79. சொல்லச் சுருங்காத தூயபுக ழாய்மதனை
வெல்லத் திறந்த விழியுடையாய் - கொல்லுமுனைச்
சூலத்தாய் தென்தில்லைத் தொன்னகராய் நற்கரக
பாலத்தாய் நாயேனைப் பார்.

**குறிப்புரை** : நல் கர கபாலத்தாய்= நன்மைஅருளும் நின் கையில் நான்முகனின் மண்டையோட்டினை ஏந்தியவனே.

**பொழிப்புரை** : சொல்வதனால் இனிச்சொல்லவேண்டியவற்றில் குறைவற்றுவிளங்கும் தூய புகழுடையவனே ! மன்மதனை வெல்லத் திறந்த நெற்றிக்கண்ணனே ! கொல்லும் கூரியநுனியுடைய சூலம் ஏந்தியவனே ! அழகியதில்லையாகிய தொன்மையான நகரில் உள்ளவனே ! நன்மைஅருளும் நின்கையில் நான்முகனின் மண்டையோட்டினை ஏந்தியவனே ! என்மேல்உன் கடைக்கண் சாத்தியருள்.

80. பார்சூழ்தென் தில்லைப் பரமா செழுங்கொன்றைத்
தார்சூழும் செஞ்சடிலச் சங்கரா - சீர்சூழ்ந்த
நின்அடியார் ஏத்தி நிகழ்த்தியிடு நின்செய்ய
பொன்னடிக்கு யான்ஆர் புகல்.

**குறிப்புரை** : பார்சூழ்= உலகவர் மொய்த்து வணங்கும். நிகழ்த்தியிடு= கூறும். யான் ஆர்= நான் எத்தகுதியுடையவன். புகல்= நீயே கூறு.

**பொழிப்புரை** : உலகவர் மொய்த்து வணங்கும் மேலானவனே ! வளமான கொன்றைமாலை சூடிய செஞ்சடையுடைய சங்கரனே ! சிறப்புமிக்க உனது அடியவர் போற்றிக்கூறும் உனது செம்மைநலம் அருளும் அழகிய திருவடிகட்கு நான் எவ்வகைத் தகுதியுடையவன் ? நீயே கூறியருள்.

81. புகலுமறை ஏத்தும் பொதுநடிக்கும் எம்மான்
இகலும் மதனை எரித்தும் - அகம்மகிழ
வாமத்து மின்கொண்டாய் மன்னுதுற வோர்உன்னைக்
காமங்கொண்(டு) ஏத்தல்என்ன காண்.

**குறிப்புரை** : புகலும்= அனைவரும் போற்றும். பொது= அம்பலம். இகலும்= பகைத்த.

**பொழிப்புரை** : அனைவரும்போற்றும் மறைகள் துதிக்கும் அம்பலத்தில் திருக்கூத்தியற்றும் எம்தலைவனே, உன்னைப்பகைத்த மன்மதனைஎரித்த பின்னும், உன்மனம் மகிழ இடப்பாகத்தில் அம்மையைக்கொண்டாய். எனினும் பெருமை பொருந்திய துறவியர் உன்மேல் அன்புகொண்டு உன்னைப் போற்றுவது என்ன வியப்பு.

**விளக்கம்** : இறைவன், போகவடிவும் யோகவடிவும் கொண்டகாரணம்; கேவலத்திற் கிடந்த உயிர்கள், உடம்பு கருவிகள் உலகு துய்ப்புப் பெறப்போகவடிவும், அவற்றின் மலம்கழிக்க வேகவடிவும்,அவை முத்திபெற

யோகவடிவும் கொண்டது உயிர்க்குல நலத்தின் பொருட்டேயாதலின் " மன்னுதுறவோர் அவன்மேல் காமங்கொண்டு ஏத்தினர் " என்றார். இதனைப் " பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர், விண்பாலி யோகெய்தி வீடுவர் காண் " என்ற திருவாசகத் திருச்சாழல் ( 9 ) பகுதியும், " மங்கையோடிருந்தே யோகுசெய்வானும் " என்ற கங்கைகொண்டசோழேச்சரம் .திருவிசைப்பா ( 11 ) பகுதியும் " போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார், யோகியாய் யோகமுத்தி உதவுதல் அதுவும் ஓரார், வேகியானாற்போல் செய்த வினையினை வீட்டல் ஓரார் " என்ற சித்தியார்ப் பகுதியும்( 70 ) உணர்த்தும் ".

82. காண்போர்க்கு வீடளிக்கும் கற்பகமே நின்துதிக்கும்
மாண்போர்க்(கு) அடைபயனும் மற்றுண்டோ - பூண்பாரக்
கொங்கைஉமை காணமன்றில் கூத்தாடும் கோமானே
செங்கைஅனல் ஏந்தும்அர சே.

**பொழிப்புரை** : அணிகலன் அணிந்த பருத்த கொங்கைகளையுடைய சிவகாமியம்மை காண அம்பலத்தில் திருக்கூத்தியற்றும் கோமானே ! செங்கையில் அனலினை ஏந்தும் அரசே ! உன்னைக் காண்பவர்க்கு வீடுபேறளிக்கும் கற்பகமே ! உன்னைக் கண்டு வணங்கும் பண்பாளர் அடையவேண்டிய பயன் இதைத்தவிர வேறில்லை.

83. சேஏறி அன்பர்முனம் செல்லும்அர சேவேத
மாஏறிப் பாண்டியனை வாழ்வித்தாய் - பூஏறி
வண்டுதுவைக் கும்சோலை மன்றாடு மாமணியே
அண்டும்எனை ஆடல்குறை யா.

**குறிப்புரை** : சே= விடை. வேதமா= வேதமாகிய குதிரை ( திருவிளையாடல்புராணம் நரியைக்குதிரையாக்கிக் கொண்டுவந்தது.) துவைக்கும்= பருகும். அண்டும்= உன்னை அண்டிய. ஆடல் குறையா= ( ஐம்புலன்களின் ) ஆளுகை. குறையா= குறையவில்லை.

**பொழிப்புரை** : விடைஇவர்ந்து அடியவர் முன்செல்லும் அரசனே ! நீ மாணிக்கவாசகர்க்காக வேதமாகிய குதிரைஏறி வந்து வாதவூரர்க்கு வாழ்வு தந்தாய். பூக்களில் அமர்ந்து வண்டுகள் தேன்பருகும் சோலைகளுடைய அம்பலத்தாடு மணியே ! உன்னை அண்டிய என்னை வருத்தும் ஐம்புலச் சேட்டைகள் குறையவில்லையே ! அருள்புரிக.

84. ஆத்தி மரத்தின் அடியில்நீ சென்(று)இருந்(து)
ஏத்துதொண்டர் ஈன்ற இளஞ்சேயைக் - காத்தல்ஒழிந்(து)
ஈர்ந்(து)ஆக்கச் செய்தாய்மன்(று) ஈசாநின் ஓர்பாகம்
சேர்ந்தாள் பொறுத்தாளோ செப்பு.

**குறிப்புரை** : தொண்டர்= சிறுத்தொண்டர். ஈர்ந்து= அரிந்து.

**பொழிப்புரை** : அம்பலத்து ஆடும் ஈசனே ! ஆத்திமரத்தின் கீழே இருந்து உன்னைவணங்கிய சிறுத்தொண்டரின் இளஞ்சிறுவன் சீராளனைக் காப்பாற்றாது அரிந்து கறிசமைக்கச் செய்தாய். உன்செயலை உன்இடப்பாகம் கொண்ட அம்மை எப்படிப் பொறுத்துக்கொண்டாள் ? சொல்.

85. செம்பொன் வரைவளைத்துத் தீயர் புரம்எரித்தாய்
அம்பொன் மன் றத்(து)என்றும் ஆடினாய் - வம்(பு)ஒன்று
கொம்மை முலைப்பரவை கூடத்துத் தூதுசென்றாய்
அம்மைஊ டிற்செல்வார் ஆர்.

**குறிப்புரை** : செம்பொன்வரை= மாமேருமலை. தீயர்= முப்புர அசுரர் - தாரகாட்சன், வித்யுன்மாலி வாணாசுரன். புரம்= கோட்டைகள். வம்பு= கச்சு. கூடம்= வீடு.

**பொழிப்புரை** : பெருமானே ! நீ மாமேருமலையை வில்லாக வளைத்து முப்புரஅசுரர்களின் கோட்டைகளை எரித்தாய், அழகிய பொன்னம்பலத்தில் என்றும் கூத்தாடினாய், சுந்தரர்க்காக கச்சணிந்த பருத்த கொங்கைகளுடைய பரவையாரின் வீட்டுக்குத் தூதுசென்றாய். இவற்றுக்காக உன் உமையவள் ஊடல்கொண்டால் உன்பொருட்டு அவளிடம் தூதுசெல்பவர் யார் ?

**விளக்கம்** : ஊடியோரிடைத் தூதுசெல்பவர் அவர்களைவிட மிகவும் உயர்ந்தவராதல் வேண்டும். உங்களைவிட உயர்ந்தவர் யாருமில்லையாதலின் உம்பொருட்டுத் தூதுசெல்வார் யார் என்றார்.

86. ஆர்ஏந்து செஞ்சடையாய் ஆணிப்பொன் மன்றாடீ
கூர்ஏந்து சூலமுதல் கொண்டிருந்தும் - ஏர்ஏந்து
சித்தசனைக் கண்ணில் திரிபுரத்தை மூரலில்தீ
உய்த்(து)எரித்த காரணம்என் ஓது.

**குறிப்புரை** : ஆர்= ஆத்திமலர். ஆணிப்பொன்= மாற்றுயர்ந்த பொன். ஏர்= அழகு. சித்தசன்= மன்மதன். மூரல்= புன்முறுவல்.

**பொழிப்புரை** : ஆத்திமலர் சூடிய செஞ்சடையனே ! மாற்றறியாப் பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றுகிறவனே ! நீ கூர்மைமிக்க சூலம் முதலிய படைகளைப் பெற்றிருந்தும், அவற்றைப் பயன்படுத்தாமல் அழகுபொருந்திய மன்மதனை நுதற்கண் தீயாலும், முப்புரங்களையும் புன்முறுவல் தீயாலும் எரித்த காரணம் என்ன ? கூறுக.

**விளக்கம்** : தீயொன்றே பொருள்களை நீறாக்கவல்லது. சூலம் முதலியன கொல்லுமேயன்றி நீறாக்கமாட்டா. நீறாக்கும் நோக்கினால் நுதற்கண், புன்முறுவல் தீயால் எரித்தார்.

87. ஓதாது நின்புகழை ஓதத் துணிந்(து)எழுந்தேன்
கோதாரும் என்புன்மை கொண்(டு)அருளாய் - போ(து)ஆரும்
வேணிப்பொன் கொன்றையுடன் வெள்எருக்கும் கொண்டனையே
ஆணிப்பொன் அம்பலத்துஐ யா .

**குறிப்புரை** : ஓதாது= உரிய கல்வியறிவில்லாமல். கோது ஆரும்= குற்றம் பொருந்திய. புன்மை= அற்பநிலை. கொண்டு= ஏற்று. வேணி= சடை.

**பொழிப்புரை** : மாற்றறியாப் பொன்னம்பலத்தில் ஆடும் தலைவனே ! நீ மலர்கள்சூடிய சடையில் சிறந்தகொன்றைமலருடன் வெள்ளெருக்க மலரையும் சூடிக்கொண்டாய் ஆதலின், உரிய கல்வியறிவில்லாமல் உனது புகழ்ஓதத்துணிந்து முடிவுசெய்த என் குற்றம்பொருந்திய அற்பநிலையையும் ஏற்று எனக்கு அருள்புரிவாயாக.

**விளக்கம்** : எருக்கமலரையும் இறைவன் ஏற்பான் : " புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை கடவுள் பேணேம் என்னா " ( புறம். 106 )

88. ஐயாற்றின் நாவரசர்க்(கு) அம்கயிலைக் காட்சிதந்தாய்
நையாற்றில் என்னை நையவிடா(து) - ஐயா
திருத்தில்லை மேவும் சிவனே எனைஆள்
கருத்(து)இல்லை கொல்லோ கரை.

**குறிப்புரை** நைஆறு= துன்புறும் வழி. கரை= சொல்லியருள்க.

**பொழிப்புரை** : தெய்வீகத் தில்லையில் திருக்கூத்தியற்றும் சிவனே ! திருவையாற்றில் அப்பரடிகட்குக் கயிலைக்காட்சி அருளினாய். நான் துன்புறும்வழியில் சென்று துன்புறாது என்னை ஆண்டருளும் கருத்து உனக்கு இல்லையோ சொல் ? ஆண்டருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கொல் - ஐயவிடைச்சொல். ஓகாரம் -அசைநிலை.

89. கறைமருவு கண்டத்தன் காமர் நதியோடு
பிறைமருவு செவ்வேணிப் பெம்மான் - நறைமருவு
சோலைசூழ் தென்தில்லைத் தொன்னகரான் வெள்ளென்பு
மாலையான் ஈவன் வரம்.

**குறிப்புரை**: கறை= நஞ்சின்கறை. நறை= தேன். வெள்ளென்பு= வெண்மையான எலும்பு. வரம்ஈவன். வரம்= மேன்மை.

**பொழிப்புரை** : நஞ்சின் கறையுடைய திருக்கழுத்தனும், அழகிய கங்கையுடன் மூன்றாம் பிறைபொருந்திய செஞ்சடையனும், தேன்சுரக்கும் சோலைசூழ்ந்த அழகிய தில்லையாகிய தொன்மையான நகரினனும், வெண்மையான எலும்புமாலை அணிந்தவனுமாகிய அவன், எனக்கு மேன்மை அருள்வான்.

**விளக்கம்** : என்புமாலை : " நரம்போடு எலும்பணிந்து கங்காளம் தோள்மேலே காதலித்தான் " ( திருவா. 265 )

**90.** வரம்ஏந்த தென்தில்லை மன்னாமண் உண்ட
சரம்ஏய்ந்த செங்கைத் தலைவா - புரம்ஏய்ந்த
நின்வாய் நெருப்பிற்கு நேராகி நிற்காதோ
என்வாய் பவமாம் எயில்.

**குறிப்புரை** : ஏய்ந்த= பொருந்திய. மண்ணுண்ட சரம்= கண்ணனாய் மண்உண்ட திருமாலாகிய அம்பு. வாய்= புன்சிரிப்பு. நேராகி நிற்காதோ= இலக்காகி என்னைவிட்டு ஒடாதோ - அழியாதோ. பவமாம் எயில்= பிறவியாகிய கோட்டை. பவமாம்எயில் நேராகி நிற்காதோ.

**பொழிப்புரை** : மேன்மைபொருந்திய அழகிய தில்லையரசே ! முப்புரம் எரிக்க, மண்ணுண்ட அம்பாகிய திருமாலாகிய அம்பினை ஏந்திய தலைவா ! முப்புரம் எரித்த நின்புன்சிரிப்பாகிய நெருப்பிற்கு இலக்காகி, எனது பிறவியாகிய கோட்டை அழியாதா ! அழித்தருள்.

**விளக்கம்** : மண்ணுண்டசரம் - " நாண்என்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம் - பாணந்தான், மண்தின்ற பாணமே " ( தனிப்பாடல். காளமேகம் + இரட்டைப் புலவர்.

**இலக்கணக்குறிப்பு** : பவமாம் எயில் - உருவகம்.

**91.** எயில்சூழ்ந்த தென்தில்லை ஈசா இமய
மயில்சூழ்ந்த வாமத்து வள்ளால் - அயில்சூழ்ந்த
சூலப் படையாய்நின் தொல்புகழ்சொல் என்னைஅயன்
மாலப்படைப் பானோ மற்று.

**குறிப்புரை** : இமயமயில்= பார்வதி தேவி. அயில்= கூர்மை. மால= மயங்கிக் கெட. மற்று= மறுபடியும்.

**பொழிப்புரை** : மதில்சூழ்ந்த அழகிய தில்லைஈசனே ! பார்வதி தேவியணைந்த இடப்பாகமுடைய வள்ளலே ! கூரிய சூலப்படையானே ! உனது தொன்மையான புகழையே சொல்லிக்கொண்டிருக்கும் என்னை, நான்மயங்கிக் கெடுமாறு நான்முகன் மறுபடியும் பிறப்பிப்பானோ ? சொல்லியருள்.

**92.** மற்றும் பெறும்பயனென் வன்நெஞ்சே பூஞ்சோலை
சுற்றும்தென் தில்லைச் சுடர்மன்றில் - உற்று
நடமாடும் எம்பெருமான் நற்குஞ் சிதத்தாள்
திடம்ஆரச் சேவை செயின்.

**குறிப்புரை** : குஞ்சிதத்தாள்= தூக்கிய திருவடி. திடம் ஆர= மிக்க மனஉறுதியுடன்.

**பொழிப்புரை** : உருகாத வலிய மனமே ! பூஞ்சோலைகள் சூழ்ந்த அழகிய தில்லைப் பொன்மன்றில் பொருந்தித் திருக்கூத்தாடும் தலைவனின்

தூக்கிய திருவடிகட்கு, மிக்கமனவுறுதியுடன் தொண்டாற்றினால் அதைவிட அடையும்பயன் வேறுஎன்ன உளது ?

93. செய்யில் வளைமுரலும் தென்தில்லைத் தொன்நகரோ
மையில் கயிலாய மாமலையோ - பொய்யில்லா
வேதமுடி யோதீயேன் வெய்யஉள மோபரமன்
ஏதம்இன்றி வாழும் இடம்.

**குறிப்புரை** : செய்= நன்செய் நிலம். வளை முரலும்= சங்குகள் ஒலிக்கும். மை= குற்றம். வேதமுடி= உபநிடதம். ஏதம்= குற்றம் / தீது.

**பொழிப்புரை** : பரம்பொருளாகிய நீ வாழுமிடம்; நன்செய் நிலத்தில் சங்குகள் ஒலிக்கும் அழகிய தொன்மையான தில்லை நகரோ; குற்றமில்லாத சிறந்த திருக்கயிலை மலையோ; பொய்யில்லாத உபநிடதமோ; தீயேன் ஆகிய எனது மனமோயாது ? எங்கும் நீயே உள்ளாய்.

94. இடத்துமான் கொண்ட இறைவா உதீசி
வடத்துநிழல் மேய மருந்தே - தடத்துக்
கயல்பாயும் தில்லைக் கருத்தா உளத்து
மயல்பாயா வண்ணம்அருள் வை.

**குறிப்புரை** : இடத்து= இடதுகை. மான்= மான்கன்று / சிவகாமியம்மை. உதீசி= வடதிசை. வடம்= கல்லால மரம். மருந்தே= அமுதமே. தடம்= குளம். கருத்தன்= தலைவன். மயல்= மனமயக்கம்.

**பொழிப்புரை** : இடதுகையில் மான்கன்றினை ஏந்திய இறைவனே ! வடதிசைக்கண் உள்ள கல்லாலமரத்தடியில் நால்வர்க்கு உபதேசித்தஅமுதே ! குளங்களில் கெண்டைமீன்கள் துள்ளிப்பாயும் தில்லையில்உள்ள தலைவனே ! என்மனத்தில் மயக்கம் ஏற்படாதவாறு அருள்புரிக.

95. வையம் பரவ வளரு மணிமன்றில்
ஐயன் கழல்நிறுவி ஆனந்தம் - செய்யும்
திருக்கூத்தை முன்னின்று சேவிக்கும் மெய்அன்
பருக்(கு)ஊத்தை மெய்யில்லை பார்.

**குறிப்புரை** : நிருவி= ஊன்றி. ஆனந்தம் செய்யும்= ஆனந்தக் கூத்தாடும். ஊத்தை= அழுக்கு - புலால். பார்= கண்கூடு.

**பொழிப்புரை** : உலகோர் வணங்க அருள்வளரும் அழகிய அம்பலத்தில் தலைவனாகிய பெருமான் வலது காலையூன்றி இடதுகாலை எடுத்து ஆடும் ஆனந்தத்திருக்கூத்தைக் கண்டு வணங்கும் மெய்யன்பருக்குப் புலாலுடம்பு / பிறப்பு இல்லை. இது கண்கூடாகும்.

96. பாரிடங்கள் சூழப் படர்வனத்தில் நின்றாடும்
நீர்இடம்கொள் செஞ்சடில நின்மலனார் - ஏரிடம்கொள்

வாமத்தாள் காண மணிமன்றுள் நின்றாடும்
ஏமத்தார் ஏத்த இயைந்து.

**குறிப்புரை** : பாரிடம்= பூதகணம். படர்வனம்= அகன்ற தில்லை வனம். நீர்= கங்கை. ஏர்= அழகு. இடம்= பெருமை. வாமத்தாள்= இடப்பாகம் கொண்ட அம்மை. ஏமத்தார்= திருநீறு அணிந்தவர்கள் - அடியவர். வாமத்தாள் ஏமத்தார் இயைந்து காண ஏத்த.

**பொழிப்புரை** : பூதகணங்கள் சூழ, அகன்ற தில்லைவனத்தில் கங்கை இடம்பெற்ற செஞ்சடையனும் இயல்பாகவே மலமில்லாதவனுமாகிய பெருமான், அழகும்பெருமையுமுடைய இடப்பாக்கம் கொண்ட அம்மையும், திருநீறணிந்த அடியவரும் ஒருசேரக் காணவும் ஏத்தவும் நிலையாக ஆடுவான்.

**விளக்கம்** : நிலையாக ஆடுதலாவது, இடையீடின்றி - தொடர்ந்து ஐந்தொழில்புரிதல்,

97. இயம்பப் புகின்மன்றத்(து) எம்மான் பெருமை
நயம்பப்பச் சொல்லல் நலமே - கயம்பப்பும்
புல்லோர் பெருமை புகலும் கனவிடத்தும்
சொல்லோம்சொல் லோமே துணிந்து.

**குறிப்புரை** : பப்ப= பரவ. கயம்= கயமை - கீழ்க்குணம். புகலும்= உறக்கத்தாய்ச் சொல்லப் பெறும்

**பொழிப்புரை** : அம்பலத்தடும் எம்தலைவனது பெருமையைச்சொல்லப் புகுந்தால் அதனைஅவனது நயமெலாம் பரவுமாறு சொல்வதே நலம். கயமைபரவிய அற்பரது சிறுமைகளைப் பெருமைகளாகப் பரவுமாறு உறக்கத்துக் கனவிலும் துணிந்து சொல்லோம், சொல்லோம்.

**விளக்கம்** : புல்லோர் பெருமை புகலல் : " கல்லாத ஒருவனைநான் கற்றாய் என்றேன் காடறியும் அவனைநா டாள்வாய் என்றேன், பொல்லாத ஒருவனைநான் நல்லாய் என்றேன் போர்முகத்தை அறியானைப் புலியே என்றேன், மல்லாரும் புயமென்றேன் சூம்பல் தோளை வழங்காத கையனைநான் வள்ளல் என்றேன் " ( தனிப்பாடல்..... இராமச்சந்திர கவிராயர் ) " மிடுக்கி லாதானை வீம னேவிறல் விசயனே வில்லுக்கு இவன் என்று , கொடுக்கி லாதானைப் பாரியே என்று கூறினும் " ( சுந்தரர். திருப்புகலூர். 2 )
**இலக்கணக்குறிப்பு** : சொல்லோம் சொல்லோமே - தெளிவுபற்றிய அடுக்கு.

98. துணிந்தமறை ஆகமங்கள் சொல்லப்பொன் வேணி
பணிந்த அரவம் அசையத் - திணிந்தஒளி
மன்றாடும் ஆனந்த வார்மதுவை உண்(டு)உவக்கும்
கன்றுஆடும் கைஉமையாள் கண்.

**குறிப்புரை** : துணிந்த= தெளிந்த. பணிந்த= படமடுத்ததால் வளைந்த.

திணிந்த= செறிந்த. ஆனந்த வார்மது= பேரின்பம்பெருகும் தேன். உமையாள் கைகண் கன்றுஆடும் = உமையவளின் கையில் உள்ள மான்கன்று துள்ளும்.

**பொழிப்புரை** : தெளிந்த வேதங்களும் ஆகமங்களும் புகழ, அதுகேட்டுச் செஞ்சடையில் படமெடுத்த நாகம் அசைய, செறிந்த ஒளியுடைய அம்பலத்தில் பெருமான் திருக்கூத்தியற்றுவதால் பெருகும் இன்பத்தேனை, உமையம்மை கையில் உள்ள மான்கன்று பருகித் துள்ளிக்குதிக்கும்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

99. கண்மணியே முக்கண் கரும்பே இருளகற்றும்
விண்மணியே என்(று)அன்பர் மேவவே - பெண்மணியாம்
பாகத்தாள் காணப் பரமன் மணிப்புயப்பூண்
நாகத்தான் செய்யும் நடம்.

**குறிப்புரை** : விண்மணி= ஞாயிறு. மணிப்புயம்= அழகியதோள். பூண்நாகத்தான்=அணிகலனாக நாகம் அணிந்தவன்.

**பொழிப்புரை** : கண்ணின் கருமணியே ! மூன்றுகண்களுடைய கரும்பே ! உலக இருள்ஓட்டும் ஞாயிறே என்றுகூறி அன்பர்கள் குழுமவும், பெண்களுள்சிறந்தவளும் இடப்பாகம் உடையவளுமான அம்மைகாணவும், தனது அழகிய தோள்களில் அணிகலனாக நாகமணிந்த கூத்தப்பெருமான் திருக்கூத்தியற்றும்.

**விளக்கம்** : " நற்கரும்பு முக்கண் கரும்பு என்னும் " திருவாரூர் நான்மணி. 34.) " ஆனந்தத் தேன், காட்டுகின்ற முக்கண் கரும்பு ஒன்று " ( சிதம்பர மும்மணிக் . 15 )

100. நடலை அறுத்தோம் நமற்(கு)அஞ்சோம் பாசக்
கடலை எளிதில் கடந்தோம் - திடஅன்பு
பெற்(று)அம் பலமடைந்தோம் பேணுவோம் எம்பெருமான்
சிற்றம் பலம்வணங்கும் சீர்.

**குறிப்புரை** : நடலை= துன்பம். வணங்கும் சீர் பேணுவோம்.

**பொழிப்புரை** : உறுதியான அன்புடன் பொன்னம்பலம் அடைந்தோம். அதனால் துன்பங்களை அறுத்தெறிந்தோம், நமனுக்கும் அஞ்சமாட்டோம், பாசமாகிய கடலினையும் எளிதில் கடந்தோம். எனவே சிற்றம்பலத்து எம் தலைவனை எண்ணி வணங்கும் சிறப்பினை எப்போதும் பேணுவோம்.

திருச்சிற்றம்பலம்

உ

# திருவாரூர்பாதி திருவொற்றியூர்பாதி வெண்பா அந்தாதி.

ஆசிரியர்
பூவாளூர்
**வித்துவான். சி. தியாகராச செட்டியார்**

உரைவிளக்கம்
குன்றக்குடி ஆதீனப்புலவர் தமிழாகரர்
சைவத் தமிழ்மணி சைவத் தமிழ்அறிஞர் சித்தாந்தச் செல்வர்
**வித்துவான். க. கதிரேசன் எம். ஏ; பி.எட்**
பூவாளூர் . 621 712
அலைபேசி 09865 193754.

உ
**திருவாரூர்பாதி திருவொற்றியூர்பாதி வெண்பா அந்தாதி.**
ஆசிரியர்
**பூவாளூர். வித்துவான். சி தியாகராச செட்டியார்**

சிறப்புப் பாயிரம்

**தமிழ்த்தாத்தா. உ. வே. சா.**

1. திருக்கமலை யொடும்ஒற்றித் திருநகர்வாழ் அருட்செல்வத்
தியாகே சன்தொண்
டருக்(கு)அமலை இரந்(து)அளித்தோன் அருக்க(ம்)மலைஅணிவேணி
அண்ணல் மீதே
இருக்க(ம்)மலைச் சிரகிரிவாழ் தியாகரா சக்கவிஞன்
எம்ம னோர்தம்
வருக்க(ம்))மலைவு அறஅன்பின் முதற்பாஅந் தாதிஒன்று
வகுத்தான் மன்னோ.

**குறிப்புரை** : திருக்கமலை= திருவாரூர். ஒற்றி= திருவொற்றியூர். அமலை= சோறு. அருக்கம் மலை= எருக்கினைஅணிந்த. இரு கம் மலை= பெரிய கங்கைநீர் தரித்த. சிரகிரி= திருச்சிராப்பள்ளி. எம்மனோர்தம் வருக்கம்= எம்மொத்த அறிஞர்இனம். மலைவு அற= மயக்கம் தீர. முதற்பா= பாக்களுள் முதன்மையான வெண்பா. வகுத்து= இயற்றி.

**பொழிப்புரை** : பெரிய கங்கைநீரைச் சடையில் தரித்த தாயுமான பெருமானின் திருச்சிராப்பள்ளியில் வாழும் தியாகராசனாகிய கவிஞன், திருவாரூர் திருவொற்றியூர் ஆகிய திருநகர்களில் எழுந்தருளியுள்ள தியாகேசப்பெருமானும், தன் தொண்டருக்குச் சோற்றினை தெருக்களில் சென்று யாசித்துக் கொண்டுவந்து தந்தவனும், எருக்கினை அழகிய சடையில் சூடியவனும் ஆகிய தலைமை சான்ற சிவபிரான் மேல்; எம்மொத்த அறிஞரினத்து மயக்கம் தீர, அன்பினால் பாக்களுள் முதன்மையான வெண்பாவினால் அந்தாதி ஒன்றினை இயற்றினான்.

**விளக்கம்** : சிவபெருமான் சோறு யாசித்தது : திருக்கச்சூர் ஆலக்கோயிற்பெருமான், பசித்துக் களைத்துவந்த சுந்தரரிடம், " மெய்ப்பசியால் மிகவருந்தி இளைத்திருந்தீர் வேட்கைவிட, இப்பொழுதே சோறுஇரந்து யானுமக்குக் கொணர்கின்றேன், அப்புறம்நீர் அகலாதே சிறிதுபொழுது அமரும் " எனச், செப்பிஅவர் கச்சூர் மனைதோறும் சென்று இரப்பர் ". ( பெரியபு.3336 )

2. ஆரூரி னொடும் ஒற்றித் திருநகரில் புற்றிடம்கொண்(டு)
அமர்ந்தே ஆழித்
தேரூரும் தியாகேசன் இருந்தாடும் செயற்(கு)ஏதுத்
தெரியின் இந்த
ஏரூரும் புகழ்த்தியாக ராசநா வலவன்அன்பின்

இயம்பு செப்பற்
சீர்ஊறும் இன்துதியை முனம்அறிந்த மகிழ்(வு)என்று
செப்ப லாமே.

**குறிப்புரை** : இருந்து ஆடும்= அமர்ந்தநிலையில் திருக்கூத்தியற்றும். ஏது= காரணம். ஏர்ஊரும்= அழகுதவழும். செப்பற் சீர்= செப்பலோசையுடைய சீர்களினாலான வெண்பா. முனம்= நூல்தோன்றுமுன் - ஆதியிலேயே. செப்பலாம்= கூறலாம்.

**பொழிப்புரை** : திருவாரூர் திருவொற்றியூர் ஆகிய திருத்தலங்களில் புற்றிடங்கொண்டு இருந்து, ஆழித்தேரில் எழுந்தருளும் தியாகேசப்பெருமான் அமர்ந்தநிலையில் திருக்கூத்தியற்றும் செயற்குரிய காரணத்தை ஆராயின், தியாகராசப் பெரும்புலவன் இயற்றியுள்ள இந்த அழகுதவழும் புகழ்வாய்ந்த செப்பலோசையுடைய வெண்பாவினாலான சிறப்புகள் தவழும் இனிய துதிக்குரிய அந்தாதிநூல்பற்றி, இது தோன்றுமுன்னரே - ஆதிகாலத்திலேயே அறிந்திருந்த மகிழ்வினாலேயே என்று கூறலாம்.

**விளக்கம்** : தியாகேசரின் இருந்தாடும் நிலைக்குக் காரணம்கற்பித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் ஏதுத்தற்குறிப்பேற்றவணி.

உ

## திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி
## வெண்பா அந்தாதி

ஆசிரியர் :

பூவாளூர். வித்துவான். சி. தியாகராச செட்டியார்.

காப்பு.

**விநாயகர்**.

திங்கள்அணி செஞ்சடைமா தேவ(ன்)வெண்பா அந்தாதி
மங்கள மாக வழுத்தஇன்சொல் - இங்(கு)அருளும்
மாதங்க வத்திரத்து மால்முதலோர்க்(கு) ஊறுஒழிக்கும்
மாதங்க வத்திரத்து மான்.

**குறிப்புரை** : இன்சொல் வழுத்த= இனியசொற்களால் துதிக்க. மா + தங்கம் + வத்திரம்= சிறந்த பொன்னாடை. மால்= திருமால். ஊறு= துன்பம். மாதங்கம் + வத்திரம்= யானைமுகம். மான்= மகத்துவன்.

**பொழிப்புரை** : சிறந்த பொன்னாடையுடுத்த திருமால் முதலியோர்க்கு

வந்த இடையூறுகளை ஒழிக்கும் யானைமுகத்து மகத்துவன் - விநாயகப்பெருமான், மூன்றாம்பிறைசூடிய மாபெருந்தெய்வமாகிய சிவபிரானை எமக்கு மங்களமுண்டாகப் போற்ற, இந்தத் திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதிக்கு இனிய சொற்களை இப்போதே எனக்கு அருளும்.

**இலக்கணக்குறிப்பு** : வஸ்த்திரம் என்ற வடசொல் தமிழில் வத்திரம் ஆனது. மாதங்கம் என்பது தனிமொழியாய் யானையையும்,தொடர்மொழியாய் பொன்னாடையையும் குறிப்பதால் அது பொதுமொழியாம்.

**சமயாசாரியர்.**

காழிவாய் ஞானக் கவுணியர்சூ ளாமணியும்
ஆழிவாய்க் கல்மிதந்த அப்பனும் - ஏழிசைவாய்
பாட்டுரைத்துக் கண்பெற்ற பாவலனும் கோவையான்
ஏட்டெழுதச் சொற்றவனு மே.

**குறிப்புரை** : கவுணியர் சூளாமணி= கவுணியர் குலத்துத் தலைமணி - திருஞானசம்பந்தர். ஆழிவாய்= கடலில். அப்பன்= அப்பரடிகள். பாவலன்= சுந்தரர். கோவை= திருச்சிற்றம்பலக் கோவையார். சொற்றவன்=சொன்ன வாதவூரடிகள்.

**பொழிப்புரை** : கவுணியர் குலத்தின் தலைமணியாகச் சீர்காழியில் பிறந்த திருஞானசம்பந்தரும், கடலில் கல்மிதக்க அதில் அமர்ந்து கரையேறிய அப்பரடிகளும், இழந்த கண்ணொளியை ஏழிசைக்கண் பாடல்கள் பாடிப் பெற்ற சுந்தரரும், சிவபிரான், திருச்சிற்றம்பலக்கோவையாரை ஏட்டில்எழுதிகொள்ளச் சொன்ன திருவாதவூரடிகளும் இந்நூலுக்குக் காப்பாவார்.

**அவையடக்கம்.**

சீர்ஊரும் செல்வத் திருக்கோயில் கொண்டருளி
ஆரூரும் ஒற்றியும் அமர்பரன்தன் - பேரூர்என்
பாடற்குற் றம்சிறிதும் பாரா(து) அருள்புரிவான்
நாடற்(கு) உலகம் நயந்து.

**குறிப்புரை** : செல்வம்= சீர்மை. பேரூர் ஆரூரும் ஒற்றியும்= பெருமைபொருந்திய ஊர்களாகிய திருவாரூர் திருவொற்றியூர். பரன்= யாவர்க்கும் மேலானவன். உலகம் நயந்து நாடற்கு அருள்புரிவான்.

**பொழிப்புரை** : பெருமைபொருந்திய திருவாரூர், திருவொற்றியூர் இரண்டின் அருட்சிறப்புமிக்க சீர்மைபொருந்திய திருக்கோயில்களில் யாவர்க்கும் மேலானவனாய் இடங்கொண்டு எழுந்தருளியுள்ள சிவபிரான், என்பாடல்களில் குற்றம் சிறிதும்நோக்காமல் உலகவர் விரும்பி மதிக்க அருள்புரிவான்.

## நூல்.

1. திருவார் கமலைத் தியாகேசா ஒப்பில்
ஒருவாஎன் கண்ணோய் ஒழிப்பாய் - கருவாய்ப்
பிணிக்குமருந்(து) என்(று)உன்னைப் பேசலன்றி என்கண்
மணிக்குமருந்(து) என்பேன் மகிழ்ந்து.

**குறிப்புரை** : திரு= தெய்வத்தன்மை. கமலை= திருவாரூர். கருவாய்ப் பிணி= பிறவி.

**பொழிப்புரை** : தெய்வத்தன்மை பொருந்திய திருவாரூர் அருள்தரு தியாகேசரே ! ஒப்பற்ற ஒருவனே ! எனது கண்பார்வைநோய் தீர்த்தருள்வாய். அங்ஙனம் தீர்த்தால் பிறவிநோய்க்கு நீ மருந்துஎன்று புகழ்வதுடன், மிக்க மகிழ்வுடன் என் கண்நோய்க்கும் மருந்து என்றும் புகழ்வேன்.

2. மகிழ்ந்(து)ஒற்றி யூர்வாழும் வள்ளால்முக் கண்ணா
நெகிழ்ந்(து)உள்ளம் நின்னை நினைப்பேன் - புகழ்ந்துகவி
பாடுவன்என் கண்மறைவைப் பாற்றினன்என்(று) என்றும்கொண்
டாடுவன்என் ஐயா அருள்.

**குறிப்புரை** : பாற்றினன்= மாற்றினான்.

**பொழிப்புரை** : மகிழ்வுடன் திருவொற்றிஊரில் எழுந்தருளியுள்ள வள்ளலே ! முக்கண்ணனே ! என்கண்படலத்தை மாற்றினான் - கண்ணொளி தந்தான் என்று உன்னைக்கொண்டாடுவேன், மனமுருகி என்றும் நினைப்பேன், உன்னைப்புகழ்ந்து கவிபாடுவேன், தலைவனே எனக்கு அருள்புரிக.

**விளக்கம்** : தன் இருகண்ணொளிக்காக முக்கண்ணனை வேண்டினார்.

3. அருளுடையேன் என்(று)என்(று) அறைவைஅறி வில்லா
மருளுடையேன் கண்ணை மறைத்தல் - அருளோ
திருவாரூர் வாழும் சிவனே வான்வாழ
மருவார்ஊர் மாய்த்தாய் வழுத்து.

**குறிப்புரை** : வான்= தேவர்கள். மருவார் ஊர்= முப்பகைவர்களின் முக்கோட்டைகள். வழுத்து= வாழ்த்து.

**பொழிப்புரை** : திருவாரூர்த் தியாகேசா ! நீ தேவர்கள் வாழ முப்புரப் பகைவர்களின் முக்கோட்டைகளையும் எரித்து அழித்தாய்.. அதனால் உன்னை நீ அருளுடையவன் என்றுசொல்லிக்கொள்கிறாய். ஆனால் அறிவில்லாத மனமயக்கமுமுடைய என்கண்பார்வையை நீமறைத்தது அருளும்செயலா ? கண்ணொளி அருள்க.

4. வழுத்துவேன் ஒற்றிநகர் வாழ்வேநின் தாள்நெஞ்(சு)
அழுத்துவேன் என்றும்நான் மாயேன் - கொழுத்தபுகழ்
ஐயா அரனே அடியேன் குழிவிழுந்து

நையாத வண்ணம் நவில்.

**குறிப்புரை** : அழுத்துவேன்= பதிப்பேன். மாயேன்= மறவேன். குழி= பாதையில் உள்ள குழி.

**பொழிப்புரை** : மிக்க புகழுடைய தலைவனே ! திருவொற்றியூரில் எழுந்தருளிய சிவபரம்பொருளே ! நான் உன்னைவணங்குவேன், உன்திருவடிகளை என்மனத்தில் பதிப்பேன். அடியேன் நடக்கும்போது குண்டு குழிகளில் விழுந்து நொந்துபோகாமல் அருள்புரி. இதற்குக் கண்ணொளி தா.

5. நவில இனிக்கும்பல் நாமத்தாய் கற்ற
கவிவலவர் ஏத்துகறைக் கண்டா - புவியரசாம்
ஆரூர் அரசே அமுதே அடலாழித்
தேரூர் விடங்கஅருள் செய்.

**குறிப்புரை** : பல்நாமம்= மிகப்பலதிருப்பெயர். அடல்ஆழித்தேர்= வலிய ஆழித்தேர். விடங்க= யாராலும் ஆக்கப்படாதவனே. ( விடங்கர் என்பதுஆரூர்ப் பெருமானின் திருப்பெயருமாம் )

**பொழிப்புரை** : சொல்லிய அளவிலேயே இனிக்கும் மிகப்பல திருப்பெயர்களுடையவனே ! கற்றவரும் கவிதை வல்லவரும் துதிக்கும் கறைக்கண்டனே ! உலக அரசனாக ஆரூரிலிருந்து ஆள்பவனே ! அமுதமே ! வலிய ஆழித்தேர் ஊரும் விடங்கனே ! எனக்குக் கண்ணொளி அருள்.

**விளக்கம்** : பல்நாமம் : " எண் ஆயிரம்கோடி பேரர் போலும் " ( திருமு. 6 .திருஆக்கூர் . 8 ). " திருவுருநாமம் ஏர்கொள்முக்கண்முகம் இயல்பும் எண்ணில்பல்கோடி " ( திருவிசைப்பா . சேந்தனார். திருவீழி. 9. )

6. செய்ய கழல்அடியேன் சென்னிமிசை வைத்தருள்வாய்
வெய்யவிடம் உண்ட விமலனே - கையர்
அடையாத ஒற்றிநகர் ஆண்டவனே சூலப்
படையார் மலர்க்கரத்(து)அப் பா.

**குறிப்புரை** : கையர்= வஞ்சகசர்.

**பொழிப்புரை** : கொடிய நஞ்சுண்ட இயல்பாகவே மலமில்லாதவனே ! வஞ்சகர் அடையாத ஒற்றியூர் இறைவா ! சூலப்படையைத் தாமரைமலர் போன்றகையில் ஏந்தியஅப்பனே ! கழலணிந்த உன்சேவடிகளைஎன்தலையில் சூட்டி அருள்வாயாக.

**விளக்கம்** : திருவடி சூட்ட வேண்டுதல் : " பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்துவை " ( திருமு. 4 . திருச்சத்திமுற்றம். 1 )

7. பாவால் உனைஅன்பிற் பாடேன் பரமேட்டி
பூவால்உன் பொற்பாதம் பூசியேன் - நோவால்
வருந்தும்எளி யேன்உய் வகையுண்டோ செல்வம்

திருந்தும் கமலைஅர சே.

**குறிப்புரை** : பரமேட்டி= பரம்பொருளே. திருந்தும்= மேன்மையுறும்.

**பொழிப்புரை** : அருட்செல்வத்தால் மேன்மையுறும் திருவாரூர்ப் பரம்பொருளே ! பாக்களால் அன்புடன் உன்னைப் பாடவில்லை, பூக்களால் உனது அழகியதிருவடிகளைப் பூசிக்கவில்லை. இந்நிலையில் பார்வைத் துன்பத்தால் வருந்தும் எளியேன் பார்வைபெற வழியுண்டோ ? எனக்கு வழிசெய்தருள்க - பார்வையருள்க

8. சேவேறி வந்(து)அடியேன் செல்ல(ல்)களை வாய்மாலும்
பூவேறி னானும் புகழ்புனிதா - காவேறிக்
கார்தங்கும் ஒற்றிநகர்க் காபாலி கங்காளா
நீர்தூங்கு செஞ்சடைய னே.

**குறிப்புரை** : பூஏறினான்= தாமரை மலரிலிருக்கும் நான்முகன். காபாலி= மண்டையோடு ஏந்தியவன். கங்காளா= என்புமாலை அணிந்தவனே. தூங்கு= தங்கிய

**பொழிப்புரை** : திருமாலும் தாமரைமலரிலிருக்கும் நான்முகனும் புகழும்தூயவனே ! சோலை உச்சிக்குஏறி மேகம்தங்கும் திருவொற்றியூர்க் கபாலியே, என்புமாலையணிந்தவனே ! கங்கை தங்கிய செஞ்சடையப்பனே ! நீ உனது விடைமேலேறிவந்து எனது துன்பம் தீர்த்தருள்க.

9. நேசம் சிறிதுமிலேன் நின்அடிமை என்(று)உரைப்பேன்
பாசம் அகன்(று)எப் படிஉய்வேன் - ஈசா
கமலால யத்தமர்வாய் காரார் களத்து
விமலநா யேற்கு விளம்பு.

**குறிப்புரை** : களம்= கழுத்து.

**பொழிப்புரை** : இறைவனே ! கமலாலயத்தில் எழுந்தருளியுள்ளவனே ! நஞ்சினால் கருமையான திருக்கழுத்தனே ! என்றும் மலமில்லாதவனே ! உன்மேல் அன்பு எனக்குச் சிறிதும் இல்லை. ஆனால் உனக்கு நான் அடிமை என்று சொல்லிக்கொள்வேன். பொய்யாக நடிக்கும்நான் பாசங்களிலிருந்து விடுபட்டு ஈடேறுவது எப்படி ?

10. விள்ளு பெரும்பிறவி வேலைக்(கு) ஒருவடவை
எள்ளுவினைக் காட்டிற்(கு) ஒருநவியம் _ தெள்ளுபுனல்
பாய்சடையான் ஒற்றியூர்ப் பாண்டரங்கன் வான்அமரர்
ஆய்புகழான் செம்பொன் அடி.

**குறிப்புரை** : விள்ளு= சொல்லப்பெறும். வேலை= கடல். வடவை= வடவைத்தீ. எள்ளு= இகழத்தக்க. நவியம்= கோடரி. பாண்டரங்கன்= பாண்டரங்கக் கூத்தாடுபவன். ஆய்= ஆராயும். அடி= திருவடி.

**பொழிப்புரை** : தெளிந்த கங்கைபாயும்சடையனும், ஒற்றியூரில் உள்ள பாண்டரங்கனும், தேவர்கள் ஆராயும் புகழுடையவனும் ஆகிய பெருமானின் சிறந்த பொன்போலும் திருவடி, எல்லையற்றதாகச் சொல்லப்பெறும் பெரும் பிறவிக்கடலினை முற்றாக வற்றச்செய்யும் வடவைத்தீ, இகழத்தக்க இருவினைக்காட்டினை வேரோடு வீழ்த்தும் ஒப்பற்ற கோடரியாகும்.

**விளக்கம்** : பாண்டரங்கம் : சிவபிரான், முப்புரம் எரித்தபோது அதனால் உண்டான வெண்மையானநீறு பூசி அவ்வரங்கில் ஆடிய கூத்து.

" மண்டமர் பலகடந்து மதுகையால் நீறணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால் பணைஎழில் அணைமென்தோள்
வண்டரற்றும் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ "( கலித்.கட. வாழ்....)

( பாண்டு + அரங்கம்= வெண்மையான அரங்கம் )

11. அடியடைந்தார் துன்பத்(து) அழுந்தல் அழகோ
கடிஅரவக் கிண்கிணிப்பொற் காலா - முடியி(ன்)மதி
வைத்தாய் கமலை வரதா அநாதிமல
முத்தாஉய் மார்க்கம் மொழி.

**குறிப்புரை** : கடி= அச்சம். வரதா= எல்லார்க்கும் மேலானவனே. அநாதி மலமுத்தன்= அநாதிகாலந்தொட்டே மலமில்லாத முத்தன் - சிவன்.

**பொழிப்புரை** : அச்சந்தரும் பாம்புடன் கிண்கிணி அணிந்த திருவடியனே ! உன்முடியில் பிறைசூடினாய் ! திருவாரூர் வரதனே ! அநாதிமுதலே மலமில்லாத கடவுளே ! உன்திருவடியடைந்தவர் துன்பத்தில் மூழ்குவது உனக்கழகல்ல. ( உன்னடியடைந்த நான் ) ஈடேற வழி கூறு.

**விளக்கம்** : உன்னடியடைந்த சந்திரனைக் காத்தநீ உன்னடியடைந்த என்னையும் காத்தருள் என்றார்.

12. மொழியத் தெவிட்டா முதல்வாநா யேன்துன்(பு)
ஒழியக் கருணை உதவாய் – கழியப்
புகழ்வேன் உனைஒற்றிப் புண்ணியா இன்றேல்
இகழ்வேன் இரந்(து)உண்டாய் என்று.

**குறிப்புரை** : கழிய= மிகுதியாக. இரந்து உண்டாய் என்று இகழ்வேன்.

**பொழிப்புரை** : ஒற்றியூர்ப் புண்ணியனே ! எத்தனைமுறை உன்னைப் புகழ்ந்தாலும் தெவிட்டாத முதல்வனே ! என்துன்பம் ஒழிய நீ கருணை காட்டு. கருணைகாட்டினால் உன்னைப் புகழ்வேன். கருணைகாட்டாவிடின், நீ யாசித்து உண்டாய் என்று உன்னை இகழ்வேன்.

13. என்றுமதிக் கண்ணா எழில்கமலை ஈசாமான்
கன்று சுமந்த கரதலத்தாய் - என்(று)உனையே
பேசப் பெறுவேனேல் பெற்றேன் பிறவிமுதல்

வீசப் பெருவான் விரைந்து.

**குறிப்புரை** : என்று= ஞாயிறு. பிறவிமுதல்= பிறப்பையும் அதற்கு மூலமாக உள்ள வினை முதலியவற்றையும். வீச= தூக்கி எறிய. பெருவான் விரைந்து பெற்றேன்.

**பொழிப்புரை** : ஞாயிறு நிலவு இரண்டையும் கண்களாகப் பெற்றவனே ! அழகிய திருவாரூர்ப் பெருமானே ! மான்கன்றினைக் கையில் சுமந்தவனே என்று உன்னையே நினைத்துக் கூறும் பேறு பெற்றால், நான் பிறப்பையும், அதற்கு மூலமான இருவினை, பற்று முதலியவற்றையும் தூக்கிஎறிந்து சிறந்த வீட்டுலகை விரைந்து பெறுவேன்.

**இலக்கணக்குறிப்பு** : பெற்றேன் - காலவழுவமைதி.

14. விரைஆர் மலரிதழி வேய்ந்த விமலா
நரைஆர் விடைஏறு நம்பா - வரைஆர்
அரவணிந்த ஒற்றியூர் அண்ணலே நெஞ்சில்
கர(வு)அணிந்த நாயேனைக் கா,

**குறிப்புரை** : விரைஆர்= நறுமணம்பொருந்திய. நரை= வெண்மை. நம்பன்= சிவன். வரை= கோடு. கரவு= கபடம்.

**பொழிப்புரை** : நறுமணம் பொருந்திய கொன்றைமலர் சூடிய விமலனே ! வெண்மையான விடை ஏறிவரும் சிவனே ! கோடுகளுடைய நாகத்தை அணிந்த ஒற்றியூர் அண்ணலே ! நாயேனைக் காத்தருள்க.

**விளக்கம்** : நரைஆர் விடை : " ஊர்தி வால்வெள் ஏறே " ( புறம். கடவுள் வாழ்த்து ) ( வெண்மை, அறத்தின் குறியீடென்பர் )

15.. காமன் உடல்பொடித்தாய் காலன் படவுதைத்தாய்
பூமன் சிரம்கொய்தாய் பூங்கொன்றைத் - தாமனே
சூலம் மழுஏன் சுமந்தாய் கனற்கண்சேர்
பால கமலைப்ப ரா.

**குறிப்புரை** : பொடித்தாய்= நீறாக்கினாய். பட= இறக்க. பூமன்= தாமரை மலரிலுள்ள நான்முகன். தாமன்= மாலையணிந்தவன். பால= நெற்றியனே. பரா= பரம்பொருளே.

**பொழிப்புரை** : நெருப்பு வடிவான கண்பெற்ற நெற்றியனே ! ஆரூர்ப் பரம்பொருளே ! கொன்றைமலர் மாலை அணிந்தவனே ! மன்மதன் உடலை நுதற்கண்ணால் நீறாக்கினாய், யமன் இறக்குமாறு காலால் உதைத்தாய் ! நான்முகனின் தலையை நகத்தால் கிள்ளி எடுத்தாய் ! இச்செயல்கள் செய்யப் பிறகருவி உதவியுனக்குத் தேவைபடவில்லை.. இந்நிலையில் சூலம் மழு ஆகிய படைகள் சுமந்ததேன் ?

16. பரனென்றும் ஒற்றியூர்ப் பண்ணவன்என் றும்சங்
கரன்என்றும் காளகண்டன் என்றும் - வரன்என்றும்
கூறும் அடியவரைக் கூற்றன்கும் பிட்(டு)அகல்வான்
ஏறும் பகடோ(டு) இரந்து.

**குறிப்புரை** : பண்ணவன்= குரு. சங்கரன்= இதம்செய்பவன். காளகண்டன்= கருத்த திருக்கழுத்துடையவன். வரன்= வரங்கள் அருள்பவன். பகடு= எருமைக்கடா. இரந்து= உயிர்ப்பிச்சை கேட்டு.

**பொழிப்புரை** : மேலானவன், ஒற்றியூர்க் குருமூர்த்தி, இதம்செய்பவன், கறைக்கண்டன், வரங்கள் அருள்கிறவன் என்று உன்னைப் போற்றும் அடியவரை யமன் கண்டதும், அவரிடம் உயிர்ப்பிச்சை கேட்டுத் தன்எருமைக் கடாவுடன் அவரைவிட்டு நீங்குவான்.

17. இரப்பார் பசியால் இனைவார் எனையார்
புரப்பார் எனவே புகல்வார் - சிரப்பால்
சிரம்ஏந்து தென்கமலைத் தேவே சனைமுன்
வரம்ஏந்த வாழ்த்தாத வர்.

**குறிப்புரை** : இனைவார்= வருந்துவார். சிரப்பால்= தலையில். சிரமேந்து= தலைமாலை சூடிய. வரம் ஏந்த= மேன்மைபெற.

**பொழிப்புரை** : தனது தலையில் தலைமாலை சூடிய, அழகிய கமலையில் எழுந்தருளிய தேவர்தலைவனை, தான் மேன்மைபெற வாழ்த்தாதவர், பிறரிடம் தன்பசிக்கு யாசித்து வருந்துவர், என்னைக்காப்பவர் யார்உள்ளார் என்று கூறி அலைவர்.

18. வரைமகள் வாமத்தான் மணித்திரளை வாரித்
திரைஎறியும் ஒற்றியூர்ச் செல்வன் - பிரசமலர்க்
காமற் பொடித்த கனல்விழியான் பூங்கொன்றைத்
தாமத்தான் தாளே சரண்.

**குறிப்புரை** : வரைமகள்= பார்வதி தேவி. பிரசம்= தேன். மணி= முத்து.

**பொழிப்புரை** : பார்வதிதேவியை இடதுபாகம் உடையவனும், முத்துகளைத் திரளாக அலைகளால் கரையில் எறியும் கடலுடையஒற்றியூர்ச் செல்வனும், தேன்பொருந்திய மலர்களைத் தன்மேல் எய்த காமனைநீறாக்கிய கனல்விழியினனும், மென்மையான கொன்றைமலர் மாலை சூடியவனும் ஆகிய சிவபிரான் திருவடிகளே எனக்கு அடைக்கலம் புகுமிடம்.

19. சரணம் சரணம்என்று சார்ந்தால்ஆ ரூரான்
அரணம் பொடித்தநகை அப்பன் - முரணார்
உழுவைஅதள் உடையான் ஓங்(கு)அருளான் நெஞ்சே
நழுவவிடு வானோ நமை.

**குறிப்புரை** : அரணம்= முக்கோட்டைகள். முரணார்= பகைத்த முனிவர்கள். உழுவை அதள்= புலியின் தோல்.

**பொழிப்புரை** : திருவாரூரினனும், முப்புரங்களைப் புன்னகையால் நீறாக்கியதலைவனும், பகைத்த முனிவர்கள் தன்னைக்கொல்ல ஏவிய புலியின் தோலினை ஆடையாக உடுத்தவனும், பேரருளாளனும் ஆகியவனை அடைக்கலம் அடைக்கலம் என்றடைந்தால் நெஞ்சே ! அவன் நம்மைக் கைவிடமாட்டான்.

20. நமரங்காள் ஒற்றியூர் நம்பனையே சார்மின்
பமரம் செறிபூப் பறிமின் - நிமிர்அவன்தாள்
சூட்டுமின்அன் னோன்புகழே சொல்லுமின் துன்(பு)ஒழிய
ஓட்டுமின் பேரின்பம் உற்று.

**குறிப்புரை** : நமரங்காள்= நம்மவர்களே ! பமரம்= வண்டு. நிமிர்= திருமாலுக்கும் நான்முகனுக்கும் அகப்படாது நிமிர்ந்த. ஒழிய= முழுதும்

**பொழிப்புரை** : நம்மவர்களே ! வண்டுகள் செறிந்து மொய்க்கின்ற தேன்பொருந்திய மலர்களைப் பறியுங்கள், ஒற்றியூரில் எழுந்தருளியுள்ள விரும்பத்தக்கவனை அடையுங்கள், திருமாலுக்கும் நான்முகனுக்கும் அகப்படாது நிமிர்ந்த அவனது திருவடிகட்குச் சூட்டுங்கள், அவன் புகழே பாடுங்கள், இதன்மூலம் பேரின்பம் பெற்று உம்முடைய துன்பங்கள் முழுவதையும் ஓட்டுங்கள்.

21. உற்றார் உனையன்றி உண்டோ அடியேற்குப்
பெற்றாரும் நீயே பெருமானே - கற்றார்கள்
பாப்பாடும் ஆரூர்ப் பரமேசர் நோய்ஒழித்துக்
காப்பார்கள் யாரோ கரை.

**குறிப்புரை** : உற்றார்= தக்கவர். பெற்றார்= தாய் தந்தை. கரை= கூறு.

**பொழிப்புரை** : கற்றவர்கள் பாப்பாடிப்போற்றும் ஆரூர்ப் பெருமானே ! அடியவனாகிய எனக்குத் தாயும் தந்தையும் நீயே ! என்நோயினை ஒழித்து அடியேனக் காக்கத்தக்கவர் பரமேசராகிய உன்னைத் தவிர வேறுயாருளர் ? நீயே சொல்லுவாயாக.

**விளக்கம்** : உற்றார் அவனே : " உற்றார் ஆருளரோ - உயிர்கொண்டு போம்பொழுது, குற்றா லத்துறை கூத்தன்அல் லால்நமக்(கு) உற்றார் ஆர்உளரோ. ( திருமு. 4. திருவங்கமாலை. 10 )

22. கறைக்கண்டா நின்னைஒரு காலும் மறவேன்
பிறைக்கண்டம் சூடும் பிரானே - சிறைக்கலுழன்
ஊர்ந்தான் தொழும்ஒற்றி ஊராய் அருள்உன்னைச்
சேர்ந்தார் தெளியும்வகை தேர்ந்து.

**குறிப்புரை** : சிறைக்கலுழன்= சிறகுகளுடைய கருடன். ஊர்ந்தான்= ஏறிவரும் திருமால். தேர்ந்து தெளியும்வகை அருள். தெளிவு= ஞானம்.

**பொழிப்புரை** : மூன்றாம்பிறை சூடும் தலைவனே ! சிறகுகளுடைய கருடன்மேல் ஏறிவரும் திருமால் வணங்கும் ஒற்றியூரனே ! நஞ்சக் கறையுடைய திருக்கழுத்தனே ! உன்னடியார் உன்னை ஆய்ந்து தெளிந்த ஞானத்தால்அறியும் வகையில் அருள்புரி. உன்னை ஒருகாலும் மறக்கமாட்டேன்.

**விளக்கம்** : இறைவனை ஞானத்தால் தொழுதல் : " ஞானத்தால் தொழுவார் சிலர் ஞானிகள் " ( திருமு. 5. தனித்திருக்குற்றுந் . 3 )

**23.** தேரார் நெடுவீதிச் செல்வத் திருவாரூர்
நீரார் சடில நிமலனே - காராரும்
கண்டநின் அன்ப(ர்)களைக் காலன் கரத்(து)ஏந்து
தண்டம் செயலென்னோ சாற்று.

**குறிப்புரை** : நிமலன்= இயல்பாகவே மலமில்லாதவன் தண்டம் செயல்= தண்டாயுதத்தால் உயிர்கவர்தல். என்னோ= ஏன்.

**பொழிப்புரை** : ஆழித்தேர் ஓடும் நீண்ட வீதிகளுடைய அருட்செல்வம் பொருந்திய திருவாரூரினனான கங்கை தங்கிய சடையுடைய நிமலனே ! நஞ்சினால் கருத்த திருக்கழுத்தனே ! உனதுஅடியவர்களைக் கண்டுஅஞ்சி, ஓடவேண்டிய யமன் தன்கையில் ஏந்திய தண்டாயுதத்தால் அவர்களின் உயிர்கவர்வது ஏன் ? கூறு.

**24.** சாற்றுதிரு நீறணிந்து தண்கண் மணிபூண்டு
போற்றுதிரு நாமம் புகன்றேத்தி - ஏற்று
வருவார்தென் ஒற்றியூர் வாழ்வார்க்(கு)ஆள் ஆனார்
மருவார் கருவினிடை வந்து.

**குறிப்புரை** : சாற்று= புகழ்ந்துரைக்கப்பெறும். தண்மை=அருள். புகன்று ஏத்தி= சொல்லிவணங்கி ஏற்றுவருவார்= விடையூர்ந்து வருகிறவர். ஆள்= அடிமை. கருவினிடை வந்து மருவார். மருவார்= பொருந்தார்.

**பொழிப்புரை** : விடைஏறிவரும் பெருமானுக்குப்புகழ்ந்துரைக்கப்பெறும் திருநீறு அணிந்து, அருளின் குறியீடான உருத்திராக்கம் பூண்டு, அவனது போற்றுதற்குரிய திருப்பெயரைச் சொல்லி, ஒற்றியூரில்வாழும் அவனுக்கு அடிமைப்பட்டவர், கருவிற்பொருந்திப் பிறவார்.

**விளக்கம்** : உருத்திராக்கத்தைச் " சாதனம் " என்பர். " விலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி " ( திருமு. 6. கன்றாப். 3.

**25.** வந்திக்கச் சென்னியுண்டு வாழ்த்திடநன் நாவுண்டு
சிந்திக்க நீயுண்டு செஞ்சடைமேல் - அந்திப்

பிறையணிந்த தென்கமலைப் பெம்மான்தாள் உண்டு
குறையுண்டோ நன்னெஞ்சே கூறு.

**பொழிப்புரை** : நெஞ்சமே ! தனது செஞ்சடையில்அந்திப்பிறை சூடிய பெருமான் தாளினை நீ வணங்கத் தலையும், வாழ்த்த நல்ல நாவும், சிந்திக்க நீயும், இவற்றின்பொருட்டு அவனும் உள்ளான். எனவே உனக்கு என்னகுறை? கூறு.

**விளக்கம்** : " வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து" என்ற திருவாசகத்தொடரையும், அப்பரடிகளின் திருவங்க மாலையையும் நினைப்பிக்கிறது இச்செய்யுள்.

26. கூறுதமிழ் ஒற்றியூர்க் கோமானுக்(கு) என்செய்தோம்
ஏறு விடைமேல் எழுந்தருளி - நாறுகுழல்
அம்மையொடு காட்சி அளித்தருளி நன்னெஞ்சே
நம்மைப் புரந்தருள நாம்.

**குறிப்புரை** : தமிழ்= இனிமை. ஏறுவிடை= ஏறிவரும் விடை. .ஏறுவிடை.................புரந்தருள நாம் என்செய்தோம்.

**பொழிப்புரை** : ஏறிவரும் விடைமேல் மணக்கும் கூந்தலுடைய அம்மையுடன் எழுந்தருளிக் காட்சிதந்து நம்மைக் காக்க, எனது நல்ல நெஞ்சமே ! இனிமைத் தன்மையுடைய ஒற்றியூர்க் கோமானுக்கு என்ன செய்தோம் ? ( பக்திகாட்டியிருப்பின் அருள்வான் என்றார் )

27. நாமா தவமுடையோம் நன்னெஞ்சே தென்கமலைக்
கோமான் எதிர்நின்று கும்பிடோம் - பூமாலை
சூடோம் இனியகவி சொல்லித் துதியோம்கூத்(து)
ஆடோம் சிறிதும்இத னால்.

**பொழிப்புரை** : எனது நல்லநெஞ்சமே ! அழகிய திருவாரூர்ப் பெருமானைக் கண்டு கும்பிடவில்லை, அவனுக்குப் பூமாலை சூட்டவில்லை, இனிய கவிதைகளைச் சொல்லி வணங்கவில்லை, கண்டு சிறிதுநேரம்கூடப் பத்திக்கூத்தாடவில்லை. இவற்றால் நாம் தவமுடையோமல்லோம்.

28. ஆலம் மிடற்றில் அணிந்துமலர் மாதர்க்கு
நீலம் செவியில் நிறுத்தினாய் - கோல
மருப்பணிந்த ஒற்றியூர் வள்ளால் உனது
திருப்புகழுக்(கு) ஈறுண்டோ செப்பு.

**குறிப்புரை** : மலர்மாதர்= திருமகள் ,கலைமகள். நீலம்செவியில் நிறுத்துதல்= நீலமணிக்காதணி அணிந்து கொள்ளும் மங்கல வாழ்வுதந்தாய். ( காதணி மங்கலத்தின் குறியீடு. ) / நின் சாவாமையை வியந்து நோக்கச்செய்தாய்.

**பொழிப்புரை** : ஏனத்தின் அழகிய மருப்பணிந்த ஒற்றியூர் வள்ளலே ! நீ நஞ்சினை உன்திருக்கழுத்தில் நிறுத்திச் சாவாமையால், திருமகளும் கலைமகளும் உன்னை வியந்து நோக்கச்செய்தாய் / நீ நஞ்சுண்ணாவிடில் திருமால் நான்முகன் முதலியோர் மாண்டிருப்பர், உண்டதால் அவர்கள் உயிர்தப்பியதால் இருமகளிரும் காதணிஅணியும் மங்கலவாழ்வு பெற்றனர். உனது இத்தகு தெய்விகப்புகழுக்கு எல்லை இல்லை.

29. செப்பும் கமலைத் தியாகேசா என்றும்நீ
ஒப்பும் உயர்வும் ஒருவினாய் - அப்பனே
உன்னைவிட என்நோய் ஒழித்தருள்வார் யார்சேயை
அன்னைவிடல் அன்றே அழகு.

**குறிப்புரை** : செப்பும்= புகழப்பெறும். ஒருவினாய்= நீத்தாய். சேயை அன்னைவிடல் அழகன்றே.

**பொழிப்புரை** : புகழப்பெறும் திருவாரூர்த் தியாகேசனே ! எக்காலத்தும் உனக்கு ஒப்புமையோ உயர்வோ யாருமின்றி நீ உயர்ந்தாய். அப்பா ! எனது நோயினை உன்னைத்தவிர யார் தீர்ப்பார் ? தாயாகிய நீ உன்சேய் ஆகிய என்னைக் கைவிடல் உனக்கு அழகல்ல. என்பிறவிநோய் தீர்த்தருள்.

30. அழுதபிள்ளை பாலருந்தும் என்பார் அழுதும்
இழுதையேன் மாட்(டு)இரக்கம் இன்றோ - தொழுதகையை
வெட்டுவார் இல்லைஒற்றி மேவுபர மாஇதழிக்
கட்டுவார் வேணி அழ கா.

**குறிப்புரை** : இழுதையேன்= அறிவற்ற நான். இதழிக்கட்டு= கொன்றை மாலை. வார் வேணி= நீண்டசடை.

**பொழிப்புரை** : அழகிய கொன்றைமாலை சூடிய நீண்ட சடையுடைய அழகனே ! அழுதபிள்ளைதான் பால்குடிக்கும் என்பர். அறிவற்றநான் அழுதும் எனக்கு இரங்கவில்லையே ! தன்னைத் தொழுத கையை யாரும் வெட்டமாடார்கள். உன்னைத்தொழும் என்னைக் கைவிடாதே, அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் வேற்றுப்பொருள்வைப்பு அணி.

31. காஏந்து பொன்னகரம் கைவிட்டுத் தென்ஆரூர்ப்
பூஏந்து பூங்கோயில் புக்கமர்ந்தாய் - சேஏந்தும்
அப்பனே என்நோய் அகற்றில் பழியுண்டோ
துப்பைநேர் வேணியாய் சொல்.

**குறிப்புரை** : கா= கற்பகச்சோலை. பூ= பொலிவு. பூங்கோயில்= திருவாரூர்த் திருக்கோயிலின் பெயர். சே= விடைக்கொடி. துப்பு= பவளம்.

**பொழிப்புரை** : அறத்தின்குறியீடான விடைக்கொடி ஏந்திய தலைவனே! பவளமொத்த சடையுடையவனே ! நீ எம்மைக் காக்கும்பொருட்டுக் கற்பகச்

சோலையுடைய தேவருலக அமராவதி நகர்விட்டு, அழகிய ஆரூரின் அருட்பொலிவு சான்ற பூங்கோயிலில் எழுந்தருளினாய். உன்நோக்கத்திற்கு ஏற்ப, என்நோயினை நீக்கினால் பழியில்லை. நீக்கியருள்.

**இலக்கணக்குறிப்பு** : உண்டோ - ஓகாரம் எதிர்மறை.

32. சொல்வேன் கேள் நோயேநின் தூவாயின் மண்இட்டு
வெல்வேன் எனைநீ விடுத்தகல்வாய் - அல்வாய்
களத்தன்ஒற்றி யூராளி காமன்காய்ந் தான்என்
உளத்தன் அருள்வலிகொண்(டு) ஓர்ந்து.

**குறிப்புரை** : தூ= இகழ்ச்சி. அல்வாய்= கருமையமைந்த. ஓர்ந்து= ஆய்ந்தறிந்து. அருள்வலி கொண்டு என்உளத்தன்.

**பொழிப்புரை** : என்னைப் பற்றியுள்ள நோயே ! சொல்வேன் கேள் . உன்இகழத்தக்க வாயில் மண்ணைப்போட்டு - தோற்கடித்து - வெல்வேன். கருமையான திருக்கழுத்தையுடையவனும், ஒற்றியூரினனும், காமனை எரித்தவனும் ஆகிய அவன் என்னுள்ளத்தில் அருளாற்றலுடன் எழுந்தருளி உள்ளான் என்பதை நீ ஆராய்ந்துஅறிந்து என்னைவிட்டோடு.

33. ஓராரும் நின்புகழை ஓர்ந்துநின்தாள் தஞ்சம்எனச்
சேராரும் இன்கவிகள் செப்பாரும் - சீரே
திருந்தும் கமலைத் தியாகேசா மண்ணில்
இருந்தென் இறந்தென் இயம்பு.

**பொழிப்புரை** : திருந்திய சிறப்புகளேயுடைய கமலைத் தியாகேசரே ! உன்புகழை ஆராய்ந்து அறியாதவரும், ஆய்ந்தறிந்து நின் திருவடியே அடைக்கலம் என்று உன்னை அடையாதவரும், இனிய கவிதைகள் பாடி வணங்காதவரும் இவ்வுலகில் வாழ்ந்தும் இறந்தும் பயனில்லை.

**விளக்கம்** : வாழ்க்கைப் பயணத்தின் இலக்காகிய வீடுபேற்றுக்குப் பெருமானைப் போற்றாமல் வாழ்ந்தென்ன ? வீழ்ந்தென்ன ? என்றார்.

34. இயம்கலிக்கும் ஒற்றியூர் எந்தாய்நின் அன்பர்
நயம்கலிக்கும் பாடல் நவிலேன் - பயம்கலிக்கும்
நெஞ்சேன் கொடுநோயை நீக்கிஅடி யேன்முன்நின்(று)
அஞ்சலென் நீயே சரண்.

**குறிப்புரை** : இயம்கலிக்கும்= இசைக்கருவிகள் முழங்கும்.

**பொழிப்புரை** : இசைக்கருவிகள் முழங்கும் ஒற்றியூர்த் தந்தையே ! நான், உன்னடியவர்களின் நயங்கள் முழங்கும் பாடல்களைப் பாடவில்லை. ஆயினும் அச்சம்முழங்கும் மனமுடைய என்முன் தோன்றி அஞ்சேல் என்றுகூறி, என் கொடியநோயை நீக்கியருள். உனக்கு நான் அடைக்கலம்.

35. அரணம் பொடித்த அழகாநா யேற்கு
மரணம் பிறப்(பு)இரண்டும் மாற்றிச் - சரணம்
தருவாயேல் ஆரூர்த் தியாகேசன் என்பேர்
ஒருவாது நிற்கே உறும்.

**குறிப்புரை** : என்பேர்= என்ற பெயர். ஒருவாது= நின்னை நீங்காமல். சரணம்தருதல்= வீடுபேறு அருளல்.

**பொழிப்புரை** : முப்புரங்களையும் நீறாக்கிய அழகனே ! நீ அடியேனது இறப்பு பிறப்பு இரண்டையும்மாற்றி வீடுபேறு அருளினால், ஆரூர்த் தியாகேசன் என்ற பெயர் உன்னைநீங்காது உனக்கு நிலைக்கும்.

36. உற்ற நிராமயனென்(று) ஓதற்(கு)ஏற் பச்சிறியேன்
பெற்ற பிணிவருத்தம் பேசினால் - முற்(று)உணர்ந்து
நீஅறியாய் ஒற்றியூர் நின்மலா நீஅறியின்
நோய்அறியே னன்றோ நுவல்.

**குறிப்புரை** : நிராமயன்= மலநோயில்லாதவன் - சிவபிரான். நோய் அறியேன்= மலநோய் தீர்வேன். நுவல்= கூறு.

**பொழிப்புரை** : ஒற்றியூரில் எழுந்தருளியுள்ள மலநோய்என்றுமில்லாக் கடவுளே ! உன்னிடம் என்மலநோய் பற்றிக் கூறி வேண்டினால், நீ மலநோய் இல்லாதவனாதலின் நான்படும்பாட்டினை முழுதும் உணர்ந்து அறிய மாட்டாய். அறிந்திருப்பின் என்நோய் தீர்த்திருப்பாய், தீர்த்தால் நோய்பற்றி நான் அறியாதவனாவேன்.

**விளக்கம்** : பிறகடவுளர் அதிகாரமலம் காரணமாகப் பிறப்பு இறப்பிற் படுவர் ஆதலின் அவர்கள் நோய்பற்றி அறிந்திருப்பர். ஒற்றியூரான் அநாதியே மலமில்லாதவனாதலின் பிறப்பிறப்புத் துன்பம் அறியான் என்றார்.

37. நுவல்அடியார் துன்(பு)ஒழியா நோன்(பு)உனக்(கு) உண்டோ
கவல் அடியேன் துன்பம் களையாய் - சுவலினிடைக்
கங்காளா தென்கமலைக் காமாரி வெற்(பு)உயிர்த்தாள்
பங்காளா என்னோ பகர்.

**குறிப்புரை** : நுவல்= ( தன்துன்பம் ) கூறும். சுவல்= தோள். காமாரி= மன்மதனை எரித்தவனே. வெற்பு உயிர்த்தாள்= மலைமகள் - பார்வதிதேவி. என்னோ= காரணம் என்ன.

**பொழிப்புரை** : தோளில் என்புமாலை அணிந்தவனே ! அழகிய கமலாலயத்தில் எழுந்தருளியுள்ள காமாரியே ! மலைமகளை இடப்பாகம் கொண்டவனே ! உன்னைப்போற்றும் அடியவரின் துன்பத்தைத் தீர்க்காத நோன்பு மேற்கொண்டுள்ளாயா ? துன்பத்தால் கவலைப்படும் எனது துன்பத்தைக் களையவில்லையே ! காரணம் என்ன ?

**இலக்கணக்குறிப்பு** : நுவல் அடியார் - வினைத்தொகை. களையாய் -

எதிர்மறை முன்னிலை வியங்கோள் வினைமுற்று. ( எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது )

38. பகலவன் கண்ணைப் பறித்தாய் மகத்தில்
இகலிலேன் கண்மறைத்தாய் என்னோ - பகையும்
உறவுமிலான் என்ப(து)உணர்த்தவோ ஒற்றி
அறவிடையாய் நாயேற்(கு) அறை.

**குறிப்புரை** : மகத்தில்= (தக்கன் உன்னை ஒதுக்கிச் செய்த) வேள்வியில். இகலிலேன்= பகையில்லாத என். அறவிடை= அறத்தின் குறியீடான விடை.

**பொழிப்புரை** : அறத்தின் குறியீடான விடையுடைய ஒற்றியூரனே ! உன்னை ஒதுக்கித் தக்கன்செய்த வேள்வியில் கலந்துகொண்ட சூரியன் ஒருவனின் கண்ணை நீ பறித்தது பொருந்தும். ஆனால் உன்னுடன் பகையோ உறவோ இல்லாதவன் என்பதால் என்கண்மறைத்ததேன் ? நாயேற்குச் சொல்.

**விளக்கம்** : உன்பகைவனுக்கு நண்பன் உனக்குப் பகைவனாதலின் தக்கன் வேள்வியில் கலந்துகொண்ட சூரியன் கண்பறித்தது பொருந்தும். நான் உனக்குப் பகையோ உறவோ இல்லாததால் என்கண்ணைப் பறிக்காமல் மறைத்தாயா ? என்றார்.

39. அறையும் மறையும் அரியும் அயனும்
நிறையும் சுரருமெதிர் நின்று - பறையும்
துதியோநின் பூஞ்செவிக்குத் தொல்வளம்சேர் ஆரூர்ப்
பதியேநா யேன்புகலும் பாட்டு.

**குறிப்புரை** : தொல்= தொன்றுதொட்ட. அறையும்= இடையறாது ஒலிக்கும். சுரர்= தேவர்கள். பறையும்= சொல்லும்.

**பொழிப்புரை** : தொன்றுதொட்டு வளமுள்ள ஆரூர்த் தலைவனே ! இடையறாது ஒலிக்கும் வேதமும் திருமாலும் நான்முகனும் நிறைந்த தேவர்களும் உன் எதிரேநின்று துதிப்பதற்கு அருளும் நீ, உன்அழகியசெவிகள் கேட்குமாறு நாயேன் பாடும் பாட்டுக்கு அருளாததேன் ? அருள்க.

40. பாடும் பணியொடுநின் பாதப் பணிஅடியேன்
கூடும் பொருட்(டு)அடிமை கொண்டருள்வாய் - சூடும்
பிறையோய் திருஒற்றிப் பெம்மானே யார்க்கும்
இறையே இரங்குற்(று) இனிது.

**குறிப்புரை** : கூடும் பொருட்டு= வாய்க்கும் வகையில்.

**பொழிப்புரை** : சடையில் பிறையணிந்தவனே ! திருஒற்றியூர்ப் பெருமானே ! எத்தகையவருக்கும் இறைவனே ! என்மேல் இரக்கம்கொண்டு, உன்னைப் பாடும் பணியுடன், திருவடிகட்குத் தொண்டுசெய்யும் பணியும் எனக்கு வாய்க்கும்வகையில் என்னை அடிமையாக ஏற்றருள்க.

41. இனிய பசுந்தேனும் இன்னமுதும் பாலும்
கனிரசமும் கலந்து - நனிநின்
செவிக்(கு)அருத்த நாவலூர்ச் செம்மலோ ஆரூர்ப்
புவிக்(கு)அரசே நாயேன் புகல்.

**பொழிப்புரை** : திருவாரூரில் எழுந்தருளியுள்ள புவிக்குஅரசே ! நான்; இனியபுதுத்தேன், இனியஅமுதம், பால், பழச்சாறு ஆகியன கலந்த பாக்களை மிகுதியாக நின்செவிஅருந்தத் தருவதற்குத் திருநாவலூர் சுந்தரரா ? இல்லை. ஆயினும் அருளவேண்டுவது உன்கடமை. அருள்க.

**விளக்கம்** : “ கோழைமிட ராகக்கவி கோளுமில வாகஇசை கூடு வகையால், ஏழைஅடி யார்அவர்கள் யாவைசொன சொல்மகிழும் ஈசன் “ ( திருமுறை 2. திருவைகாவூர். 1 ) என்பதனால் அருள வேண்டினார்.

42. புகல்எனக்கு நீயன்றிப் புண்ணியா உண்டேல்
நகஎடுத்து நம்பா நவில்வாய் - ககனம்
தடவுபொழில் ஒற்றியூர்ச் சங்கரா நாயேன்
இடர்ஒழித்துக் காப்பாய் இனி.

**குறிப்புரை** : புகல்= அடைக்கலம் புகுமிடம். நக= நான்மகிழ. ககனம்= வானம். நம்பா= விரும்பத்தக்கவனே.

**பொழிப்புரை** : வானளாவிய சோலை சூழ்ந்த ஒற்றியூர்ச் சங்கரனே ! புண்ணியனே ! நான் அடைக்கலம் புகுமிடம் உன்னைத்தவிர வேறில்லை. அப்படி இருப்பின் நான்மகிழ எனக்குச் சொல்லியருள்க. அத்தகையோர் யாருமில்லை ஆதலின் நாயேனின் துன்பம் ஒழித்து நீ காத்தருள்க.

43. இனிஅடியேன் என்செய்வேன் யாரை இரப்பேன்
பனிமதியம் சூடும் பரமா - நுனியகதிர்
வேலோனைப் பெற்ற விமலாஆ ரூர்உமையாள்
பாலோய் என(து)இடுக்கண் பார்.

**பொழிப்புரை** : குளிர்ந்த பிறைசூடும் மேலானவனே ! கூர்மையான ஒளிபொருந்திய வேல்தாங்கிய அருள்தரு சண்முகநாதனைத் தந்த இயல்பாகவே மலமில்லாதவனே ! உமையவளைப் பாதியில் கொண்ட ஆரூரா ! நீஅருளாவிடின் இனி என்னசெய்வேன் ? காக்குமாறு யாரை வேண்டுவேன் ? என்துன்பம் நோக்கித் தீர்த்தருள்.

44: பாரளந்த மாயவனும் பங்கயத்து மேலவனும்
நீரளந்த செய்யசடை நின்மலா - காரளந்த
கண்டாஎன்(று) ஏத்தும் கபாலிஒற்றி யூரஅருட்
பண்டார மேகண்நோய் பாற்று.

**குறிப்புரை** : நீர் அளந்த= கங்கைபொருந்திய. கார்= கருமை.

அருட்பண்டாரம்= அருட்கருவூலம்.

**பொழிப்புரை** : உலகளந்த திருமாலும், தாமரையில் இருக்கும் நான்முகனும்; உன்னைக் " கங்கை பொருந்திய செஞ்சடையனே ! மலமில்லாதவனே ! கருமைபொருந்திய திருக்கழுத்தனே " என்று போற்றி வணங்குமாறு கபாலம் ஏந்தியவனே ! ஒற்றியூரில் எழுந்தருளியுள்ள அருட்கருவூலமே ! என்கண்நோய் தீர்த்தருள்க.

45. பாவலரும் காவலரும் பண்ணவரும் மண்ணவரும்
பூவலர்கொண்(டு) அர்ச்சித்துப் போற்றியே - நாவலரும்
சீர்உரைக்கும் தென்கமலைத் தெய்வமே உண்டோநின்
பேர்உரைக்கத் தீராப் பிணி.

**குறிப்புரை** : பண்ணவர்= கடவுளரென்ற பிற தேவர்கள். அலர்பூ= மலர்ந்த மலர்.

**பொழிப்புரை** : பாவல்ல புலவர்கள், அரசர்கள், கடவுளரென்ற பிறதேவர்கள், பூஉலகவர் ஆகிய அனைவரும், உன்னைமலர்ந்த மலர்கள்தூவி வழிபட, நாவலர்கள் சிறப்புகள் கூறிவணங்க உள்ள அழகிய திருவாரூர்த் தெய்வமே ! உனது திருப்பெயராகிய தியாகராசன் என்பதைக் கூறிய அளவில் தீராத நோய் உண்டோ ? பிணிஎல்லாம் தீரும். என்பிணியும் தீர்த்தருள்க.

46. பிணிஎன் செயும்நெஞ்சே பேதுறேல் ஒற்றி
மணிகண்டன் பாத மலரைக் - கணிகொண்டு
பூசித்து நின்று புனைந்(து)ஏத்தி எஞ்ஞான்றும்
நேசித்(து)ஓ வாமல் நினை.

**குறிப்புரை** : கணிகொண்டு= கணித்து - எண்ணிகொண்டு. புனைந்து= பாப்புனைந்து. ஓவாமல்= இடையறாது.

**பொழிப்புரை** : ஒற்றியூரில் எழுந்தருளியுள்ள கருமணிபோல்அழகிய திருக்கழுத்துடையவனது திருவடித் தாமரைமலர்களை மனத்தில் ஆழமாக எண்ணிக்கொண்டு, பூசித்து, பாப்புனைந்து போற்றி இடையறாது எப்போதும் அன்புடன் எண்ணுக. நம்மை நோய்கள் என்னசெய்யும் ? வருத்தா.

47. நினைவாயெஞ் ஞான்றும்எதிர் நின்றுகவி மாலை
புனைவாய்என் ஆரூர்ப் புனிதன் - எனைஅடிமை
கொண்டான் இனிஎன் குறைநெஞ்சே அனையன்
வண்டார் மலர்க்கழலை வாழ்த்து.

**குறிப்புரை** : புனைவாய்= சூட்டுவாயாக. அனையன்= அத்தகையவன் .

**பொழிப்புரை** : நெஞ்சமே ! என் ஆரூர்ப்புனிதன் என்னைஅடிமையாக ஏற்றுக் கொண்டான். இனிஉனக்கு எக்குறையுமில்லை.அத்தகையவனை எக்காலத்தும் நினைக, எதிர்சென்று நின்று கவிமாலை புனைந்து அவனுக்குச்

சூட்டுக, வண்டுகள் மொய்க்கும் புத்தம்புதிய தாமரைமலர் போன்ற அவனது திருவடிகளை வாழ்த்துக,

48. வாழ்த்துவது நின்புகழை மன்னுநின்தா ளில்சென்னி
தாழ்த்துவது நின்னைமனம் சார்த்துவதும் - சூழ்த்தபொழில்
செற்றஒற்றி யூர்வாழும் செல்வத் தியாகேசா
முற்றவமில் லார்க்(கு) எளிதாமோ.

**குறிப்புரை** : செற்ற= செறிந்த. முன்+ தவம்=முற்றவம்.

**பொழிப்புரை** : செறிந்த பொழில் சூழ்ந்ததிருஒற்றியூரில், அருட்செல்வ வடிவான ஒற்றியூர்த்தியாகேசனே ! உன்னை வாழ்த்துதல், பெருமைசால் உன்திருவடிகளில் தலைகுனிந்து வணங்குதல், உன்னை மனத்தில் பதித்தல் ஆகியன முன்னைத்தவம் இல்லாதார்க்கு எளியசெயலன்று - அரிது.

**விளக்கம்** : " நானேயோ தவம்செய்தேன் சிவாயநமஎனப்பெற்றேன், தேனாய்இன் அமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான், தானேவந்து எனது உள்ளம்புகுந்து அடியேற்கு அருள்செய்தான் " ( திருவாச. 553. )என்றது காண்க.

49. மோதகக்கை யான்பெற்ற முன்னவா நாயேன்செய்
பாதகம் முற்றும் அழல்பஞ்சன்றோ - கோதகநின்
அன்பர்களை ஆரூத்தே வாசிரியர் காவணத்துத்
துன்(பு)அகலக் கண்டு தொழின்.

**குறிப்புரை** : மோதகக் கையான்= மோதகம் ஏந்திய கையினனான விநாயகர். அழல் பஞ்சு= தீப்பட்ட பஞ்சு. கோதக=தலைமை சான்ற.

**பொழிப்புரை** : மோதகம் ஏந்திய விநாயகனைத் தோற்றுவித்த முழுமுதல்வனே ! தலைமைசான்றநின் அடியவர்களை ஆரூர்த்தேவாசிரியன் மண்டபத்தில் கண்டு என்பாதகங்கள் ஒழிய வணங்கினால் அச்செயலால் அவை தீயிற்பட்ட பஞ்சாகுமல்லவா ? எனவே அங்ஙனம் செய்வேன்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

50. தொழுவார் எழுவார் துதிப்பார் மதிப்பார்
அழுவார்கூத்(து) ஆடுவாராகி - வழுவாநின்
தொண்டர்அடித் தொண்டுசெயும் தூப்பே(று) எனக்(கு)ஒற்றி
அண்டர்பிரா னேஅருள்செய் யாய்.

**குறிப்புரை** : வழுவா= குற்றமற்ற. தூப்பேறு= தூய்மையான பேறு

**பொழிப்புரை** : ஒற்றியூரில் எழுந்தருளியுள்ளவனாகிய எல்லாத் தேவர்கட்கும் தலைவனே ! உன்திருவடிகளில் விழுந்து தொழுதும் , எழுந்துதுதித்தும், மதித்தும், உச்சமான பத்திமையால் அழுதும், கூத்தாடியும், பத்திமையில் வழுவாத நின்னடியார்களுக்குத் தொண்டுசெய்யும் தூய பேற்றினை எனக்கு அருள்வாயாக.

51. ஆயாச் சிறியேனும் ஆய்ந்தபெரி யோர்உறும்பே(று)
ஏயா மகிழநினை எய்தினேன் - தூயா
மதியும் அரவு(ம்)முடி வைத்தாய்ஆ ரூர்வாய்
நிதியே அதனை நினைந்து.

**குறிப்புரை** : ஆயா= பதி பசு பாசம் பற்றி ஆராயாத. ஏயா மகிழ= அடைந்து மகிழ.

**பொழிப்புரை** : அநாதியே மலமில்லாதவனே ! பிறையையும் நல்லபாம்பையும் சடையில் சூடியவனே ! ஆரூரில் உள்ள செல்வமே ! பதி பசு பாசம்பற்றிய ஆராய்ச்சிஅறிவு இல்லாத நானும், அவற்றை ஆய்ந்துசிறந்த அடியவர் பெற்ற பெரும்பேற்றினைப் பெற்றுமகிழ எண்ணி உன்னை அடைந்தேன். எனக்கு அருள்புரிக..

**இலக்கணக்குறிப்பு** : ஆயா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். ஆரூர்வாய் - வாய் - ஏழன் உருபு. ஏயா - செய்யா என்னும் வாய்பாட்டு வினை எச்சம்.

52. நின்னைத் துதித்திடுவேன் நின்வாமத்(து) ஏய்ந்தமலைப்
பொன்னைத் துதித்துப் புகழுவேன் - உன்னருமை
மக்களையும் நன்கு வழுத்துவேன் ஆள்ஒற்றி
அக்(கு)அரவம் பூண்(டு)அருள் ஐயா.

**குறிப்புரை** : மலைப்பொன்= பார்வதி தேவி. மக்கள்= பிள்ளைகளாகிய முருகன் விநாயகர். ஐயா நின்னைத்........ ஆள். அக்கு= அக்கமணி

**பொழிப்புரை** : ஒற்றியூரில் அக்கமணியும் நாகமும் அணிந்து அருளும் ஐயனே ! உன்னை வணங்குவேன், உன்னிடது பாகத்துப் பார்வதியை வணங்கிப் புகழ்வேன், அத்துடன் உன் அருமை மக்களையும் நன்கு வணங்குவேன். என்னை ஆண்டருள்க.

**விளக்கம்** : " புகழ்ச்சி விருப்பன் போலும் இகழ்ச்சியறியா என்பு அணிவோன் " என்பது நால்வர்நான்மணி மாலையாதலின் இங்ஙனம் கூறினார், " வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் " என்பது நினைக.

53. ஆவா அடியேன் அலந்தேன் அணிஆரூர்த்
தேவா தியாகச் செழுஞ்சுடரே - நோவாலே
எத்தனைநாள் அல்லற்பட்(டு) ஏங்குவேன் எம்பெருமான்
சித்தம் இரங்காய்என் செயல்.

**குறிப்புரை** : ஆவா - ஆ+ஆ= அந்தோ.என்செயல்= என்ன செய்வேன்.

**பொழிப்புரை** :அழகிய ஆரூர்த் தெய்வமே ! செழுமையான தியாகத்தின் சுடரே ! எம்தலைவனே ! நான் எத்தனைநாள்தான் துன்புற்று வருந்துவேன் ! நீ மனம்அருளாவிட்டால் அந்தோ என்னசெய்வேன் ! அருள்க.

54. செயல்ஒன்று மின்று திருவொற்றி யூர்வாழ்
புயலொன்று வேணிப் புனிதா - பயல்ஒன்று
வெற்பரசி யோடு மிளிர்காட்சி தந்தருள்தொங்
கல்பனையன் பாநாய கா.

**குறிப்புரை** : செயல் ஒன்றுமின்று= என்செயலால் ஆவது யாதொன்றும்

இல்லை. பயல்= கங்கைநீர். பயல்= பாதி. தொங்கல்=மலர்மாலை. பனையன் = பாம்பு. நாயகா பா= தலைவனே காத்தருள்க.

**பொழிப்புரை** : திருவொற்றியூரினனாய், கங்கையைச் சுமந்த சடையுடைய புனிதனே ! மலர்மாலையாகப் பாம்பினை அணிந்தவனே ! பாதித்திருமேனியில் மலைமகளுடன் ஒளிரும் காட்சிதந்தருள் ! என்செயலால் ஆவது யாதொன்றும் இல்லை. தலைவனே காத்தருள்க.

55. காட்டும் கதிரவன்நீ காணும்கண் நாயேன்என்
மாட்டு விளங்(கு)ஒளிநீ மாற்றினாய் - காட்டுதிறம்
எங்கும் விளங்குவாய் ஈசாதென் ஆரூரில்
தங்கும் உலகநா தா.

**குறிப்புரை** : என்மாட்டு= என்பால். ஒளி= கண்ணொளி. மாற்றினாய்= மறைத்தாய். ஈசன்= எப்பொருட்கும் இறைவன்.

**பொழிப்புரை** : உயிர்கட்குப் பொருள்களைக் காட்டும் தன்மையுடன் எல்லாவிடங்களிலும் விளங்குகிறவனே ! எப்பொருட்கும் இறைவனே ! அழகிய ஆரூரில் எழுந்தருளியுள்ள உலகங்கட்கெல்லாம் தலைவனே ! எனக்குப் பொருள்களைக் காணக்காட்டும் ஞாயிறு நீ ! அவற்றைக்காணும் கண், கீழானநாயேனாவேன், என்கண்ணின் காணும்தன்மையை - ஒளியை மறைத்து விட்டாயே ! ஒளிதந்தருள்க.

**விளக்கம்** : காட்ட நீயிருந்தும் எனக்குக் கண்ணொளி இல்லை. தந்தருள்க.

" காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே " ( சிவஞானபோதம். சூ.11 )

என்பதன் எதிரொலி இச்செய்யுள்.

56. தாதாநீ யேநின்பால் சார்ந்(து)இரப்போன் யான்உவந்து
நீதாஎன் றேன்என்னைக் நீக்கினால் - ஓதுகொடை
மற்(று))எங்குக் காட்டுவாய் மாதேவா ஒற்றியூர்
உற்றபர மாபுகல்ஏ தோ.

**குறிப்புரை** : தாதா= பெருங்கொடையாளி. நீதா= நீஅருள்புரி.

**பொழிப்புரை** : ஒற்றியூரில் எழுந்தருளியுள்ளவனே ! அனைவர்க்கும் மேலானவனே ! நீ பெருங்கொடையாளி. நான் உன்னிடம் யாசிப்பவன். நான் உன்னிடம் மகிழ்ந்து நீஅருள்புரி என்று வேண்டுகிறேன். நீஅருளாவிடில் உன்கொடைத்திறத்தை எங்குக் காட்டுவாய் ? மாதேவனே எனக்குப் புகலிடமேது ? நீயஏன் புகலிடம். அருள்புரிக.

57. ஓவென்(று) அலறி ஒளிஅடியேன் கண்ணிற்குத்
தாஎன்றேன் நீதிரத்தல் தான்நன்றோ - ஏவினான்
என்றுசினந்(து) ஒன்(று)உரையாய் ஏர்ப்பரவை யார்மனைக்(கு)ஏன்
சென்றாய் கமலைஅமு தே.

**குறிப்புரை** : கமலைஅமுதே= கமலாலயத்து அமுதமே ! ஏவினான்= சுந்தரர் உனக்குக் கட்டளையிட்டான். ஏர்= அழகு. திரத்தல்= மறுத்தல்.

**பொழிப்புரை** : சுந்தரர் உனக்கு இட்ட கட்டளைக்குச் சினந்துபேசாது அழகிய பரவையார் வீட்டுக்குச் சென்றதேன் ? அவர் ஏவலை நிறைவேற்ற அல்லவா ? இப்போது நான் ஓ என்றுஅலறி அடியேன் கண்ணுக்குப் பார்வை தந்தருள் என்று வேண்டுகிறேன். என் கண்ணுக்கு ஒளிதர மறுப்பது நன்றல்லவே ! ஒளி அருள்க.

**விளக்கம்** : கட்டளைக்கு அருளிய நீ என் வேண்டுதலை மறுக்காதே. அருள்க என்கிறார்.

58. தேவர்பர(வு) ஒற்றியூர்ச் செல்வாநின் செஞ்செவிக்கண்
மூவ(ர்)தமி ழோயான் மொழிபுன்சொல் - பாவும்
புகுமேயாழ் ஓசையொடு புன்மான் ஒலியும்
நகுமே அதனுள் நயந்து.

**குறிப்புரை** : செஞ்செவி= அழகியசெவி. புன்சொல்பா= அற்பச்சொற்பா. நகுமே= ஏளனம் செய்யும். அதனால் நயந்து புகுமே= அதனால் விருப்புடன் ஏறாது.

**பொழிப்புரை** : தேவர்கள் எல்லாரும் வணங்கும் ஒற்றியூர்ச்செல்வனே ! உனது அழகிய செவிகளில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் பாடிய பாடல்களுடன், நான் கூறும் அற்பச்சொற்களால் ஆன விலங்கின் ஒலிபோன்ற பாடலும் ஏறுமோ ? மூவரின் யாழிசை ஒத்த பாடல்கள் உன்செவிகளில் முன்னரே ஏறியுள்ளதால், அற்ப விலங்கின் ஒலிஒத்த என்பாடலை அவை ஏளனம் செய்யுமென்பதால் இவை விருப்புடன் ஏறமாட்டா. ஆதலின் என்பாடலை நீ கேட்டருளவில்லை போலும்.

59. நயந்துகேள் நாயேன் நவில்ஒருவிண் ணப்பம்
பயந்தவிர நின்பேர் பரித்தேன் - வயங்(கு)ஆரூர்
எந்தாய்யான் கண்ணிழந்தேன் என்றாலோ யாவர்க்கும்
தந்தாய்நீ கண்ணிழந்தாய் தான்.

**குறிப்புரை** : வயங்கு= அருள்விளங்கும். எந்தாய்= எம் தாயே / எம் தந்தையே. தந்தாய்= ஒளிஅருளினாய். நயந்து= விருப்புடன். பயம்=அச்சம். பரித்தேன்= தாங்கினேன். கண்ணிழந்தாய் தான்= கருணை இழந்தவனேயாம்.

**பொழிப்புரை** : அருள்விளங்கும் எமது ஆரூர்த்தாயே / எமதுதந்தையே நான்சொல்லும் ஒருவேண்டுகோளை விருப்புடன் கேட்டருள்க. என் அச்சம் தவிர உனது திருப்பெயராம் தியாகராசன் என்பதைத் தாங்கினேன். ஆனால் கண்பார்வை இழந்தேன். அனைவர்க்கும் பார்வை அருள்பவன் நீ என்றால் என்மாட்டுக் காட்டவேண்டிய கருணை இழந்தவனாவாய். எனக்குப் பார்வை தரக் கருணைகாட்டு.

60. தானக் களிற்றின் தலைமேல் உலாப்போதும்
வானத்(து)இறை பிரமன் மால்வாழ்வும் - ஏனத்தின்
கோடணிந்த ஒற்றியூர்க் கோமான்நின் தொண்டுசெயும்
பா(டு)அணிந்த வாழ்விற்கொப் பா.

**குறிப்புரை** : தானம்= தேவருலகம். களிறு= அயிராவதம் என்னும் யானை. வானத்து இறை= தேவர்க்கரசன் - தேவேந்திரன். பாடுஅணிந்த=

பெருமையை அனுபவிக்கும். ஒப்பா= ஒப்பாகா.

**பொழிப்புரை** : பன்றியின் கொம்பினை அணிந்த ஒற்றியூர் அரசனே ! தேவருலக ஆண்யானையாகிய அயிராவதத்தின்மேல் ஏறி உலாவரும் தேவேந்திரன், நான்முகன், திருமால் ஆகியோர்வாழ்வும், உனக்குத்தொண்டு செய்வதால் அடையும் பெருமையை அனுபவிக்கும் திருத்தொண்டர் வாழ்வுக்கு ஒப்பாகமாட்டா.

**விளக்கம்** : தேவேந்திரன் முதலியோர் பிறத்தற்குரியர். திருத்தொண்டர் பிறவாப்பேரின்ப அனுபவத்திற்கு - வீடுபேற்றிற்குரியராதலின் அவ்வாழ்வுகள் திருத்தொண்டர் வாழ்வுக்கு ஒப்பாகா என்றார்.

**61.** பாடக்கண் பாவலர்க்குப் பண்டுதந்தாய் இன்(று)உன்னை
நாடக்கண் நாயேற்கு நன்(கு)உதவின் - நீ(டு)உன்
புகழ்புதிதாம் ஆரூர்ப் புனிதா அஃதன்றி
இகழ்பவரோ யாரும் இலர்.

**குறிப்புரை** : பாவலர்= சுந்தரர். நாட= விருப்புடன் காண. நீடு= தொன்று தொட்டுவரும்

**பொழிப்புரை** : ஆரூரா ! உன்னைப்பாட, சுந்தரர்க்கு முன்னாளில் பார்வை யளித்தாய். இன்று உன்னை விருப்புடன் காணக் கீழானஎனக்குப் பார்வைதரின் உன்புகழ் புதுப்பிக்கப்பெறும். இஃதன்றி உன்னை எல்லாரும் புகழ்வாரேதவிர இகழார்.

**விளக்கம்** : சுந்தரர் மற்றைக் கண்ணும் பெற்றது : ( பெரியபு.ஏயர்கோன். 308 - 310 )

**62.** இல்லை எனஇரந்தார்க்(கு) ஈயாமை புண்ணியமோ
கொல்லை விடையூரும் குழகனே - நல்லை
எனவுரைப்பார் நிற்(கு)இன்றோ ஈசனே ஒற்றிப்
பனவனே ஈத்துவக்கும் பண்பு.

**குறிப்புரை** : கொல்லை விடை= முல்லைநிலத்துக்குரிய காளை. குழகன்= அழகன். பனவன்= வேதியன். ஈத்துவக்கும்= கொடுத்து மகிழும். நல்லை= நல்லவன்.

**பொழிப்புரை** : முல்லைநிலத்துக்குரிய விடையில் ஊர்ந்துவரும் அழகனே ! ஒற்றியூரில் எழுந்தருளியுள்ள வேதியனே ! இல்லை என்று இரப்பார்க்கு உரியதைத்தராமை புண்ணியமன்று என்றும், கொடுத்துமகிழும் பண்பினால் நீ நல்லவனாகு என்று உனக்கு எடுத்துரைப்பார் யாரும் இல்லயோ ! அதனால்தான் நான்இரந்தும் எனக்குஅருளவில்லையோ ? அருள்க.

**விளக்கம்** : வேதியன் : “வேதம் ஓதி வெண்ணூல் பூண்டு வெள்ளை எருது ஏறி “ ( திருமு. 1. திருப்பழனம். 1.)

**63.** பண்புடைஎந் தாய்நாவற் பாவலர்க்குத் தோழமைகொள்
நண்புடையான் என்றுவிழி நல்கினாய் - நண்புடையேன்
அல்லேன் எனினும் அடிமையான் ஆரூர்வாழ்
நல்லாய் எனக்கும்விழி நல்கு.

**குறிப்புரை** : நாவல்= திருநாவலூர். நண்புடையான்= நண்பன். விழி= பார்வை.

**பொழிப்புரை** : ஆரூரில் எழுந்தருளியுள்ள நல்லவனே ! பண்புடைய எமது தாயே ! நாவலூர்ச் சுந்தரர், நீதோழமைகொண்ட நண்பன் என்பதால் அவர் இழந்தபார்வையை மீண்டும் அருளினாய். நான் உனக்கு நண்பனல்லனாயினும் உன்அடிமை ஆதலால் எனக்கும் பார்வை அருள்க.

**விளக்கம்** : சுந்தரர்க்குச் சிவன் தோழன் : " ஏழிசையாய் இசைப் பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய் " ( சுந்தரர், ஆரூர். 10 )

**இலக்கணக்குறிப்பு** : எனக்கும் - உம்மை, இறந்ததுதழுவியது.

64. நல்குர(வு)எஞ் ஞான்றும் நணுகாது நால்வர்க்குச்
சொல்குரவு பூண்ட சுடர்மதியான் - பல்(கு)உரவு
பாவைதரும் ஒற்றிப் பரமன் புகழ்பாடும்
நாவையுடை யார்பால் நயந்து.

**குறிப்புரை** : நால்வர்= ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், வாதவூரராகிய நால்வர். சொல் குரவு= சொல்லைமணமாக. பூண்ட= கொண்ட.. பல்கு உரவு= பெருகும் ஆற்றல். பாவை= திருஒற்றியூர் அருள்தரு வடிவுடையம்மை. பரமன்= அருள்தரு மாணிக்கத்தியாகர்.

**பொழிப்புரை** : சமயகுரவர் நால்வர் சொல்லை நறுமணமாகக் கொண்ட பிறைசூடிய பெருமான்ஆகிய ஒற்றியூர் அருள்தரு மாணிக்கத்தியாகரின் புகழ்பாடும் நாவுடையவரை விரும்பி, பெருகுமாற்றலை அவர்கட்கு விருப்புடன் அருள்தரு வடிவுடையம்மை அருள்வாள்.

**விளக்கம்** : அப்பனின்அருள் - வற்றாமுற்றா இன்பம், அம்மைமூலமே கைகூடும் : " தாயுடன் சேர்ந்துபின் தாதையைகூடித் தாயைமறந்து ஏயுமதே நிட்டை " ( பட்டினத்தார். )

65. நயனம் களிக்க நடனம்செய் நாதா
பயல்நங்கை வைத்த பரமா - வியல்நஞ்சம்
உண்டஆ ரூரா உறுநோய்ஒ ழித்(து)என்னைக்
கண்டுகொளல் நிற்கே கடன்.

**குறிப்புரை** : நயனம் களிக்க= காண்பவர் கண்கள் களிப்புற. பயல்= பாதி உடம்பில். வியல்=அகன்ற - கொடுமையில் பெரிய. கண்டுகொளல்= கண்டு அருளுதல்.

**பொழிப்புரை** : காண்பவர்கண்கள் களிப்புறத் திருக்கூத்தாடும் தலைவா! அம்மையை உடம்பின் பாதியில் வைத்த மேலானவனே! கொடுமையில் பெரிய நஞ்சினை உண்ட ஆரூரா ! எனக்குஉற்ற கண்நோயினைத் தீர்த்து, என்னைக்கண்டு அருளுதல் உன்கடமை. அருள்க.

66. கடல்நஞ்(சு) அமுதாக்கக் கற்றாய் தமியேன்
உடல்நஞ்(சு) அனநோய் ஒழிக்க - விடையோனே
கல்லாய் எனில்என் கரைவாய்தென் ஒற்றிவாழ்
மல்லாய்எல் லாம்வல்ல வா

**குறிப்புரை** : நஞ்சுஅன= விடம்போன்ற. ஒழிக்கக் கல்லாயெனில்

கரைவாய்.= தீர்க்க அறியாய் என்றால் கூறு. மல்லாய்= பெருமையிற் சிறந்தவனே.

**பொழிப்புரை** : அழகிய ஒற்றியூரில் எழுந்தருளி, ஊர்தியும், கொடி இலச்சினையும் விடையாகக் கொண்டவனே ! பாற்கடல் நஞ்சினை உண்டு அதனை அமுதாக்கக் கற்றவனே ! ஆதரவற்ற என் உடலில் பொருந்தியுள்ள நஞ்சுஒத்த கண்ணோயினைத் தீர்ப்பாய், தீர்க்கக் கற்கவில்லை என்றால் சொல். பெருமையில் சிறந்தவனே ! அனைத்தும் செய்யவல்லவன் நீ.. கண்நோயாம் நஞ்சினைத் தீர்த்தருள்.

**விளக்கம்** : கடல்நஞ்சின் கொடுமையத் தீர்த்த உன்னால், என்னுடல் நஞ்சாம் கண்ணோய் தீர்க்கமுடியும் . தீர்த்தருள் என்றார்.

67. வாயே உனக்(கு)இதன்மேல் வாழ்(வு)என்தென் ஆரூர்வாழ்
தாயே அனைத்(து)உயிர்க்கும் தந்தையே - நாயேனைக்
காப்பாய் கருணைக் கடலேஎன்(று) இன்தமிழால்
பாப்பாடில் போமே படர்.

**பொழிப்புரை** : அனைத்து உயிர்கட்கும் தாயும் தந்தையுமான அழகிய ஆரூரில் எழுந்தருளியுள்ளவனை, நாயேனைக் காப்பாய் கருணைகடலே என்று இனிய தமிழால் பாக்கள்பாடினால் - படர்கள் - துன்பங்கள் போம். .எனது வாயே இதனைவிட உனக்கு நல்வாழ்வு வேறில்லை.. பாடு.

68. படஅரவத் தொடுபுலிப் பாதனும் கண்(டு)ஏத்த
நடஅரவம் காட்டுகழல் நம்பன் - தடமதில்சூழ்
ஒற்றியூர் மேவும் ஒருவற் பணிந்(து)ஏத்தும்
பற்(று)உளார்க்(கு) உண்டோ பயம்.

**குறிப்புரை** : படஅரவம்= பதஞ்சலியார். புலிப்பாதர்= வியாக்ரபாதர். நட அரவம் காட்டுகழல்= நடனமிடும் ஒலியை உணர்த்தும் கழலணிந்த திருவடி. தட= பெரிய. பற்று= ஆசை.

**பொழிப்புரை** : பதஞ்சலிமுனிவரும் புலிக்கால்முனிவரும் கண்டுவணங்க, பெரிய மதில்கள் சூழ்ந்த ஒற்றியூரில் எழுந்தருளி,தனது நடனஒலியை உணர்த்தும் கழலணிந்த திருவடிகளுடைய ஒப்பற்றவனை வணங்கும் ஆசையுடையவர்க்கு எவ்வகை அச்சமுமில்லை.

69. பயல்மதியம் சென்னி பரித்தாய்வெற்(பு) ஈன்ற
கயல்விழிஓர் பாகம் கலந்தாய் - வியன்ஆரூர்க்
கம்பிக்கா தாகருணை காட்டியே நாயேனை
நம்பிக்கா தாநன் னலம்.

**குறிப்புரை** : பயல்மதியம்= பாதி - பிறை. பரித்தாய்= தரித்தாய். வியன்= பெருமை. கம்பி= குண்டலம். நம்பிக் கா. நன்நலம் தா.

**பொழிப்புரை** : பெருமைபொருந்திய திருவாரூரில் குண்டலம் அணிந்து எழுந்தருளியுள்ளவனே ! பிறைமதியைச் சடையில் தரித்தவனே ! மலைமகளை உடம்பின் பாதியில் பெற்றவனே ! கீழான என்னை நம்பி நன்மைபொருந்திய நலங்கள் அருள்.

**விளக்கம்** : மூன்றாம் பிறையைப் பாதிமதி என்பது இலக்கியவழக்கு : " பாதிமதிநதி போதும்அணிசடை நாதர் " ( திருப்புகழ் )

70. நலமொன்று உனக்(கு)உரைப்பேன் நன்நெஞ்சே கேட்டி
பிலம்ஒன்(று) அர(வு)அணிந்த பெம்மான் - கலம்ஒன்று
வாரிசூழ் ஒற்றியூர் வாழ்வான் பெருங்கருணை
நாரிபா கன்கழலே நம்பு.

**குறிப்புரை** : பிலம்= பாதாளவுலகம். கலம்= மரக்கலம். வாரி= கடல். நாரி= பெண் - உமையம்மை.

**பொழிப்புரை** : எனது நல்ல நெஞ்சமே ! உனக்கு நலம்தரும் ஒருசெய்தி கூறுகிறேன் கேள். பாதாளவுலகத்துப் பாம்பினை அணிகலனாக அணிந்தவனும், மரக்கலன்களுடைய கடல்சூழ்ந்த ஒற்றியூரினனும் அருள்வடிவான உமையம்மையைத் தன்பாதிஉடம்பில் கொண்டவனும் ஆகிய பெருமானின் திருவடிகளை நம்பித்தொழு.

71. நம்பினேன் உன்னை நழுவவிடேல் வெந்நோயால்
வெம்பினேன் வீதி விடங்கனே - தும்பிக்
கரத்தானோ யானும்ஒரு கால்முளைமண் உண்ட
சரத்தோய் அருள்கமலே சா.

**குறிப்புரை** : வெந்நோய்= பார்வை மறைக்கும் நோய் - படலம். கால்முளை= மகன். மண்ணுண்டசரம்= திருமால்.

**பொழிப்புரை** : வீதிவிடங்கன் என்ற திருப்பெயர் பெற்றவனே! மண்ணுண்ட திருமாலினை முப்புரஎரிக்கு அம்பாக ஏந்தியவனே ! கமலாலயப் பெருமானே ! உன்னை நம்பியுள்ளேன், என்னைநழுவவிடாதே ! கொடிய பார்வைமறைக்கும் படலத்தால் நொந்துளேன், உன்மகன் விநாயகன்மட்டுமா ? உனக்கு நானும் ஒருமகன், அருள்புரிக.

72. சார்ந்தோர்ப் புரக்கும் தயாநிதிநீ யேஎனமுற்(று)
ஓர்ந்தோர் சொலல்கேட்(டு) உனையடைந்தேன் - வார்ந்தமலைச்
சாபாதென் ஒற்றிநா டாகமுன் கூடலிலே
மாபாவி யைப்புரந்த வா.

**குறிப்புரை** : சார்ந்தோர்= அடைக்கலம்புகுந்தவர். தயாநிதி= கருணைச் செல்வன். ஓர்ந்தோர்= ஆராய்ந்து அறிந்தவர்கள். வார்ந்த= நீண்ட. சா பா= வில்லாக ஏந்தியவனே. மாபாவி= தாயைக் கூடித் தந்தையைக் கொன்றவன். ( திருவிளையாடற் புராணச்செய்திஇது.}

**பொழிப்புரை** : நீண்டமேருமலையை வில்லாக ஏந்தியவனே ! முன்னாளில் மதுரைநகரில் தாயைக்கூடித் தந்தையைக் கொன்று உன்னை அடைக்கலம் புகுந்த மாபாவியைக் காத்தவன் நீஆதலால் உன்னைச் சார்ந்தவரைக் காக்கும் கருணைச்செல்வன் நீ. ஆகையால் உன்னைச் சரணடைந்தேன். அத்தகு பாவியில்லை நான். என்னைக்காத்தருள்க.

73. வாழ்(வு)உனக்(கு)ஈ சன்புகழை வாழ்த்தலே வன்னெஞ்சே
தாழ்(வு)உனக்(கு)அன் னோன்புகழைச் சாற்றாமை - ஏழ்புவியும்
போற்றும் கமலைப் புராணனைவாய் வந்தபடி

சாற்றுதி ஈ(து)உனக்குத் தான்.

**குறிப்புரரை** : புராணன்= பழைமையானவன். வாய்க்குவந்தபடி= உனக்கு வாய்த்த இசையில். சாற்று= புகழ்ந்துபாடு.

**பொழிப்புரை** : உருகாத மனமே ! ஏழுலகங்களும் போற்றுமாறு ஆரூரில் எழுந்தருளியுள்ள முன்னை - அநாதியானவனை உன்வாய்க்கு வந்தபடி பாடு. அந்த ஈசன் புகழை வாழ்த்துவதே உனக்கு நல்வாழ்வுதரும். அவனை வாழ்த்தாமையே உனக்குத்தாழ்வு தரும். இதனை உன்நலத்தின் பொருட்டே கூறுகிறேன். கேட்டுநட.

**74.** தானே தனக்குச் சரியா(ம்)நின் றாள்மலர்க்கு
யானே சரணம் அடைந்(து)அடிமை - ஆனேன்
இனிஎன் செயினும்செய் எம்பெருமான் இன்பம்
கனிஒற்றி யூர்ச்சங்க ரா.

**குறிப்புரை** : தானே தனக்குச் சரி= தனக்குத்தானே ஒப்புமை. இன்பம்கனி= பேரின்பம் கனிந்த.

**பொழிப்புரை** : எமக்குத் தலைவனே ! பேரின்பமே கனிந்த ஒற்றியூர்ச் சங்கரனே ! தனக்குத்தானே ஒப்புமையான உனது திருவடித்தமரைகளுக்கு நான் அடைக்கலப்பொருளாய் அடிமையானேன். இனிமேல்நீ என்னை என்ன செய்தாலும் செய்தருள்க.

**விளக்கம்** : " நின்னாவார் பிறரின்றி நீயே ஆனாய் " ( திருமு. 6. தனித். 7.) அடிமையை எசமான் எப்படியும்ஆளலாம் என்பதால் " இனிஎன்செயினும் செய் " என்றார். " என்னதோ இங்கு அதிகாரம் காயத்துஇடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே " ( திருவாச. 501.) " இருந்து எனைஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை என்னினல்லால் விருந்தினனேனை விடுதிகண்டாய் " ( திருவாச. 122 )

**75.** கராவாய் மதலைவரக் கண்டாய்தென் ஆரூர்ப்
பிரானேஆற்(று) இட்டசெழும் பீதம் - பராவக்
குளத்துவரச் செய்தாய் கொடியேன்கண் தந்தால்
வளத்(து)அவையோ(டு) ஒன்றாம்அம் மா.

**குறிப்புரை** : கரா= முதலை. மதலை= பிள்ளை. பீதம்= பொன். பராவ= அனைவரும்போற்ற. வளத்து அவை= அருள்வளமான அவற்றுடன். ஒன்றாம்= மற்றொன்றுமாகும்.

**பொழிப்புரை** : அழகிய ஆரூர்ப்பிரானே ! நீ சுந்தரர்க்காகமுதலையுண்ட பிள்ளையை உயிருடன் வரச்செய்தாய்; ஆற்றில் இட்ட மாற்றுயர்ந்த பொன்னை அனைவரும் போற்ற அவ்வாறே குளத்தில் வரச்செய்தாய். இப்போது கொடியவனான எனக்குப் பார்வைஅருளினால் அருள்வளமார்ந்த அவற்றுடன் இதுவும் ஒன்றாகச் சேரும். அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : அம்மா - வியப்பிடைச்சொல்.

**76.** மாதேவா ஒற்றியூர் வள்ளால் அடியார்செய்
கோதே கொளாதகுணக் குன்றமே - சூ(து)ஏய்
முலையாள் அமர்பாகா முன்னவா தீயேன்

உலையா(து) அருளை உதவு.

**குறிப்புரை** : கோதே கொளாத= குற்றங்களைக் குற்றமாகக் கருதாத. சூது ஏய்= சூதாடுகருவி.ஒத்த. முன்னவா= அநாதியனே. உலையாது= வருந்தாது.

**பொழிப்புரை** : அனைவர்க்கும் மேலான தேவனே ! ஒற்றியூர் வள்ளலே ! அடியவர் செய்த குற்றத்தையும் குற்றமாகக்கருதாத குணக்குன்றமே ! சூதாடுகருவி ஒத்த முலைகளுடைய உமையவள் உனது இடப்பாகம் இருக்கப்பெற்றவனே ! அநாதியனே ! தீயவனான நான் வருந்தாதவாறு உன் அருளைத்தந்தருள்க.

77. உதரம் சுமந்த உலகளந்தோன் மார்பத்(து)
அதரம் சிவந்தாள் அகலாக் - குதர
நிகர்மா ளிகைஆரூர் நின்மலா என்று
பகர்வார்துன்(பு) ஓடும் பறந்து.

**குறிப்புரை** : உதரம்= வயிறு. உலகளந்தோன்= வாமனனாய் உலகளந்த திருமால். அதரம்= உதடு. சிவந்தாள்= சிவந்த திருமகள். குதரம்= மலை.

**பொழிப்புரை** : மண்ணாலான உலகைத் தன்வயிற்றில் சுமந்த திருமாலின் மார்பினை அகலாத சிவந்த உதடுகளையுடைய திருமகள் அகலாத மலைபோன்ற மாளிகைகள் உடைய ஆரூர் நின்மலனே ! என்று கூறித் தொழுவார் துன்பங்கள் பறந்து ஓடும். ( திருமால் கண்ணனாகத் தோன்றிய போது மண்ணுண்டான் )

78. பறவையூர் தேவர் பரவும் புனிதா
நறவைஆர் கொன்றைஅணி நாதா - உறவை
அடையார் புரம்செற்ற அண்ணாஎன் ஒற்றி
உடையாய் எனைஆள் உவந்து.

**குறிப்புரை** : பறவை ஊர் தேவர்= அன்னம், கருடன் ஆகிய பறவைகளில் ஏறிவரும் நான்முகன், திருமால். நறவு= தேன். உறவை அடையார்= உன் அன்பைப்பெறாதவர். புரம்= முக்கோட்டை. செற்ற= எரித்தழித்த அண்ணா= எல்லார்க்கும் மூத்தவனே. என்= என்று அழைக்கும். எனை உவந்து ஆள்.

**பொழிப்புரை** : பறவைகளின்மேல் ஏறிவரும் நான்முகன் திருமால் முதலியோர் வணங்கும் புனிதனே ! தேன்பொருந்திய கொன்றைமாலை அணிந்த தலைவா ! உனது அன்பைப்பெறாதவர்களின் முப்புரங்களை எரித்து அழித்த மூத்தவனே ! ஒற்றியூரானே என்று அழைக்கும் என்னை மகிழ்வுடன் ஆண்டருள்க.

79. உவந்(து)ஆலம் உண்(டு)அமரர் ஊர்புரந்த நம்பா
தவம் தானம் சற்றேனும் சாரேன் - சிவந்(து)ஆலம்
அன்னயமன் தோன்றில் அறியேன்ஆ ரூரரசே
உன்னையன்றி வேறுதுணை ஒன்று.

**குறிப்புரை** : சிவந்து= சினம்கொண்டு. ஆலம்= நஞ்சு. ஊர்= ஊரவர் - தேவர்கள். நம்பன்= விரும்பத்தக்கவன். தவம் தானம்= தன்னை உயர்த்தும்

தவமோ பிறரை உயர்த்தும் தானமோ.

**பொழிப்புரை** : நஞ்சினை மகிழ்ந்து உண்டு தேவர்களைக் காத்த விரும்பத்தக்கவனே ! நான் என்னைஉயர்த்தும் தவமோ, பிறரை உயர்த்தும் தானமோ சிறிதும் செய்யவில்லை. நஞ்சினை ஒத்த யமன் என்மேல் சினம்கொண்டு எனது உயிர்கவர வந்தால் ஆரூர் அரசே ! உன்னையன்றி என்னைக்காக்கும் துணை வேறுயாரையும் அறியேன். காத்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : ஊர் - இடவாகுபெயர். சற்றேனும் - உம்மை முற்றும்மை. வேறு - இருதிணை ஐம்பால் மூவிடப் பொதுவினை.

80. ஒன்றுபுகல் வேன்நன்(று) உணர்நெஞ்சே நீஉனக்கு
நன்று புரிதற்கு நாடினால் - வன்திறல்மா
ஏறுடையான் ஒற்றியூர் எம்மான்தன் சென்னிமிசை
யாறுடையான் சீரையே ஆய்.

**குறிப்புரை** : நன்று= நன்மை. திறல்மா ஏறு= ஆற்றல் மிக்க விடை. யாறு= ஆறு.

**பொழிப்புரை** : நெஞ்சமே ! உனக்கு நன்மைதரும் ஒரு செய்தி கூறுகிறேன். உனக்கு நன்மை செய்துகொள்ள நீ விரும்பினால், மிக்க ஆற்றல்வாய்ந்த விடையுடையவனும், ஒற்றியூர்த் தலைவனும், தன் சடையில் கங்கை தரித்தவனுமாகிய அவனது சிறப்புகளையே ஆய்க.

81. ஆடரவக் கிண்கிணிக்கால் ஐயா பிறையோடு
சூ(டு)அரவச் செஞ்சடையாய் தொண்டர்சீர் - பா(டு)அரவம்
ஓவாத் திருவாரூர் உத்தமா நாயேனைக்
காவாமை நன்றோ கழறு.

**குறிப்புரை** : ஆடுஅரவம்= ஆடும்போது ஒலிக்கும்.. கிண்கிணி= கிண்கிணென்று ஒலிக்கும் ஒருவகைக் கால்அணிகலன். கழறு= கூறுக.

**பொழிப்புரை** : ஆடும்போது ஒலிக்கும் கிண்கிணியைக் கால்களில் அணிந்த தலைவனே ! மூன்றாம்பிறையுடன் நல்லபாம்பினையும் சூடிய செஞ்சடையனே ! உன்சிறப்புகளைப் பாடும் தொண்டர்ஒலி இடையறாது ஒலிக்கும் திருவாரூர் உத்தமனே ! கீழானஎன்னைக் காவாதிருத்தல் நன்றோ? நன்றன்று. காத்தருள்க.

82. கழல்பணியக் கல்லார் கருதுபுகழ் சொல்லார்
விழலுக் கிறைத்தே விளிவார் - குழல்மொழியாள்
வாமத்தான் திங்கள் வளர்சடையான் பொன்இதழித்
தாமத்தான் ஒற்றிநகர் சார்ந்து.

**குறிப்புரை** : கருது= போற்றத்தக்க. விழலுக்கு இறைத்தே விளிவார்= பயனற்ற செயல்செய்து சாவார். குழல்= புல்லாங்குழல்.

**பொழிப்புரை** : புல்லாங்குழல்இசைஒத்த இன்மொழிபேசும்உமையவளை இடப்பாகம் கொண்டவனும், பிறைவளரும்நீண்ட சடையுடையவனும், பொன்போலும் அழகிய கொன்றைமலர் மாலை அணிந்தவனும் ஆகிய பெருமானின் ஒற்றியூர்சென்று, அவன் திருவடிகளை வணங்கக்கல்லாதவரும், போற்றத்தக்க அவன் புகழ் பேசாதவரும் பயனற்ற பிறசெயல் செய்து சாவர்.

**விளக்கம்** : பிறப்பின் பயன்ஆகிய வீடுபேற்றுக்குரிய இவ்வழிகளில் முயலாமையின் பயனின்றிவாழ்ந்து சாவார் என்றார்.

83. துன்பமெலாம் நீத்தோடும் சுடுநோய் அறத்துறந்தோம்
இன்பமெலாம் எய்த இனித்தடைஎன் - அன்பர்
உளத்தான்தென் ஆரூர்வா ழும்பிரான் நஞ்(சு)ஆர்
களத்தான் புகழ்நாக் கலந்து.

**குறிப்புரை** : நீத்து= விட்டு. சுடுநோய்= துன்புறுத்தும் பிறவிநோய்.

**பொழிப்புரை** : அடியவர் உள்ளத்தவனும், அழகிய ஆரூரில் வாழும் தலைவனும், நஞ்சினைக் கழுத்தில் நிறுத்தியவனும் ஆகிய பெருமானின் புகழை நான்என் நாவில்கலந்ததால் - பாடியதால், துன்பங்கள் எல்லாம் என்னைவிட்டோடும், வருத்தும் பிறவிநோயினை முற்றாக விட்டோம், இவற்றால் எல்லாவகை இன்பங்களையும் நான் அனுபவிக்கத் தடையில்லை.

84. கரத்தில் அபய வரதம் கலந்தாய்
சிரத்தில் சிரமாலை சேர்த்தாய் - வரத்தை
அருளாய்அஞ் சேலென்(று) அடியேனுக்(கு) என்னோ
தெருளாளா ஒற்றிஅர சே.

**குறிப்புரை** : தெருள்= தெளிந்த அறிவு - ஞானம்.

**பொழிப்புரை** : உன்னிரு கைகளால் அபய வரதம் காட்டி, தலையில் தலைமாலை அணிந்தவனே ! ஞானவடிவனே ! அடியேனை அஞ்சேல் என்று கூறி, மேலானவற்றை அருளாததேன் ? அருள்க.

85. சேல்ஏந்தி னோன்தீயத் தீய்த்த பழிதீர
வேல்ஏந்தி னோனை விதித்தஅழற் - பாலவிழிப்
பித்தன் கமலைப் பிரான்எதனால் தீர்ப்பானோ
பத்தர்க்(கு) அருளாப் பழி.

**குறிப்புரை** : சேல் ஏந்தினோன்= மீன்கொடியுடைய மன்மதன். பாலவிழி= நெற்றிக்கண்.

**பொழிப்புரை** : நெற்றிக்கண்ணால் மீன்கொடியுடைய மன்மதனை நீறாகுமாறு எரித்ததாலான பழியை, நெற்றிக்கண்ணாலேயே அருள்தரு சண்முகநாதப் பெருமானைத் தோற்றுவித்துத் தீர்த்துக்கொண்டபித்தனாகிய ஆரூர்ப்பெருமான் தன்பக்தனான எனக்கு இதுவரை அருளாத பழியை எச்செயலால் தீர்த்துக்கொள்வான் ?

86. பழியஞ்சி என்றொருபேர் பண்டுகொண்டாய் அன்பர்
வழியஞ்சி அஞ்சிக்கால் வைத்துக் - குழியஞ்சி
ஆழப் புரிந்துபழிக்(கு) அஞ்சான் எனும்பழியின்
மூழ்கல்ஒற்றி யாய்முறையா மோ.

**குறிப்புரை** : வழிஅஞ்சி= அறவழியில் விலக அஞ்சி. கால்வைத்து= நடந்து. குழியஞ்சி ஆழப் புரிந்து= துன்பக் குழியில் விழச்செய்து.

**பொழிப்புரை** : ஒற்றியூருடையவனே ! நீ முற்காலத்தில் பழிக்கு அஞ்சுகிறவன் என்ற பெயர்பெற்றாய். ( திருவிளையாடற் புராணம். பழியஞ்சிய படலம் )ஆனால்இப்போது, உன்அடியவர்களைப் பழிக்கு

அஞ்சிநடக்கச்செய்து, அதனால் துன்பக்குழியில் விழச்செய்வதால் நீ பழிக்கு அஞ்சாதவன் என்ற பழியில்மூழ்குதல் உனக்கு ஒழுங்கன்று. துன்பம் தீர்த்து ஆண்டருள்க.

87. மோலிமுடி சூடி முறைநிறுவி னாய் அரசாய்
நீலி இடத்துவைத்த நின்மலா - சூலி
திருமுன் முறையீ(டு)உன் செஞ்செவிஏ லாமை
தருமமோ ஆரூர்அத் தா.

**குறிப்புரை** : முடி மோலி சூடி= தலையில் திருமுடி சூடி. முறை= நீதி. நீலி= உமையவள் சூலி= சூலம் ஏந்தியவனே. அத்தா= அனைவரினும் உயர்ந்தவனே.

**பொழிப்புரை** : அனைவரினும் உயர்ந்தவனாய் ஆரூரில்வாழ்பவனே ! நீ அரசனாகத் தலையில் திருமுடிசூடி நீதியை நிறுவினாய். உமையவளை இடப்பாகம் வைத்த மலமில்லாதவனே ! சூலம் ஏந்தியவனே ! உன்திருமுன் நான் வைத்த முறையீடு உன்செவிகளில் ஏறாதது அறமன்று. எனது முறையீடு கேட்டு அருள்க.

**விளக்கம்** : முடிசூடி அரசாண்டது: திருவிளையாடற் புராணம்திருமணப் படலச் செய்தி .

88. தாங்கும்இமில் ஏறாச் சரமாத் துவசமா
வீங்கு முலைமனையா வெம்பணியில் - தூங்கும்
ஒருவனைக்கொள் ஒற்றி யுடையாய்நா யேனை
மரு(வு)அடிமை யாக்கொள்ளு வாய்.

**குறிப்புரை** : வெம்பணியில் தூங்கும் ஒருவன்= கொடிய பாம்பணையில் உறங்கும் திருமால். இமில் ஏறு= கொண்டையுடைய விடை. சரம்= அம்பு. துவசம்= கொடிச்சின்னம். மனை= மனைவி.. மருவு= உன்னைச் சரணடைந்த.

**பொழிப்புரை** : கொடிய பாம்பணையில் உறங்கும் திருமாலை, நீ உன்னைச் சுமக்கும் கொண்டையுடைய விடையாக, முப்புர எரிக்கு அம்பாக, அறத்தின் குறியீடான கொடிஇலச்சினையாக, திரண்டமார்புகளுடைய மனைவியாகக் கொண்டு, ஒற்றியூரில் உள்ளவனே ! உன்னைச்சரணடைந்த நாயேனை அடிமையாக ஏற்றருள்க.

**விளக்கம்** : திருமால் இடபம் - " தடமதில்கள் அவைமூன்றும் தழல் எரித்தஅந்நாளில் இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் " ( திருவாச. 269) திருமால் அம்பு - முப்புர எரியின்போது " பாணந்தான் மண்தின்ற பாணமே " ( தனிப்பாடல் ) திருமால் கொடிச்சின்னம் - " சீர்கெழு கொடியும் அவ்ஏறு என்ப " ( புறம். கடவுள்வாழ். ) திருமால் மனைவி -" அரியலால்தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே " ( திருவை. திருமு. 5. 5 )

89. வாரார் கயிலை மலையோ மறைமுடியோ
ஏரார்பூங் கோயிலோ என்னுளமோ - சீராரூர்த்
தம்பிரான் கங்கைச் சடையான்பூங் கொன்றையணி
எம்பிரான் வாழும் இடம்.

**குறிப்புரை** : வார்ஆர்= உயர்ந்த . மறைமுடி= உபநிடதம். பூங்கோயில்=

திருவாரூர்த் திருக்கோயில். தம்பிரான்= சிவபிரான் .

**பொழிப்புரை** : சிறப்புவாய்ந்த ஆரூர்ச்சிவமும், கங்கையைச் சடையில் தரித்தவனும், அழகிய கொன்றை சூடியவனும் ஆகிய எம்தலைவன் வாழும் இடம், உயர்ந்த கயிலைமலையோ, உபநிடதமோ, அழகுபொருந்திய பூங்கோயிலோ எனது உள்ளமோ. அவன் எங்குமுள்ளான்.

**90.** இடங்காவல் பூண்டாளுக்கு எந்தாய்நின் சென்னி
மடங்காத காதலொடு வைகும் - தடங்கொங்கை
மின்நேயம் சொல்லேன் விளங்(கு)ஒற்றி யூர்நம்பா
பின்ஏ(து) எனக்(கு)அருள்வாய் பேசு.

**குறிப்புரை** : இடம் காவல்பூண்டாள்= உன் இடதுபாகமிருந்து உன்னைக் கண்காணித்துக் காக்கும் அம்மை. மடங்காத= சற்றும் குன்றாத. மின்= கங்கையாள். ஏது= எப்படி.

**பொழிப்புரை** : அருள்விளங்கும் ஒற்றியூரில் விரும்பத்தக்கவனாயுள்ள சிவபிரானே ! என் தந்தையே ! உன் இடதுபாகம் இருந்து உன்னைக் கண்காணித்துக் காக்கும் அம்மையிடம், உன்சடையில் உன்மேல் சற்றும் குன்றாத காதலுடன் வாழும் கங்கையாள் பற்றிச் சொல்லமாட்டேன். ( உன் மனைவியிடமே வஞ்சகமாக வாழும் நீ ) எனக்குஎப்படிஅருள்வாய் ? கூறு.

**91.** பேசேன்நீ யன்றிப் பிறதெய்வம் உண்டென்று
கூசேன் நினைஎன்றும் கும்பிடுவேன் - ஏசேன்
பலியேற்றாய் என்(று)ஆரூர்ப் பண்ணாவா நோயான்
நலி(வு)ஓட் டுவ(து)எந்த நாள்.

**குறிப்புரை** : பண்ணவா= கடவுளே. நோயான்= கண்ணோயாளி . நலிவு= துன்பம் .

**பொழிப்புரை** : ஆரூர்க்கடவுளே ! உன்னைத்தவிர வேறுதெய்வங்களும் உண்டு என்று கூறமாட்டேன்; மனம்கூசாமல் உன்னைக் கும்பிடுவேன்; நீ பிச்சைஏற்றாய் என்றும் இகழமாட்டேன். அதனால் கண்ணோயாளியாகிய என் துன்பத்தை நீ ஓட்டுவது எந்நாளில் ? இன்றே கண்ணோய் தீர்த்தருள்க.

**92.** நாளே வினையே நமனே நவகோளே
கோளே புரியஎனைக் கூடன்மின் - தாளே
எனக்(கு)அளித்தான் ஒற்றியூர் எம்பிரான் என்புன்
மனக்குள் இருப் பான்என்றும் வந்து.

**குறிப்புரை** : கோள்= தீங்கு. கூடன்மின்= என்னைக்கூடாதீர்கள். புன்மனம்= அற்பமனம். என்றும் வந்து இருப்பான்.

**பொழிப்புரை** : ஒற்றியூர் எம்தலைவன் தனது திருவடிகளை எனக்குத்தந்து, என்மனத்தில் எந்நாளும் வந்துஇருப்பான் ஆதலின் தீய நாளே, தீயவினையே, யமனே, ஒன்பான் கோளே நீங்கள் எனக்குத் தீங்குசெய்ய என்னைக் கூடாதீர்கள்.

**விளக்கம்** : “ நாளென்செயும் வினைதான் என்செயும் எனை நாடிவந்த, கோளென்செயும் கொடுங்கூற்று என்செயும் குமரேசர்இரு, தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும், தோளும் கடம்பும் எனக்கு

முன்னேவந்து தோன்றிடினே " ( கந்தரலங்காரம். 38 ) என்பதை நினைக.

**இலக்கணக் குறிப்பு** : கூடன்மின் - முன்னிலைப்பன்மை ஏவல் வினைமுற்று.

93. வந்தேன் திருமுன் மகிழ்ந்துபணிந் தேன்அமுதே
செந்தேனே கற்கண்டே சீனியே - நொந்தேனைக்
காஎன்றேன் ஆரூர்முக் கண்ணா அருளாது
போஎன்றால் அன்றே புகழ்.

**குறிப்புரை** : கா= காத்தருள். புகழன்றே= புகழ்தராது.

**பொழிப்புரை** : ஆரூர்ச் சிவபெருமானே ! நின்திருமுன் வந்து மகிழ்ந்து பணிந்து, உன்னை அமுதமே ! புதுத்தேனே ! கற்கண்டே ! சீனியே ! என்று போற்றித் துன்புறும் என்னைக் காத்தருள் என்று வேண்டினேன். அருளாது போஎன்று சொன்னால் அது உனக்குப் புகழ்தராது. அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : வந்தேன், பணிந்தேன் - முற்றெச்சங்கள்.

94. புகழ்ச்சிவிருப் பில்லார் புவனத்தில் யாரே
இகழ்ச்சிவிருப் புள்ளார் எவரே - புகழ்ச்சி
விரும்பினையேல் எற்கா விமலாதென் ஒற்றிக்
கரும்பினைநேர் சொல்லாள்பா கா.

**குறிப்புரை** : எற்கா= என்னைக் காத்தருள்.

**பொழிப்புரை** : இயல்பாகவே மலமில்லாதவனே ! அழகிய ஒற்றியூரில் கரும்பொத்த இன்சொல்வழங்கும் அம்மையைப் பாகம் கொண்டவனே ! உலகில் பிறர்கூறும் புகழினை விரும்பாதவர் யார் ? பிறர்கூறும் இகழ்ச்சியை விரும்புகிறவர் யார் ? நீ புகழ்ச்சியை விரும்பினால் என்னைக்காத்தருள்க.

95. பாகம் கலந்தமலைப் பாவையாய் பாவைமார்
மோகம் கலந்தமுழு மூடனேன் - தேகம்
கலந்தபிணி நின்அருள்முன் கால்முன்துய் யன்றோ
நலம்தழையும் ஆரூர்அண் ணா.

**குறிப்புரை** : கால்முன்= காற்றின் முன். துய்= தூசு. அண்ணா= யாவர்க்கும் முன்னவனே.

**பொழிப்புரை** : உடம்பின்பாதியில் மலைமகளை உடையவனே ! ஆரூரில் நலமேபெருகும் யாவர்க்கும் முன்னவனே ! மகளிர்மாட்டு மோகமுடைய முழுமூடனான என்உடம்பில் கலந்துள்ள நோய் உனது அருளாகிய காற்றில் அகப்பட்ட துய்போன்றது அல்லவா ! நோய் தீர்த்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

96. அண்ணாதென் ஒற்றியூர் ஆண்டவா செந்தமிழால்
பண்ணார் கவிபாடிப் பாவலர்கள் - நண்ணா
இரக்கில்எதிர் பேசா(து)ஒன்(று) ஈயா(து) இருத்தல்
புரக்கு(ம்)வள்ளற்(கு) ஈதொருபண் போ.

**குறிப்புரை** : அண்ணா= யார்க்கும் முன்னவனே. நண்ணா இரக்கில்= வந்து யாசித்தால். பண்போ= பண்பல்லவே.

**பொழிப்புரை** : யாவர்க்கும் முன்னவனே ! ஒற்றியூர் ஆண்டவனே !

பாவலர்கள் உன்னைச் செந்தமிழ்க் கவிதையால் போற்றி வந்து யாசித்தால் மறுமொழி தராதும் ஒன்றும் தராதும் இருப்பது வள்ளலாகிய உனக்குரிய ஒரு பண்பாகாது. யாசித்ததை அவர்களுக்கு வள்ளலாகிய நீ வழங்கவேண்டும். வழங்குயருள்க.

**விளக்கம்** : " விசும்பில் கருவிவானம் போல வரையாது சுரக்கும் வள்ளியோய் ......... ஈயென இரத்தல் இழிந்தன்று அதன்எதிர் ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று. ( புறம். 204 )

**97.** போதன் பணிபாதன் புண்ணியன் தென்கமலை
நாதன் திருநாவல் நாவலர்க்குத் - தூதன்
கலங்கும்எளி யேற்(கு)அருளாக் காரணமென்
அந்தோ துலங்கும் அருளைச் சுமந்து.

**குறிப்புரை** : போதன்= நான்முகன். காரணமென்= என்ன காரணம்.

**பொழிப்புரை** : நான்முகன் வணங்கும் திருவடியினனும் புண்ணிய வடிவனும், அழகிய கமலாலயத் தலைவனும், சுந்தரர் பொருட்டாகப் பரவையார்பால் தூதுசென்றவனும் ஆகிய நீ, ஒளிவிளங்கும் அருளை மிகுதியாகப் பெற்றிருந்தும் , வருந்தும் எளியவனான எனக்கு அருளாத காரணம் என்ன ? அருள்க.

**98.** சுமந்தாய் அருளைச் சுடுநோய் தொலைக்காய்
கமம்தான் இதுவோ கழறாய் - நமன்தான்
உருளவுதைத் தாய்ஒற்றி ஊரா உலகம்
அருள்வ(து)எங் குக்கொட்டு வாய்.

**குறிப்புரை** : சுடுநோய்= வருத்தும் பார்வை இழந்தநோய். கமம்= அருளின் நிறைவு.

**பொழிப்புரை** : ஒற்றியூரா ! யமன் சுருண்டுவிழ உதைத்தவனே ! அருளை அளவின்றிச் சுமந்தாய் ! ஆயினும் என்னைவருத்தும் பார்வை இழந்தநோயினைத் தீர்க்கவில்லை. நிறைந்த அருளின் பயன்இதுதானா ? உன்னுடைய நிறைந்த அருளினை எங்குக்கொட்டுவாய் ? சொல். அருள்காட்டவேண்டிய இடம் இது . அருள்க.

**99.** வாயாரப் பாடி மனம்நெகிழச் சிந்தித்து
நோயால்அந் தோஇன்னும் நோவேனோ - தீயாரைப்
பாடிப் பரிசுபெறாப் பாவியோ யான்மன்றத்(து)
ஆடிமகி ழும்கமலை யாய்.

**பொழிப்புரை** : தீயவர்களைப்பாடி அவர்களிடம் பரிசுபெற விரும்பாத நான், அம்பலத்து ஐந்தொழிற் கூத்தியற்றி மகிழும் கமலாலயனே ! உன்னை வாயாரப்பாடியும், மனம்மகிழச் சிந்தித்தும்கூட பார்வையிழந்த நோயால் இனியும் துன்புறுவேனோ ? நான்பாவியா ? அருளாளனாகிய நீ அருள்க.

100. ஆய்ந்தஅன்பர் கூடிக்கூத் தாடிப்பே ரானந்தம்
தோய்ந்துமகிழ் ஒற்றியூர்த் தொன்னகரில் - வாய்ந்தபரன்
ஆர்ந்தபுகழ் பாடும் அறிஞர்இல்லம் தோறுமென்றும்
சேர்ந்து மகிழும் திரு.

**கூட்டுமுறை** : ஒற்றியூர்த் தொன்னகரில், வாய்ந்த பரன்ஆர்ந்தபுகழ் பாடும் அறிஞர், ஆய்ந்த அன்பர்கூடிக் கூத்தாடிப் பேரானந்தம்தோய்ந்து மகிழ்இல்லந்தோறும் என்றும் திரு சேர்ந்துமகிழும்.

**குறிப்புரை** : ஒற்றியூராகிய தொன்மையான நகரில் எழுந்தருளியுள்ள பரம்பொருளின் மிக்க புகழைப் பாடும் அறிஞர், ஆராயும் அன்பர் ஆகியோர் கூடி, அவன்நினைவால் கூத்தாடிப் பேரானந்தத்தில் திளைத்து மகிழும் இல்லங்களை எல்லாம் திருமகள் அடைந்து மகிழ்வாள்.

திருச்சிற்றம்பலம்

# திருவாரூர் மருந்து வெண்பா மாலை

.

ஆசிரியர்
பூவாளூர்
**வித்துவான். சி. தியாகராச செட்டியார்**

உரைவிளக்கம்
குன்றக்குடி ஆதீனப்புலவர் தமிழாகரர்
சைவத் தமிழ்மணி சைவத் தமிழ்அறிஞர் சித்தாந்தச் செல்வர்
**வித்துவான். க. கதிரேசன் எம். ஏ; பி.எட்**
பூவாளூர் . 621 712
அலைபேசி 09865 193754.

**உ**

**திருவாரூர் மருந்து வெண்பா மாலை**

**சிறப்புப் பாயிரம்**
**தமிழ்த்தாத்தா. டாக்டர். உ.வே. சா.**

திருந்துபுகழ் ஆரூர்த் தியாகேசன் தன்னை
மருந்துமருந் தென்(று)இனிது வாழ்த்திப் - பொருந்துதுதி
சாற்றும் தியாகரா சக்கவிஞற்(கு) யாமெல்லாம்
ஆற்றும்கைம் மா(று)இலையா மால்.

**பொழிப்புரை** : மேலான புகழ்வாய்ந்த திருவாரூர் அருள்தரு தியாகராசப் பெருமானை மருந்து மருந்து என்று சொல்லிவாழ்த்தும் தியாகராசக் கவிஞனுக்கு எம்போன்றோர் செய்யும் கைம்மாறு ஏதும் இல்லை.

**விளக்கம்** : இருமுறை மருந்தென்றது இம்மையில் நோய்கட்கும் மலங்கட்கும் மருந்தாதலையும், அம்மையாம் வீட்டின்பத்தில் அமுதமாதலையும் குறித்தது.

**காப்பு**

சீர்பூத்த ஆரூர்த் தியாகேச னைத்துதிக்க
நார்பூத்த இன்சொல் நனிஅருளும் - ஏர்பூத்த
ஐங்கரம்நால் வாய்முக்கண் ஆர்ந்தருளி அன்பர்க்கு
மங்களம்செய் தெய்வ மருந்து.

**குறிப்புரை** : நார்= அன்பு. ஏர்= அழகு. நால்= தொங்கும்.

**பொழிப்புரை** : சிறப்புவாய்ந்த திருவாரூர் அருள்தரு தியாகராசப் பெருமானைத் துதிக்க, அன்புடன் மலரும் இனியசொற்களை மிகுதியும் அருள்கின்ற அழகுமலர்ந்த ஐந்து திருக்கைகள், கீழிதழ் தொங்கும் வாய், மூன்று கண்கள் பெற்ற விராயகர், அடியவர்களுக்கு அருளி மங்களம்நல்கும் தெய்வமருந்தாவார்.

**இலக்கணக்குறிப்பு** : மூன்றாமடியில் எண்ணலங்காரம் காண்க.

**சமயாசாரியர்**

தீயபிணி தீர்க்கும் சிரபுரத்து வாழ்மருந்து
வாய்அர(சு)என் னும்பேர்கொள் மாமருந்து - பாயவிழி
மா(சு)அகலப் பாடுநா வல்மருந்து மாணிக்க
வாசகப்பேர் பூண்ட மருந்து.

**குறிப்புரை** : சிரபுரம்= சீர்காழி. வாய்அரசு= நாவரசர். பேர்= புகழ். பாய= பரவிய.

**பொழிப்புரை** : சீர்காழியில் பிறந்து பிறரது தீயநோய் தீர்க்கும் திருஞானசம்பந்தர் ஆகிய மருந்து, நாவரசர் என்றுபுகழ்பெற்ற மாமருந்து, தன்விழிகளில் பரவிய குருடாந்தன்மை தீரப் பாடிய திருநாவலூர்ச் சுந்தரர் ஆகிய மருந்து, மாணிக்கவாசகர் என்ற பேர்பூண்ட மருந்து ஆகிய நான்கு மருந்துகட்கும் வணக்கம்.

**இலக்கணக்குறிப்பு** : வாய் - இடவாகுபெயர். மருந்து - உருவகங்கள்.

## நூல்

1. திங்கள்அணி வேணித் தியாகேசன் என்னும்பேர்
தங்கப் புனைந்த தனிமருந்து - துங்கத்
திருவும் தருமருந்து செய்யமறைச் சென்னி
மருவுமருந்து ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தங்க= நிலைக்க. தனி= ஒப்பற்ற. துங்கத்திரு= தூய செல்வம் - வீடுபேறு. மறைச்சென்னி= உபநிடதம்.

**பொழிப்புரை** : திருவாரூரில் வாழும் மருந்து, சடையில் பிறைசூடிய தியாகேசர் என்ற பெயரை நிலையாகப் பூண்ட மருந்து; இம்மை நலங்கள் மட்டுமன்றிப் பின்னர் வீடுபேறும் அருளும் மருந்து: சிறந்த உபநிடதத்தில் பொருந்திய மருந்தாகும்.

**இலக்கணக்குறிப்பு** : திருவும் - உம்மை இறந்தது தழுவியஎச்சவும்மை.

2. கொன்றை அணிந்த குணமருந்(து)அன் பர்க்(கு)என்றும்
நன்று மகிழ்ந்துபுரி நன்மருந்து - குன்றாத
காட்சிஅடி யேற்(கு)அருளும் கண்மருந்து கல்வியால்
மாட்சிபெறும் ஆரூர் மருந்து.

**பொழிப்புரை** :. கல்வியால் மாட்சிமைபெற்ற ஆரூர்மருந்தாம் அருள்தரு தியாகராசப் பெருமான், குணம்தரும் கொன்றை சூடிய மருந்து, அடியவர்களுக்கு என்றும் நன்மைசெய்து மகிழும் மருந்து, எனக்கு முழுமையானகண்பார்வை தரும்மருந்து.

3. . மால்பிரமன் காணாத மாமருந்து தற்புகழும்
நூல்பலஆய்ந் தோர்பிறவி நோய்மருந்து - காலற்காய்ந்(து)
எள்ளுதல்இல்லா எழில்மருந்(து) ஏற்றவர்க்கு
வள்ளலாம் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தற்புகழும் நூல்= தன்னைப் புகழ்ந்து கூறும் நூல்கள்.

**பொழிப்புரை** : தன்னிடம் யாசித்தவர்க்கு வாரிவழங்கும் வள்ளலாகிய ஆரூர் மருந்து, திருமாலும் நான்முகனும் காணவியலாத பெருமருந்து, தன்னைப்புகழும் நூல்கள் பலவற்றையும் ஆய்ந்தோர் பிறவிநோய்க்கு மருந்து, யமனைச் சினந்தபோதிலும் இகழ்ச்சியில்லா அழகிய மருந்து ஆகும்.

4. தேவர்க்(கு) அரிய திருமருந்து தென்தமிழால்
மூவர் பரவு முதல்மருந்து - காவார்
கரமருந்(து)என் கண்ணோய் கரக்குமருந்(து) என்றும்
வரமருந்து ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : வரம்= மேன்மை. கா ஆர்= காத்தல் திறம்வாய்ந்த.

கரக்கும்= தீர்க்கும்.

**பொழிப்புரை** : எந்நாளும் மேலான மருந்தாகிய ஆரூர் மருந்து:; தேவர்கட்குக் கிட்டாத மருந்து, இனிய தமிழால் மூவர்முதலிகள் போற்றிய முதன்மைசான்ற மருந்து, காத்தல் திறம் வாய்ந்த கரங்களுடன் எனது கண்ணோய் தீர்க்கும் மருந்தாகும்.

5. நீறு புனைந்த நிமலமருந்(து) ஓவாது
நாறுகுழல் பால்வைத்த நன்மருந்து - வேறுதுணை
இல்லாப் பெரிய எழில்மருந்(து)எல் லாம்செய்ய
வல்லதாம் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : நிமலம்= இயல்பாகவே மலமில்லாத. பால்= உடம்பின் பாதியில்.

**பொழிப்புரை** : ஐந்தொழில் அனைத்தையும் தானே செய்யவல்ல ஆரூர் மருந்து; திருநீறு தரித்த இயல்பாகவே மலமில்லாத மருந்து, இயற்கை மணம் வாய்ந்த கூந்தலுடைய அம்மையை எப்போதும் தன் உடம்பின் பாதியில் வைத்த நன்மருந்து, எத்தகையவர்க்கும் வேறு துணையில்லாத பெரிய அழகிய மருந்தாகும்.

6. மால்ஏற்றில் காட்சிதரு மாமருந்து செங்கையில்
வேல்ஏற்ற கான்முளையீன் மெய்ம்மருந்து - கால்ஏற்ற
சென்னியார் ஏத்தும் திருமருந்(து)எல் லாநோய்க்கும்
வன்னியாம் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மால் ஏற்றில்= திருமாலாகிய விடைமேல் / மிகப்பெரிய விடை. கான்முளை= மகவு. மெய்ம்மருந்து= ஞானமாகிய மருந்து. கால்= திருவடி. சென்னியார்= தலையர் - அடியவர். திரு= தெய்விகம். வன்னி= நெருப்பு. .

**பொழிப்புரை** : அனைத்து நோய்களையும் எரித்தழிக்கும் நெருப்பாகிய ஆரூர் மருந்து; திருமாலகிய விடைமேல் தோன்றும்மிகப்பெரிய மருந்து, தனது செங்கையில் வேலினை ஏந்தும் அருள்தரு சண்முகநாதப் பெருமானை நமக்குத் தந்த ஞானமருந்து, தன்திருவடிகளைத் தலைமேல் சூடிய அடியவர் ஏத்தும் மருந்தாகும்.

**விளக்கம்** : மால் ஏறு -“ நெடுமுடிசேர் செருமால் விடை ஊறும் செம்மான் “ ( திருமு. 1. திருவடுகூர். 10 )

7. பெண்ணஇடப் பால்கொள் பெருமருந்து தன்வயிற்றில்
மண்ணைவைத்த ஏற்றில் வருமருந்து - கண்ணை
அகழ்ந்தஅன்பர் கண்ட அருமருந்(து)எல் லாரும்
மகிழ்ந்துகொளும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தன்வயிற்றில் மண்ணைவைத்த ஏறு= மண்ணுண்ட திருமாலாகிய விடை. அன்பர்= திண்ணனார் - கண்ணப்பர்.

**பொழிப்புரை** : அனைவரும் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளும் ஆரூர் மருந்து; உமையம்மையைத்தன் இடதுபாகத்தில் கொண்ட பெரியமருந்து, உலகைத் தன்வயிற்றில் வைத்துக்காக்கும் திருமாலாகிய விடைமேல் வரும் மருந்து, தனது கண்ணைத் தோண்டியப்பிய கண்ணப்பராகிய திண்ணனார் கண்ட அரிய மருந்தாகும்.

**விளக்கம்** : திருமால் கண்ணனாகப் பிறந்தபோது வாய்திறந்து அங்கு உலகைக்காட்டியது குறித்தார் - " பண்டுஏழுலகு உண்டான்அவைகண்டானும் முன் அறியா ஒண்தீயுரு ஆனான். " ( திருமு.1. திருவீழி. 9 ) ( உண்டான்= திருமால். அவைகண்டான்= ஏழுலகுபடைத்த நான்முகன் )

8. ஆவணம் காட்டி அடிமை கொளுமருந்து
கோவணம்கள் ளத்தில் கொளுமருந்து - தாவாக்
கதிஅடியார்க்(கு) ஈந்து களிக்கு மருந்து
மதிமுடித்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தாவாக்கதி= அழிவற்ற வீடுபேறு.

**பொழிப்புரை** : சடையில் பிறைசூடிய ஆரூர் மருந்து; ஓலைஆவணம் காட்டிச் சுந்தரரை அடிமை கொண்ட மருந்து, அமர்நீதியாரிடம் காப்பில் தான்வைத்த கோவணத்தை அவர் அறியாது கொண்ட மருந்து, அழிவற்ற வீடுபேற்றினை அடியவர்களுக்கு வழங்கி மகிழும் மருந்தாகும்.

9. அன்பர் துயர்காணா அருமருந்து தாள்பணியா
வன்பர்துயர் மாற்றா மருந்துபே - ரின்பம்
பயக்குமருந்(து) ஓர்நால்வர் பாடுமருந்(து)
என்னுள் மயக்(கு)அறுத்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : வன்பர்= கொடியவர். உள்= உள்ளம்.

**பொழிப்புரை** : என்மனத்து மயக்கங்களை அறுத்த ஆரூர் மருந்து; அடியவர் துயரம் காணப்பொறுக்காத மருந்து, தன் அருள்வடிவான திருவடிகளை வணங்காத கொடியவர்களின் துயரத்தைமாற்றாத மருந்து, வற்றாமுற்றாப் பேரின்பம் வழங்கும் மருந்து, சமயகுரவர் நால்வரும்போற்றிப்பாடிய மருந்து.

10. வெள்ளம் முடித்தசடை மெய்ம்மருந்து நாயடியேன்
உள்ளப்பூங் கோயில் உறைமருந்து - கள்ளம்
இருவா உளத்தார்க்(கு) இனிக்கும்மருந்(து) இன்னல்
மருவாத ஆரூர் மருந்து,

**குறிப்புரை** : பூ= அழகிய. கள்ளம்= வஞ்சனை. இருவா= இல்லாத.

**பொழிப்புரை** : துன்பம் பொருந்தாத ஆரூர் மருந்து; கங்கையைச் சடையில்சூடிய ஞானமருந்து, நாய்ஒத்த கீழான அடியேனின் அழகிய மனக்கோயிலில் வாழும் மருந்து, வஞ்சனைஇல்லாத மனத்தார்க்கு இனிமைதரும் மருந்தாகும்.

11. காமனைக் காய்ந்தநுதற் கண்மருந்து கூடலிலே
மாமனாய் வந்து வழக்குரைத்த - தேமருந்து
கன்னிஓர் பாகம் கலந்தமருந்(து) அங்கையிலே
வன்னிவைத்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தே= இனிமை. அங்கை = உள்ளங்கை / அழகியகை. வன்னி= அனல் / நெருப்பு.

**பொழிப்புரை** : தன் உள்ளங்கையில் அனலினை ஏந்திய ஆரூர்மருந்து; மன்மதனை நெற்றிக்கண்ணால் நீறாக்கிய மருந்து, மதுரையில் மாமனாய் வந்து வழக்குரைத்த இனியமருந்து ( திருவிளையாடற் புராணச் செய்தி ), கன்னியாகிய அம்மையைத் தன்னுடம்பின் பாதியில்கலந்த மருந்தாகும்.

12. மான்மழு அங்கைமிசை வைத்த தனிமருந்து
தேன்அமர்பூங் கொன்றைத் திருமருந்து - கான்அமர்ந்த
வேட்டுவனார் ஊட்(டு)ஊன் மிசைந்த மருந்து என்பிறவி
வாட்டுமருந்(து) ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தனி= ஒப்பற்ற. திரு= தெய்விகம். வேட்டுவனார்= கண்ணப்பரான திண்ணனார். வாட்டும்= அழிக்கும்.

**பொழிப்புரை** : எனது பிறவிநோயினை அழிக்கும் ஆரூர் மருந்து; தனது உள்ளங்கைகளில் மான் மழு ஆகியவற்றை ஏந்திய ஒப்பற்றமருந்து, தேன்பொருந்திய கொன்றைமலர் சூடிய தெய்விகமருந்து, காட்டில்வாழ்ந்த வேடுவனாகிய திண்ணனார் ஊட்டிய மாமிசத்தைச் சுவைத்த மருந்தாகும்.

13. கந்தரத்து நீலம் கலந்தமருந்து) இன்கவிசொல்
சுந்தரர்க்குக் கண்ணோய் தொலைத்த மருந்(து) - இந்துமுடி
ஆர்ந்தமருந்(து) அம்பலத்தில் ஆடுமருந்(து) ஓயாது
வார்ந்தபுகழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : நீலம்= நீலநிறநஞ்சு. இந்து= நிலா. வார்ந்த= மிகநீண்ட.

**பொழிப்புரை** : மிகநீண்ட புகழுடைய ஆரூர் மருந்து; தனது கழுத்தில் நீலநிறநஞ்சினையுடைய மருந்து, இனிய பாடல்கள் பாடிய சுந்தரரின் கண்பார்வை மறைத்த நோயினைத்தீர்த்த மருந்து, பிறையைச் சடையில் தரித்த மருந்து, பொன்னம்பலத்தில் இடையறாது ஐந்தொழிற் கூத்தாடும் மருந்தாகும்.

**இலக்கணக்குறிப்பு** : நீலம் - பண்பாகுபெயர். ஆடுமருந்து - காலம் கரந்த பெயரெச்சம் - வினைத்தொகை.

14. கண்டக் கறைமருந்து கான்மலர்சேர் மாணிக்காத்
தண்டதரற் காய்ந்த தனிமருந்து - துண்டப்
பிறையணிந்த சென்னிப் பெருமருந்து தூய
மறைபுகழும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : கறை= நஞ்சினாலான களங்கம். கான்மலர்= திருவடி மலர். மாணி= பிரம்மச்சாரி - மார்க்கண்டேயர். தண்டதரன்= யமன்.

**பொழிப்புரை** : தூய மறைகள் புகழும் ஆரூர் மருந்து; கழுத்தில் நஞ்சினாலான களங்கம் பெற்றமருந்து, தன் திருவடிமலரைச் சரணடைந்த பிரமசாரியாகிய மார்க்கண்டேயர் பொருட்டு யமனைச் சினந்து உதைத்த ஒப்பற்ற மருந்து, மூன்றாம்பிறையைச் சடையில் சூடிய பெரியமருந்தாகும்.

15. வெம்பணியில் துஞ்சும் விடைமருந்து மெய்யடியார்
நம்ப அருள்புரியும் நன்மருந்து - கம்பக்
களி(று)உரித்த கைமருந்து காமன்தே ராய
வளிதவழும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : வெம்பணி= கொடியபாம்பாகிய ஆதிசேடன். துஞ்சும்= அறிதுயில் கொள்ளும். விடை= திருமாலாகிய விடை. கம்பம்= கட்டுத்தறி. காமன்தேர் ஆய வளி= மன்மதனின் தேராகிய தென்றல்.

**பொழிப்புரை** : மன்மதனின் தேராகிய தென்றல் தவழும் ஆரூர்மருந்து; கொடிய பாம்பாகிய ஆதிசேடன்மேல் உறங்கும் திருமாலாகிய விடையுடைய மருந்து, தன்னை நம்பும் மெய்யடியார்க்கு அருள்புரியும் நல்லமருந்து, கட்டுத்தறியில் கட்டப்பெறும் ஆண்யானையின் தோலினைஉரித்துப் போர்த்த கைகண்ட மருந்தாகும்.

16. அப்பர்குடர் நோய்தீர்த்(து) அருள்மருந்து பாண்டியன்மெய்
வெப்பொடுகூன் தீர்த்த மெய்ம்மருந்து - துப்பினையே
ஒத்த சடில மருந்(து)உம்பர் தொழுமருந்து
மத்தமுடி ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : குடர்= குடல் - வயிற்றுச் சூலைநோய். வெப்பொடு கூன்= வெப்புநோயும் கூன்நோயும். மெய்ம்மருந்து= சிறந்தமருந்து. துப்பு= பவளம். சடிலம்= சடை. மத்தம் முடி= ஊமத்தம்பூச் சூடிய.

**பொழிப்புரை** : ஊமத்தம்பூச்சூடிய ஆரூர் மருந்து; அப்பரடிகளின் வயிற்றுச்சூலைநோய் தீர்த்து அருள்புரிந்த மருந்து, திருஞானசம்பந்தர் மூலம் கூன்பாண்டியனின் வெப்புநோய் கூன் ஆகியன தீர்த்த சிறந்தமருந்து, பவளம்போல் சிவந்த சடையுடையமருந்து, தேவர்கள் வணங்கும் மருந்தாகும்.

**விளக்கம்** : சிவன் ஊமத்தம்பூச் சூடியவன் : " மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன் " ( திருப்புகழ். )

**இலக்கணக்குறிப்பு** : குடர் - மொழிக்கடைப்போலி.

17. என்பைப்பெண் ணாச்செய் எழில்மருந்து சுந்தரர்மெய்த்
துன்பைத் தவிர்த்தருளும் தூயமருந்(து) - அன்பை
இழவார் பிறப்பறுக்கும் இன்மருந்(து)இல் தோறும்
மழ(வு)ஆர்தென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : துன்பு= துன்பம். மழவுஆர்= குழந்தைகளாக நிறைந்த.

**பொழிப்புரை** : வீடுகள்தோறும் குழந்தைகளாக நிறைந்த ஆரூர் மருந்து; மயிலையில் திருஞானசம்பந்தர்மூலம் எலும்பை அழகிய பூம்பாவையாகச் செய்த மருந்து, திருத்துருத்தியில் சுந்தரரின் உடல்நோய் தீர்த்த மருந்து, இழவாத பக்தியுடையவரின் பிறப்பறுத்து வீடுபேறு அருளும் மருந்தாகும்.

18. விண்மணியைக் கண்ணாக்கொள் மெய்ம்மருந்து நாயடியேன்
கண்மணிக்கு முன்ஒளியைக் காட்டுமருந்(து) - எண்ணுமணி
கண்டன்என அண்டர் கரைமருந்து சோலைதொறும்
வண்(டு)அமர்தென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : விண்மணி= ஞாயிறு. மணிகண்டன்= நீலமணிகழுத்தன். அண்டர்= உலகவர். கரை= கூறும்.

**பொழிப்புரை** : சோலைகளில் எல்லாம் வண்டுகள் மொய்க்கும் அழகிய ஆரூர் மருந்து; ஞாயிற்றை வலது கண்ணாகக் கொண்ட மருந்து, நாயொத்த அடியவனின் கண்கருமணிக்குப் பார்வைதரும் மருந்து, போற்றத்தக்க நீலமணிஒத்த திருக்கழுத்தன் என்று உலகவர் போற்றும் மருந்தாகும்.

19. தாமரையோன் சென்னி தடிந்தமருந்(து) என்பிறவி
நாம்அலைய ஓட்டு நலமருந்து - தேமலைந்த
பூவடிஎன் சென்னி பொருந்துமருந்(து) ஏகம்ப
மாவடிவாழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தடிந்த= கிள்ளிய. நாம் அலைய= அச்சம் தொலைய. தேமலைந்த= தேன்பொருந்திய. ஏகம்ப மாவடி வாழ்= காஞ்சியில் ஏகம்பவாணனாய் மாவடிக்கீழ் எழுந்தருளிய.

**பொழிப்புரை** : காஞ்சிபுரத்தில் ஏகம்பவாணனாக மாவடிக்கீழ் எழுந்தருளியுள்ள ஆரூர் மருந்து; தாமரையில் இருக்கும் நான்முகனின் ஐந்தாவது தலையைக் கிள்ளிய மருந்து, என்னைவிட்டு என்பிறவிஅச்சம் தொலைய அதனை ஓட்டிய மருந்து, தேன்பொருந்திய மலர்போன்ற தன் திருவடிகளை என்தலையில் சூட்டிய மருந்தாகும்.

20. கண்சுமந்த நெற்றிக் கவின்மருந்து வந்திக்கா
மண்சுமந்து பிட்டுண்ட மாமருந்து - பண்சுமந்த
சாமம் பரவும் தனிமருந்து வெற்(பு)அரசி
வாமம்சார் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : சாமன்= சாமவேதம். வெற்புஅரசி= மலைமகள்.

**பொழிப்புரை** : மலைமகளைத் தன்உடம்பின் பாதியில் பெற்ற ஆரூர் மருந்து; நுதற்கண்பெற்ற அழகிய மருந்து, மதுரையில் பிட்டுவாணிச்சி வந்திக்காக மண்சுமந்த சிறந்தமருந்து, இசையொடு கூடிய சாமவேதம் போற்றுகிற ஒப்பற்றமருந்தாகும்.

21. பாம்பும் புலியும் பணிமருந்து பாண்டியனாய்
வேம்(பு))அணியல் தாங்கும் வியன்மருந்து - காம்பனைய
தோள்மா(து) ஒருபாகம் தோய்மருந்து கண்ஆய
வாள்மாதர் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : பாம்பும் புலியும்=.பதஞ்சலிமுனிவரும் வியாக்கிரபாத முனிவரும். அணியல்= மாலை. வியல்= பெருமை. காம்பு= மலர்த்தாள். கண் ஆய வாள் மாதர்= ஞானமாகிய ஒளியுடைய அழகர்.

**பொழிப்புரை** : ஞானமாகிய ஒளியுடைய அழகராம் ஆரூர் மருந்து; பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்கள் வணங்கும் மருந்து, தடாதகைப் பிராட்டியை மணந்து சவுந்தர மாறனாய் வேப்பம்பூமாலை தரித்து அரசாண்ட பெருமைபொருந்திய மருந்து, மலர்த்தாள் ஒத்த தோள்களுடையஅம்மையைத் தன்னொருபாதியில் கொண்ட மருந்தாகும்.

22. இந்திரன் போற்றும் எழில்மருந்(து)ஈ ரெண்கலைசேர்
சந்திரனைத் தேய்த்த தனிமருந்து - மந்திரமாம்
அஞ்செழுத்(து)உள் வாருக்(கு) அருள்மருந்து வாழ்பவர்கள்
வஞ்சம்அகற்(று) ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : ஈரெண்கலை= பதினாறு கலைகள். தேய்த்த= காலால் தேய்த்த. உள்வார்= நினைப்பவர்.

**பொழிப்புரை** : இவ்வுலகில் வாழ்பவர்களின் வஞ்சனையைப் போக்கும் ஆரூர் மருந்து; தேவேந்திரன் போற்றும் எழுச்சிதரும் மருந்து, பதினாறு கலைகளுடன்கூடிய சந்திரனை ( தக்கனது வேள்வியில் சிவத்துரோகம் செய்ததற்காக ) காலால் தேய்த்த ஒப்பற்ற மருந்து, சிவமந்திரமாகிய சிவாயநம / நமசிவாய என்ற திருவைந்தெழுத்தை நினைப்பவர்களுக்கு அருள்புரியும் மருந்தாகும்.

**விளக்கம்** : ஈரெண்கலைச் சந்திரனைத் தேய்த்தது - " சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில் " ( திருவா. 189. )
திருவைந்தெழுத்து மந்திரங்கள் எழுத்து வரையறையுடையன. இந்நாளில்

மிகப்பலர் அவற்றுடன் ஓங்காரம் சேர்த்துக் கூறுகின்றனர். இது எழுத்துவரையறையை மீறுவதாகும். மந்திரவரையறை மீறுதலாகாது.

23. தாரணிந்த கொன்றைச் சடைமருந்து வாமத்து
வாரணிந்த மென்முலையாள் வாழுமருந்(து) - ஏரணிந்த
வேதமுடி வைகும் வியன்மருந்து வென்றசீர்
மாதவர்வாழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : கொன்றைத்தார் அணிந்த. தார்= மாலை. ஏர்= அழகு. வியல்= பெருமை. மை= நஞ்சின் கருமை.

**பொழிப்புரை** :மும்மலங்களைவென்ற மாதவர் வாழும் ஆரூர் மருந்து; கொன்றைமாலையைச் சடையில் சூடிய மருந்து, கச்சினை அணிந்த மென்முலைகளுடைய அம்மை இடதுபாதியில் வாழும் மருந்து, அழகுடைய உபநிடதத்தில் வாழும்மருந்தாகும்.

24. பைவைத்த பாப்புப் பணிமருந்து பாணருக்காத்
தெய்வக் கவிஎழுது சீர்மருந்து - நைவன்பர்க்(கு)
எய்தப் பொருந்தா வியன்மருந்து கந்தரத்து
மைவைத்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : பை= படம்.பாப்பு= பாம்பு. பணி= அணிகலன். பாணர்= பாணபத்திரர். தெய்வக்கவி= “மதிமலி புரிசை” என்றுதொடங்கும் பா. நை வன்பர்= வருந்தும் கொடியவர். எய்தப் பொருந்தா= அடையவியலாத. கந்தரத்துமை= கழுத்துக் கறை.

**பொழிப்புரை** : உட்கொண்ட நஞ்சின்காரணமாக ஏற்ற கழுத்துக் கறையுடைய ஆரூர் மருந்து; படமுடைய நல்லபாம்பினை அணியாக அணிந்த மருந்து, பாணபத்திரர்க்குப் பரிந்துரைத்துச் சேரமானுக்கு விடுத்த “ மதிமலிபுரிசை “ என்றுதொடங்கும் பாடலை எழுதியனுப்பிய பெருமை பொருந்தியமருந்து, வருந்தும் கொடியவர்கள் அடையவியலாதமருந்தாகும்.

25. வேளைப் பொடித்த விழிமருந்து வெற்பெடுத்தான்
தோளை நெரித்த சுடர்மருந்து - தாளைப்
பரவும்அடி யார்துன்பம் பாற்று மருந்து
வரம்அருளும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : வேள்= மன்மதன். பொடித்த= நீறாக்கிய. வெற்பெடுத்தான்= கயிலையைத் தூக்கமுயன்ற இராவணன். பாற்றும்= போக்கும். வரம்=மேன்மை.

**பொழிப்புரை** : மேன்மைகள் அருளும் ஆரூர் மருந்து, மன்மதனை நீறாக்கிய நுதல்விழியுடைய மருந்து, கயிலைமலையைத் தூக்கமுயன்ற

இராவணன் தோள்களை நெரித்த ஒளிவடிவான மருந்து, தன் திருவடிகளைப் போற்றும் அடியவர் துன்பங்களைப்; போக்கும் மருந்தாகும்.

26. சூலப் படைசுமந்த தொன்மருந்து பாகத்தில்
ஏலக் குழலியமர் இன்மருந்து - கோலத்
திருப்பதத்தில் மால்விழிசேர் சீர்மருந்து வன்றி
மருப்பணிந்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : ஏலக்குழலி= மணக்கும் கூந்தல். வன்றி= பன்றி.

**பொழிப்புரை** : பன்றிக்கொம்பை அணிந்த ஆரூர் மருந்து; சூலாயுதம் ஏந்திய தொன்மையான மருந்து, மணக்கும் கூந்தலுடைய அம்மையை ஒருபாகத்தில் தாங்கிய இனியமருந்து, அழகியதிருவடிகளில் திருமால் தனது கண்ணை ஆயிரமாவது மலராகஇட்ட சிறப்புவாய்ந்த மருந்தாகும்.

**விளக்கம்** : திருமால்இட்ட கண்மலர் - " பங்கயம் ஆயிரம் பூவினிலோர் பூக்குறையத், தங்கண் இடந்து அரன் சேவடிமேல் சாத்தலுமே, சங்கரன் எம்பிரான்சக்கரம் மாற்கு அருளியவாறு எங்கும்பரவி " ( திருவாச. 322. )

27. உழுவை உரியை உடுத்த மருந்து
வழவைஉரி போர்த்த மருந்து - கழுவில்
கொடியரை ஏற்று குணமருந்து செந்தேன்
வடிஇதழி ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : உழுவை= புலி. உரி= தோல். வழுவை= யானை. கழுவில் கொடியரை ஏற்று குணமருந்து= விவாதங்களில் தோற்ற கொடியவர்களாம் சமணர்களைக் கழுவேற்றிய குணம்வாய்ந்த மருந்து.

**பொழிப்புரை** : புத்தம்புதுத் தேன்வடியும் கொன்றை சூடிய ஆரூர் மருந்து; புலித்தோல் உடுத்த மருந்து, யானைத்தோல் போர்த்த மருந்து, கொடியவர்களாகிய சமணர்களைக் கழுவில் ஏற்றிய குணம்வாய்ந்த மருந்தாகும்.

**விளக்கம்** : இயற்கையோடியைந்த தமிழர் பண்பாட்டுக்கு மாறான பழக்கவழக்களைத் தமிழகத்தில் பரப்பியதால் சமணரைக் கொடியர் என்றார்.

28. தேமா நிழலில் சிறந்த திருமருந்து
பூமாது போற்றும் புகழ்மருந்து - கோமான்
முசுகுந்தன் கண்ட முதன்மருந்(து)அங் கையில்
வசுஏந்தும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தேமாநிழலில்= இனிய மாவடியில். கோமான்முசுகுந்தன்= முசுகுந்தப் பேரரசன்.வசு= அனல்.

**பொழிப்புரை** : தனது உள்ளங்கையில் அனல் ஏந்தும் ஆரூர் மருந்து; காஞ்சிபுரத்தில் இனிய மாவடிக்கீழ் சிறப்புடன் இருக்கும் தெய்வமருந்து,

நிலமகள் போற்றும் புகழ்வாய்ந்த மருந்து, முசுகுந்தப் பேரரசன் இந்திரனிடமிருந்து பெற்றுவந்து எழுந்தருளச்செய்த மருந்தாகும்.

**விளக்கம்** : இந்திரன் தர, முசுகுந்தன் தியாகேசப் பெருமானைத் திருவாரூரில் எழுந்தருளச்செய்தது -- " அன்பெனும் மந்தரத்து ஆசைநாண் பிணித்து, வண்துழாய் முகுந்தன் மதித்தனன் வருந்த, அருட்பெருங் கடலில் தோன்றி விருப்பொடும்,இந்திரன் வேண்ட உம்பர்நாட்டு எய்தி, அந்தமில் திருவொடும் அரசுஅவற்கு உதவி, ஒருகோலோச்சி இருநிலம் புரப்பான், திசைதிசை உருட்டும் திகிரியன் சென்ற, முசுகுந் தனுக்கு முன்னின் றாங்குப், பொன்னுலகு இழிந்து புடவியில் தோன்றி, மன்னுயிர்க்கு இன்னருள் வழங்குதும் யாமென, மேவர வழங்குமால் மன்ற, யாவரும் நமர்காள் இறைஞ்சுமின் நீரே. ( திருவாரூர் நான்மணிமாலை. 41.)

**29.** கள்ஆர்ந்த ஆத்தியடி காத்தமருந்(து) அன்பர்க்கு
வெள்ளானை ஈந்த வியன்மருந்து - நள்ளார்
புரமெரித்த மூரல் புகழ்மருந்தி யாரும்
வரமுகக்கும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : கள்= தேன். ஆத்தி= ஆத்திமரம். அன்பர்= சுந்தரர். நள்ளார்= பகைவர்.

**பொழிப்புரை** : அனைவரும் வரங்கள் பெற விரும்பும் மருந்து; தேன்துளிக்கும் ஆத்திமரத்தடியில் சிறுத்தொண்டர் வருகைக்காகக் காத்திருந்தமருந்து, சுந்தரர் கயிலைக்கு வர வெள்ளானையை அனுப்பிய பெருமைபொருந்திய மருந்து, முப்பகைவரின் முக்கோட்டைகளை எரித்த மருந்து.

**இலக்கணக்குறிப்பு** : மருந்து + யாரும்= மருந்**தி** யாரும் - குற்றியலிகரம்.

**30.** கற்றார் புகழும் கவின்மருந்து காழியர்க்குப்
பொற்றாளம் தந்த பொருவின்மருந்து - அற்றார்க்(கு)
இருநிதியாய்க் காக்கும் இயல்மருந்து சார்ந்தோர்
மருளகற்றும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : காழியர்= சீர்காழித் திருஞானசம்பந்தர். அற்றார்= பற்றற்றவர். இருநிதி= பெருஞ்செல்வம்.

**பொழிப்புரை** : தன்னைச்சார்ந்தவர்களின் மனமயக்கம் போக்கும் ஆரூர் மருந்து; கற்றவர் புகழும் அழகிய மருந்து, சீர்காழித் திருஞானசம்பந்தர்க்குத் திருக்கோலக்காவில் பொற்றாளம் வழங்கிய மருந்து, பற்றற்றவர்க்குப் பெருஞ்செல்வமாக இருந்து அவர்களைக்காக்கும் இய்ல்புடைய மருந்தாகும்.

**31.** சேல்கொடியன் சூரல்அடி சேர்மருந்து புற்பறழைப்
பாற்கடல்கூய் உண்ணப் பணித்த மருந்து - ஏற்க
நுளைய(ர்)குலப் பெண்வேட்ட நோன்மருந்து

வளைய(ல்)விற்ற ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : சேல்கொடியன்= மீன்கொடியுடைய அரிமர்த்தன பாண்டியன்.. சூரல்= பிரம்பு. புல் பறழ்= புலிக்கால் முனிவரின் மகனாகிய உபமன்யுமுனிவர். கூய்= அழைத்து . ஏற்க நுளையர் குலப்பெண் வேட்ட= மணக்க பரதவர் குலப் பெண்ணை விரும்பி.மணந்த. நோன்= வலிய.

**பொழிப்புரை** : மதுரை வீதியில் வளைவிற்ற ஆரூர் மருந்து; வைகை வெள்ளப்பெருக்கில் கரையுயர்த்த வந்தும் கரையடைகாமையால், மீன்கொடியுடைய அரிமர்த்தன பாண்டியன் பிரம்பால் அடிக்க அடிபட்ட மருந்து புலிக்கால் முனிவரின் குழந்தையாகிய உபமன்யு முனிவர் பாலுக்கு அழ பாற்கடலைக் கூவிஅழைத்துப் பருகச்செய்தமருந்து, மணக்கப் பரதவர்குலப் பெண்ணை விரும்பி மணந்த வலியமருந்தாகும்.

**விளக்கம்** : பிரம்படி பட்டது, பரதவர் பெண்ணை மணந்தது, வளையல் விற்றது ஆகியன திருவிளையாடற் புராணச்செய்திகள். குழவி உபமன்யு பருகப் பாற்கடல் ஈந்தது - " பாலுக்குப் பாலகன் வேண்டிஅழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான் " ( திருப்பல்லாண்டு . 9.)

32. தேசம் புகழும் திருமருந்து தேங்கொன்றை
வாசம் பொலிவேணி மாமருந்து - பாசம்
அகழ்அடியார் உள்ளத்(து) அமருமருந்(து) ஒற்றி
மகிழடிவாழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** :. ஒற்றி= ஒற்றியூர். மகிழடி வாழ்= சுந்தரர் சபதத்தை ஏற்க மகிழமரத்தடியில் எழுந்தருளிய.

**பொழிப்புரை** : சுந்தரர் விரும்பியபடி சபதத்தை ஏற்கத் திருவொற்றியூர் மகிழமரத்தடியில் வாழ்ந்த ஆரூர்மருந்து; நாட்டவர் புகழும் தெய்வமருந்து, தேன்பொருந்திய கொன்றைமலர்மணம் மணக்கும் சடையுடைய பெருமருந்து, பாசத்தை வேருடன் அகழ்ந்தெறிந்த அடியவர் உள்ளத்தில் எழுந்தருளிய மருந்தாகும்.

33. மண்ணொடுவிண் நீண்டு வளர்மருந்து வான்கவிஞர்
எண்ணும்செந் நாஇருக்கும் இன்மருந்து - பண்ணோ(டு)
இசைபாடித் தெவ்ஓட்டும் இன்பமருந்(து) ஆரும்
வசைபாடா ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தெவ்= ( பாணபத்திரர்க்குப் ) பகைவனான ஏமநாதன்.

**பொழிப்புரை** : யாரும் வசைபாடாது - புகழ்பாடும் ஆரூர் மருந்து; திருமாலும் நான்முகனும் காணவியலாது ஒளிவடிவில் நீண்டுவளர் மருந்து, தன்னை எண்ணும் மேலான கவிஞர்களின் செந்நாவில் இருக்கும் இனியமருந்து, பாணபத்திரரின் மாணவனாகவந்து அவர்க்குப் பகையான ஏமநாதனைப் பண்ணுடன் இசைபாடி ஓட்டிய இன்பமருந்தாகும்.

34. சேந்தன் தவிட்டமு(து)உண் சீர்மருந்து பூஞ்செல்வி
காந்தனுக்(கு) ஆழிதந்த காம(ர்)மருந்து - ஏந்து
கொடியில் விடைவைத்த கோமருந்து கற்போர்
மடியடையா ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தவிட்டு அமுது= அரிசிக் குறுநொய்யாலான களி. பூஞ்செல்வி காந்தன்= தாமரையிலிருக்கும் திருமகள் கணவன் - திருமால். ஆழிதந்த= (திருவீழிமிழலையில்)சக்கரம் அருளிய.கற்போர்= ( மனத்தால் )பழகியவர் - இடையறாது நினைத்தவர்' மடி= கேடு..

**பொழிப்புரை** : தன்னை மனத்தால் இடையறாது நினைத்தவர் கேடுஅடையாது காக்கும் ஆரூர் மருந்து; சேந்தனார் அளித்த களியினை உண்ட சிறப்புடைய மருந்து, திருமாலுக்குச் சக்கரம்அருளிய அழகிய மருந்து, உயர்த்திப்பிடித்த தனதுகொடியில் விடைஇலச்சினை வைத்த தலைமைசான்ற மருந்தாகும்.

**விளக்கம்** : மார்கழித் திருவாதிரையில் தில்லையில் ஓடாதிருந்த தேரினைத் திருப்பல்லாண்டு ( 9ஆம்திருமுறை )பாடி ஓடச்செய்த சேந்தனார் , தன்வீட்டுக்கு அடியாராகவந்த சிவபிரானுக்குக் களியமுது தந்துகளித்தார்.

35. பெற்றம்உவந் தேறும் பெரியமருந்(து) எக்கலையும்
முற்றவுணர்ந் தோர்உணரும் முன்மருந்து - நற்றவத்தோர்
சூழும்மருந்(து) ஓரிரண்டு தூய செல்வம் நல்குமின்னார்
வாழும்தென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : பெற்றம்= விடை. முன்மருந்து= முதன்மையான மருந்து. ஓர் இரண்டு தூய செல்வம்= தூயபோகச் செல்வம் தூய யோகச்செல்வம். மின்னார்= முறையே அருள்தரு அல்லியங்கோதை, அருள்தரு கமலாம்பிகை.

**பொழிப்புரை** : தூயபோகநிலையாகிய செல்வம்தரும் அருள்தரு அல்லியங்கோதை அம்மையும், தூயயோகநிலையாகிய செல்வம்தரும் அருள்தரு கமலாம்பிகை அம்மையும் எழுந்தருளியுள்ள ஆரூர் மருந்து; மகிழ்வுடன் விடைஏறிவரும் பெரியமருந்து, எவ்வகைக்கலையையும் முழுதுணர்ந்தோர் அனுபவிக்கும் முதன்மையான மருந்து, முதிர்ந்த தவத்தோர் மேன்மேலும் ஆராயும் மருந்தாகும்.

**இலக்கணக்குறிப்பு** : மின்னார் - உவமை ஆகுபெயர்.

36. வேதப் பரிஉகைத்த மெய்ம்மருந்து
வேகவதி பாதமலர் நாறப் படர்ந்தமருந்(து) - ஓத
உலவாப் புகழ்மருந்(து) உத்தமர்க்குத் தீய
மலம்மாற்றும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : உகைத்த= செலுத்திய. வேகவதி= வைகையாறு. மலம்= ஆணவம் கன்மம் மாயை. மாற்றும்= கெடுக்கும்.

**பொழிப்புரை** : உத்தமர்களாகிய அடியவர்கள்களின் மும்மலங்களைக்கெடுத்து வீடுதந்த ஆரூர் மருந்து; மாணிக்கவாசகர் வாழ்வில் வேதமாகிய குதிரையை ஏறிச்செலுத்திய மருந்து, வைகையாற்றில் தனது திருவடிமலர்கள் பட்டதால் அந்தஆறு மணம்பெறச்செய்த மருந்து, முயன்று சொல்லினும் முடிவுறாத புகழுடைய மருந்தாகும்.

**விளக்கம்** : தீயமலம்மாற்றும் மருந்து - " இருவினைமும் மும்மலமும் அற இறவியொடு பிறவிஅற ஏகபோகமாய் நீயும் நானுமாய் இறுகும்வகை பரமசுகம் அதனைஅருள் இடைமருதில் " ( திருப்புகழ். அருகுநுனி பனி )

37. மாயப் பகழிகொண்ட மாமருந்து வஞ்சர்புரம்
தீயக் குறுமுறுவல் செய்மருந்து - தூயகதி
நல்கும் அருமருந்து நாடும் பெருஞ்செல்வம்
மல்கும்தென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மாயப்பகழி= மாயனாகிய - திருமாலாகிய அம்பு. வஞ்சர்= முப்புர அசுரர். தூயகதி= வீடுபேறு. மல்கும்= பெருகிய.

**பொழிப்புரை** : மாபெரும் செல்வங்கள் பெருகும் அழகிய ஆரூர் மருந்து; திருமாலாகிய அம்பினை ஏந்திய பெருமருந்து, வஞ்சராகிய அசுரர்களின் முப்புரங்கள் எரிந்தழியப் புன்முறுவல் செய்த மருந்து, வீடுபேறு அருளும் அரியமருந்க்தாகும்.

38. கண்ணுக்(கு) இனிய கவின்மருந்து காம(ர்)மலைப்
பெண்ணுக்(கு) உயிராம் பெருமருந்து - விண்அமரர்க்(கு)
ஆவி உதவுமருந்(து) ஆலம் அயின்மருந்து
வாவிசூழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : கவி = அழகு. ஆவி= உயிர். ஆலம்= நஞ்சு,

**பொழிப்புரை** : குளங்கள் சூழ்ந்த ஆரூர் மருந்து; கண்கொண்டு காண இனியமருந்து, அழகிய பார்வதிதேவிக்கு உயிராக விளங்கும் பெரியமருந்து, தேவருலகத்தவர்க்கு உயிரளித்த மருந்து, நஞ்சுண்ட மருந்தாகும்.

39. வீதி விடங்கன்எனும் மெய்ம்மருந்து தூதாகிப்
பாதமலர் நோவப் படர்மருந்து - ஓதி
உணர்ந்தார் அறிந்தமருந்(து) உம்பரெலாம் வாழ்த்தி
வணங்கும்தென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மெய்ம்மருந்து= ஞானமருந்து. தூது= சுந்தரர்க்குத்தூது.

**பொழிப்புரை** : தேவர்கள் அனைவரும் வாழ்த்தி வணங்கும் அழகிய ஆரூர் மருந்து; வீதிவிடங்கன் என்ற பெயருடைய ஞானமருந்து, சுந்தரர் பொருட்டுப் பரவையார்பால் தூது சென்றமருந்து, திருமுறைகளை ஓதி உணர்ந்தவர்கள் அறிந்தமருந்தாகும்.

**விளக்கம்** : வீதிவிடங்கன் - வீதிக்கு எழுந்தருளி அருள்வழங்கும் பெருமான். விடங்கன்= பிறரால் ஆக்கப்பெறாதவன் - சுயம்பு.

**40.** தேவி மகிழத் திருநடனம் செய்மருந்து
பாவியேன் கண்ணோயைப் பாற்றுமருந்(து) - ஓவில்
அருளே திருமேனி யாக்கொள் மருந்து
மருள்ஏயா ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : திருநடனம்= ஐந்தொழில் கூத்து. பாற்று= தீர்க்கும். ஓவில்= இடயறாது. ஏயா= பொருந்தாத.

**பொழிப்புரை** : அறியாமை பொருந்தாத / ஞானமே வடிவான ஆரூர்மருந்து; அருள்தரு சிவகாமியம்மை கண்டுமகிழ ஐந்தொழில் கூத்தியற்றும் மருந்து, பாவியாகிய என் கண்நோயினைத் தீர்க்கும் மருந்து, எப்போதும் அருளையே தன்திருமேனியாகக் கொண்டமருந்தாகும்.

**41.** வானும் புவியும் வணங்குமருந்(து) அன்பர்க்குத்
தேனும்பா லும்போன்ற சீர்மருந்து – கூனும்
குருடும் தவிர்மருந்து குத்தரமான் கொங்கை
வருடும்கை ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : கூனும் குருடும் தவிர்= நின்றசீர் நெடுமாறனின் கூனையும், சுந்தரர் மற்றும் தண்டியடிகளின் குருடும் நீக்கிய. குத்தரமான்= ( அண்டத்தைக் ) காக்கும் அருள்தரு சிவகாமியம்மை.

**பொழிப்புரை** : அண்டம்காக்கும் அருள்தரு சிவகாமியம்மையின் கொங்கையைத் தன்கையால் வருடும் மருந்து; வானோர் நிலவுலகவர் வணங்கும் மருந்து, அடியவர்க்குத் தேனும் பாலும்போல் நோய்தீர்த்து - மலநோய்தீர்த்து, நலம் – வீடுபேறு நல்கும் சிறப்பான மருந்து, நின்றசீர் நெடுமாறனின் கூனையும் சுந்தரரின் குருட்டையும் தீர்த்த மருந்தாகும்.

**விளக்கம்** : குத்தரமான் கொங்கை வருடியது – “வலப்பால் திருக்கரம் இடப்பால் வனமுலை, தைவந்து வருட “ ( திருவிடைமருதூர் மும்மணிக். 1 ) கற்பனையான இச்செயல் அண்டம் படைக்க அம்மைக்கு அனுமதிதந்த குறிப்பினது என்பர் ). பாண்டியன் கூன் தீர்ந்தது – “ அனபாயன் என்னும் சீர்த்திச், செம்பியன் செங்கோலென்னத் தென்னவன் கூன் நிமிர்ந்ததன்றே “ ( பெரியபு. 275 ) திருவொற்றியூரிலிருந்து பார்வை இன்றிப் புறப்பட்ட சுந்தரர் திருவேகம்பத்தில் இடக்கண்ணும், திருவாரூர்த் திருமூலட்டானத்தில் மற்றைக்கண்ணும் பெற்றார். ( பெரியபு. 3446 + 3469 )

**42.** வரத்தைஅடி யார்க்(கு)அருளும் வான்மருந்(து) அங்கி
கரத்தைத் தடிமருந்து காவல் - புரத்தில்
தயித்தியரைச் சாடும் தனிமருந்து வேளூர்

வயித்தியனாம் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : அங்கி= நெருப்பு, தடி= பற்றுக்கோடு. காவல்புரம்= காவல்மிக்க முப்புரம். தயித்தியர்=அசுரர். சாடும்= அழிக்கும். வேளூர்= புள்ளிருக்கு வேளூர் என்ற வைத்தீசுவரன்கோயில்.

**பொழிப்புரை** : வைத்தீசுவரன் கோயிலில் அருள்தரு வைத்தியநாதப் பெருமானாய் அருளும் ஆரூர் மருந்து; அடியவர்களுக்கு வரங்கள் - மேன்மைகள் அருளும் மருந்து, நெருப்பைஏந்தத் தனது கையைப் பற்றுக் கோடாகக்கொண்ட மருந்து, காவல்மிக்க முப்புரங்களைஅழித்த ஒப்பற்ற மருந்தாகும்.

43. எய்யாப் புகழ்மருந்(து) ஏத்தித் தொழும்அடியார்
நையா(து) அருள்புரியும் நன்மருந்து - வெய்யர்
அடைய அருமருந்(து) அற்றார்க்(கு) இனிய
மடைஅருளும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : எய்யா= குறைவற்ற. வெய்யர்= கொடியவர். அற்றார்= பற்றற்றவர். மடை= சோறு - உணவு.

**பொழிப்புரை** : பற்றற்றவர்க்குச் சுவையன உணவு அருளும் ஆரூர் மருந்து; குறைவற்ற புகழுடைய மருந்து , தன்னைப் போற்றிவணங்கும் அடியவர்கள் நொந்துபோகாது அருள்புரியும் நல்லமருந்து, கொடுமனத்தார் அடைவதற்கு அரிய மருந்தாகும்.

**விளக்கம்** : அற்றார்க்கு மடைவழங்கியது _ திருக்குருகாவூரில் பொதிசோறும் தண்ணீரும் , திருக்கச்சூரில் மனைதோறுமிரந்து சுந்தரர்க்கும் ; திருப்பைஞ்ஞீலியில் பொதிசோறு அப்பரடிகட்கும் இறைவன் வழங்கினான்.

44. இரந்(து)அமலை வன்தொண்டர்க்(கு) இட்ட மருந்து
பரந்தமலைப் பாவைமுலைப் பாலைச் - சுரந்(து)அன்பின்
காழிமக வுக்(கு)அருத்தக் கண்டமருந்(து) அண்டரெல்லாம்
வாழியவென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : அமலை= உணவு. அருத்த= பருகத்தர. வாழிய= வாழ்க.

**பொழிப்புரை** : வாழ்க என்று தேவர்கள் அனைவரும் வாழ்த்தும் ஆரூர் மருந்து; வீடுதோறும் ஏற்றுச் சுந்தரர்க்கு உணவிட்ட மருந்து, நீண்ட இமயமலை அரசன் இமவான்மகளாகிய மலைமகள் அன்புடன் முலைப்பால் சுரந்து பொற்கிண்ணத்தில் திருஞானசம்பந்தர்க்குத் தரச்செய்த மருந்தாகும்.

**விளக்கம்** : வானவர் இறைவனை வாழ்த்துவது ஏன் ?“ வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் மனம்நின்பால் , தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மையெலாம் தொழவேண்டி “ ( திருவாசகம்.) .

அம்மை திருஞான சம்பந்தர்க்கு முலைப்பால் தந்ததால் அவருக்கு அவள் ஈன்றதாய் என்றும்; விநாயகர், முருகன் ஆகிய இருவர்க்கும் முலைப்பால்

தராமையால் இருவர்க்கும் செவிலித்தாய் என்றும் ஸ்ரீ குமரகுருபர அடிகள் கூறுகிறார். ( மீ. பி. தமிழ் சப்பாணி 10.)

**45.** வீழி மிழலையிடை மேவியவா கீசருக்கும்
காழியர்கோ னுக்கும்பொற் காசளித்த - பாழிமருந்(து)
உம்பர் அமுதுணநஞ்(சு) உண்மருந்து பூஞ்சோலை
வம்புசெறி ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : பாழி= பெருமை.வம்பு= நறுமணம்.

**பொழிப்புரை** : பூஞ்சோலைகளால் மிக்கநறுமணம் கமழும் ஆரூர்வாழ் மருந்து; திருவீழிமிழலையில் அப்பரடிகளின் தொண்டுகருதி வாசியில்லாப் பொற்காசும், அஃதில்லாததால் திருஞானசம்பந்தர்க்கு வாசியுடைய பொற் காசும் அளித்த பெருமைபொருந்திய மருந்து; தேவர்கள் அமுது உண்ணத் தான் நஞ்சுண்ட மருந்தாகும்.

**46.** மன்னும் கயிலை மலைமருந்து வான்மதியம்
மின்னும் சடைமுடியில் வேய்மருந்து - முன்னும்
தனையிரந்தோர்க்(கு) ஈயும் தனிமருந்(து) அன்பர்
மனையிரந்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மன்னும்= பெருமை பொருந்திய. வேய்= தரித்த.

**பொழிப்புரை** : சுந்தரர்க்காக அன்பர்களின் வீடுதோறும் உணவை யாசித்துப்பெற்ற ஆரூர் மருந்து; பெருமைபொருந்திய கயிலையில் உள்ள மருந்து, வானத்துப்பிறையை ஒளிரும் சடையில்தரித்த மருந்து முற்காலத்தும் தன்னை யாசித்தவர்க்கு அதனைத்தந்த மருந்தாகும்.

**விளக்கம்** : முன்னும் என்பதில் உள்ள உம்மை, இன்றும் யாசிக்கும் எனக்குப் பார்வை தரும் என்ற எச்சப்பொருள் தந்தது.

**47.** ஏ(டு)ஆற்(று) எதிரேற்றும் இன்மருந்து தன்னைஎன்றும்
நாடார் துயர்நாடா நன்மருந்து - பீடார்
தலைவளைத்துத் தாடகைகைத் தார்கொள் மருந்து
மலைவளைத்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : நாடார்= விரும்பாதவர். கைத்தார்= கைகளில் ஏந்திய மலர்மாலை. மலை= மேருமலை.

**பொழிப்புரை** : முப்புரஎரியில் மாமேருமலையை வில்லாகவளைத்த ஆரூர் மருந்து; புனல்வாதத்தில் திருஞானசம்பந்தர் வைகையில் இட்ட " வாழ்க அந்தணர் " என்றுதொடங்கும் பதிகம் எழுதிய ஏடு நீரோட்டத்தை எதிர்த்துச் செல்ல வைத்த இனிய மருந்து, திருப்பனந்தாளில் தன்தலையில் சூட்ட, அசுரப்பெண்ணாகிய தாடகைகைகளில் ஏந்திய மாலையை ஏற்கத் தனது பெருமை பொருந்திய தலையை வளைத்து ஏற்ற மருந்தாகும்.

**48.** ததிவிரவு சோறு தருமருந்(து)அப் பர்க்கு
விதிமுடியைக் கொய்மருந்து மேலாம் - நதிமுடியில்
தாங்குமருந்(து) ஒண்கலத்தில் தாபதமின் னார்பிச்சை
வாங்குமருந்(து) ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : ததி= தயிர். விதி= நான்முகன். ஒண்கலம்= பிரம கபாலம். தாபதமின்னார்= முனிவர்களின் மனைவியர்.

**பொழிப்புரை** : ஒளிபொருந்திய பிரமகபாலமாகிய பாத்திரத்தில் முனிவர்களின் மனைவியரிடம் பிச்சைஏற்ற ஆரூர் மருந்து; அப்பரடிகட்குத் திருப்பைஞ்ஞீலியில் தயிர்ச்சோறு தந்த மருந்து, ஐந்து தலைகளுடனிருந்த பிரமனின் ஒருதலையைக் கிள்ளிஎடுத்த மருந்து, சிறந்த கங்கையைத் தன்முடியில் தாங்கிய மருந்தாகும்.

**விளக்கம்** : வேதியராய்வந்து அப்பரடிகட்குப் பொதிசோறு திருப்பைஞ்ஞீலியில் தந்தது - " வெங்கண் விடைவேதியர் நோக்கி " மிகவும் வழிவந்து இளைத்திருந்தீர், இங்குஎன்பாலே பொதிசோறு உண்டுஇதனை உண்டு தண்ணீர்ப் , பொங்கும்குளத்தில் குடித்து இளைப்புப் போக்கிப் போவீர் " எனப்புகன்றார். ( பெரியபு. 1576. )

**49.** தைப்பூசம் ஆடத் தகும்என்(று) அருள்மருந்து
மெய்ப்பூசு நீற்று வியல்மருந்து - கைப்போதில்
மான்ஏந் தியமருந்து மாமதுப்பெய் பூம்பொழில்கள்
வான்ஏந்தும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : அருள்= ஆடிக்காட்டிய. வியல்= பெருமை. கைப்போது= கைத்தாமரை. மாமது= மிக்க தேன்.

**பொழிப்புரை** : வானளாவிய,அழகிய மிக்கதேன்பொழியும்சோலைகளை உடைய ஆரூர் மருந்து; தைப்பூசம் திருநடனமிடத் தக்கநாள் என்று பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்களுக்கு ஆடிக்காட்டிய மருந்து, உடம்பெங்கும் திருநீறு பூசிய பெருமைபொருந்திய மருந்து, தனது கைத்தாமரையில் மானினை ஏந்திய மருந்தாகும்.

**50.** ஒடு கவர்ந்(து)இளமை ஓரன்பர்க்(கு) ஈந்தமருந்(து)
ஏடுகனல் வேவாது இயற்றுமருந்(து) - ஓடு
நரிபரியாச் செய்மருந்து நாவலர்பா டும்சீர்
வரிபுனைந்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : ஏடு= பச்சைப்பதிகம் என்ற திருநள்ளாற்றுப் பதிகம் எழுதிய ஓலை. ஓடு= காட்டில் ஓடும். நாவலர்= கவிஞர். வரி= வரைந்தபா.

**பொழிப்புரை** : கவிஞர்கள் பாடி வரைந்தபாக்களைச் சூடிய ஆரூர் மருந்து; தான் திருநீலகண்டக்குயவரிடம் பாதுகாத்துத் தருமாறு கொடுத்த திருஓட்டினை மறைத்து வைத்து அவர்க்கு இளமை அருளிய மருந்து,

பச்சைப்பதிக ஏட்டினை நெருப்பில் வேகாதுசெய்த மருந்து, காட்டில் ஓடும் நரிகளை நாட்டில் ஓடும் குதிரைகளாகச் செய்த மருந்தாகும்.

**விளக்கம்** : ஓடு கவர்ந்து இளமை அருளியதையும், ஏடு கனல்வேவாது இயற்றியதையும் பெரியபுராணத்தில் முறையே திருநீலகண்டநாயனார் புராணத்திலும், திருஞானசம்பந்தர் புராணத்திலும். நரி பரியாச் செய்ததைத் திருவிளையாடற் புராணம் நரிபரியாக்கிய படலத்திலும் விரிவாகக் காண்க.

51. கண்களிக்கும் காட்சிக் கவின்மருந்து கார்இமயப்
பெண்களிக்கும் பாகப் பெருமருந்து - விண்களிக்க
ஆலம் அயின்றமருந்(து) அம்பொன் அடியடைந்தார்
மால்அகற்றும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மால்= மனமயக்கம். கார்= சூல்மேகம். ஆலம்= நஞ்சு.

**பொழிப்புரை** : தனது அழகிய பொன்போலும் திருவடிகளைச் சரண் அடைந்தவர்களின் மனமயக்கம் போக்கும் ஆரூர் மருந்து; காண்போர் மனம் களிப்புறக் காட்சியருளும் அழகிய மருந்து, சூல்கொண்ட மேகம்பொருந்திய இமயமலை இமவான்ஈன்ற மலைமகளை இடதுபாகம் கொண்ட பெருமருந்து, அனைவரையும் கொல்லஎழுந்த நஞ்சினைத் தேவகள் களிக்க உண்ட மருந்தாகும்.

52. இருந்(து)ஆடி இன்(பு)எவர்க்கும் ஈயும் மருந்து
பொருந்தார்ஊர் சுட்ட புகழ்சேர் - மருந்துமலர்த்
தாள்குறி அன்பர் தலைக்(கு)அருளித் தன்தலையில்
வாள்குறிகொள் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : இருந்துஆடி அருள்பவர் ஆரூர்த் தியாகர்.( நின்றாடி அருள்பவர் தில்லை நடராசர்.) தாள்குறி= திருவடிச்சுவடு. வாள்குறி= வாளினால் வெட்டுப்பட்ட சுவடு இரத்தினகிரியில்.

**பொழிப்புரை** : தாமரைமலர் போன்ற தன்திருவடிச்சுவட்டினைத் தனது அடியவர் தலைக்கண் அருளித் தனது தலைக்கண் வாளால் வெட்டுப்பட்ட குறிகொண்ட ஆரூர் மருந்து; இருந்துஆடி அனைவர்க்கும் இன்பம்தரும் மருந்து, பகைவர் முப்புரங்களை நீறாக்கிய புகழ்பொருந்திய மருந்தாகும்.

**விளக்கம்** : அப்பரடிகள் தலையில் திருவடிச்சுவடு பொறித்தது - " நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே." ( இத்தொடரே திருமு 4. திருநல்லூர்ப் பதிகம் முழுவதும் மகுடம் )

53. மண்முன்இரு நான்(கு)உருவம் வாய்ந்த தனிமருந்து
கண்மூன் றுடைய கவின்மருந்(து) - ஒண்மாழை
செங்கலைச் செய்மருந்து தேவர் தொழுமருந்து

மங்கலிலா ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : முன்= முதலான. இருநான்கு உருவம்= எண்வகைத் திருமேனிகள் - நிலம், நீர், தீ, வளி, விண், நிலா, பகலோன், உயிர். - அட்டமூர்த்தம். ஒண்மாழை= ஒளியுடைய பொன். கலை - கல்லை. மங்கலிலா= ஞானஒளி குன்றாத.

**பொழிப்புரை** : ஒருபோதும் ஞானஒளி குன்றாத ஆரூர் மருந்து; நிலம்முதலான எண்வகைத்திருமேனிகள் கொண்ட ஒப்பற்றமருந்து, முக்கண்கொண்ட அழகிய மருந்து, திருப்புகலூரில் சுந்தரர் செங்கல்லைத் தலைக்கு வைத்துறங்கியபோது அதனை ஒளிபொருந்திய பொன்னாக ஆக்கித் தந்தமருந்து, தேவர்கள் தொழும் மருந்தாகும்.

**விளக்கம்** : செங்கல் பொற்கல்லானது - " வெற்றிவிடையார் அருளாலே வேமண்கல்லே விரிசுடர்செம் பொற்றிண்கல்லாயின கண்டு " பாடியது, " தம்மையே புகழ்ந்து " பதிகம். ( பெரியபு. 3209, 3210 )

54. குன்றுசிலை யாக்கொள் குணமருந்து வேதனொடு
கன்றுகுணி லாக்கொண்டோன் காணாமல் - நின்றுதழல்
ஓங்கலாய் ஓங்கி ஒளிமருந்(து) அம்மைக்கு
மாங்கனிநல்(கு) ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : சிலை= வில். வேதன்= நான்முகன். கன்று குணிலாக் கொண்டோன்= கன்றுக்குட்டியைக் குறுந்தடியாகக்கொண்டு, விளாமரமாக நின்ற அசுரனை வீழ்த்திய கண்ணன் - திருமால். ஓங்கல்= மலை. அம்மை= காரைக்கால் அம்மையார்.

**பொழிப்புரை** : காரைக்கால் அம்மையாருக்கு மாங்கனிதந்த ஆரூர் மருந்து; முப்புரஎரிக்கு எழுந்போது மாமேருமலையை வில்லாகக் கொண்டமருந்து, நான்முகனும், கன்றுக்குட்டியைக் குறுந்தடியாகக் கொண்டு விளாமரமாய் நின்ற அசுரனைக்கொன்ற கண்ணனாகிய திருமாலும் காணவியலாமல் நெருப்புமலையாக மேன்மேல் உயர்ந்து ஒளிவடிவாய் நின்ற மருந்தாகும்.

**விளக்கம்** : அம்மைக்கு மாங்கனி நல்கியது - ' பாங்ககன்று மனைவியார் பணிஅணிவார் தமைப்பரவி " ஈங்களித் தருளீரேல் என்னுரைபொய்யாம் " என்ன, மாங்கனிஒன்று அருளால்வந்து எய்துதலும் " (பெரியபு. 1751. ). கன்றுகுணிலாக்கொண்டோன் - " கன்றுகுணிலாக் கனிஉகுத்த மாயவன் " ( சிலம்பு. ஆய்ச்சியர் குரவை. ) நான்முகனும் திருமாலும் காணாது ஒளித்தது - " தேடிக் கண்டுகொண்டேன் - திருமாலொடு நான்முகனும் தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக் கண்டுகொண்டேன்," ( திருமு. 4. திருவங்கமாலை . 12. )

55. பாசு பதவாளி பார்த்தற்கு நல்குமருந்து
ஏசலில்ஆ னாயர் இசைக்குருகும் - மாசில்மருந்(து)
இன்னல்அடி யார்க்(கு)இசையா இன்மருந்(து)இன் பேஉருவாய்
மன்னுமருந்(து) ஆரூர் மருந்து

**குறிப்புரை** : மன்னும்= நிலைத்த. வாளி= அம்பு. ஏசலில்= பழிப்பற்ற.

**பொழிப்புரை** : பேரின்பமே தன்வடிவாய் நிலைத்த ஆரூர் மருந்து; அருச்சுனனுக்குப் பாசுபதமென்ற அம்பினை அருளிய மருந்து, பழிப்பற்ற ஆனாயரின் குழலிசைக்கு உருகி அருள்புரிந்த குற்றமற்ற மருந்து, தன்னடியவர்க்குத் துன்பம்வர ஒப்பாத இனியமருந்தாகும்.

**விளக்கம்** : அருச்சுனனுக்குப் பாசுபதவாளி தந்தது - " அடுத்துஆனை உரித்தானை அருச்சுனர்க்குப் பாசுபதம், கொடுத்தானை " ( திருமு. 4. திருக் கச்சி ஏகம்பம். 10. ) ஆனாயர் குழலிசைக்கு உருகியது - பெரியபு. 969 - 971. ) இன்னல் அடியார்க்கு இசையாமை - " தொண்டுபடு தொண்டர்துயர் தீர்ப்பான் தான்காண் " ( திருமு. 6 . திருக்கச்சி ஏகம்பம் )

56. புற்றிடம் கொண்ட புகழ்மருந்(து)என் புன்பவநீர்
வற்றிடச் செய்த வளமருந்து - கற்றாப்
புரந்த கணைமருந்து பொன்குளத்தில் கொள்ள
வரம்தந்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : திருவாரூர் இறைவன் திருப்பெயர் புற்றிடங்கொண்டார். புன்பவநீர்= அற்பப் பிறவித்தன்மை. கற்றா= இளங்கன்றுப் பசு. புரந்த= கன்றை இழந்த துன்பத்திலிருந்து காத்த. கணை= திரட்சி. குளத்தில்= ஆரூர்க்குளத்தில்.

**பொழிப்புரை** : திருமுதுகுன்றம் மணிமுத்தாற்றில் இட்டபொன்னைத் திருவாரூர்க் கமலாலயத் திருக்குளத்தில் எடுத்துக்கொள்ள வரம்தந்த ஆரூர் மருந்து; புற்றிடங்கொண்டார் என்றபுகழ்வாய்ந்த மருந்து, எனது அற்பப் பிறவித்தன்மை வற்றச்செய்த வளமார் மருந்து, இளங்கன்றுப்பசுவின் இறந்துபட்ட கன்றை எழுப்பிப் பசுவைக் காத்த திரண்ட கருணையுடைய மருந்தாகும்.

**விளக்கம்** : திருவாரூர்த் திருமூலட்டானநாதர் = புற்றிடங்கொண்டார் - " புற்றிடங் கொண்டான்தன் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே " ( திருமு.4. திருவாரூர். 2 ) கற்றாப்புரந்தது - " அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன், மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடன்எழலும் " ( பெரியபு. 132.) ஆற்றிலிட்டுக் குளத்த்தில்பெற வரம் அருளியது - " தெருளுற எழுந்தவாக்கால்" செழுமணி முத்தாற்று இட்டுஇப், பொருளினை முழுதும் ஆரூர்க் குளத்தில்போய்க் கொள்க " ( பெரியபு. 3267 .)

57. நம்பினோ ரைக்கை நழுவவிடா நன்மருந்து
வெம்பினேன் வெந்நோயை வீட்டுமருந்(து) - எம்பிரான்

என்னப்பூங் கோயில் இருக்குமருந்(து) ஓரைந்து
வன்னத்தென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : வெம்பினேன்= மனம் நொந்தஎனது. வெந்நோய்= பார்வை இழந்த கொடியநோய். வீட்டு= போக்கும். ஓரைந்து வன்னத்தென் ஆரூர் மருந்து = ஐவன்னத்தன்= சதாசிவ மூர்த்தி. இவரது திருமுகங்கள் ஐந்து. அவை முறையே: பளிங்கு, பொன்மை, கருமை, செம்மை, வெண்மை நிறங்களுடன் உச்சி , கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு நோக்கியன. இவை முறையே ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் ஆகும்.

**பொழிப்புரை** : சதாசிவ மூர்த்தியாய் அழகிய ஆரூரில் உள்ள மருந்து; தன்னை நம்பியவரைக் கைநழுவவிடாத நல்லமருந்து, மனம் நொந்த எனது பார்வை இழந்ததாகிய கொடிய நோயைப் போக்கும் மருந்து, திருவாரூரில் என்தலைவனாகப் பூங்கோயிலில் இருந்து அருளும்மருந்தாகும்.

**விளக்கம்** : ஆரூர்க்கோயிலைப் பூங்கோயில் எனல் - " திருவாரூர்த் தொன்னகரில், பூங்கோயில் உள்மகிழ்ந்து போகா(து) இருந்தாரே "
( திருமு. 4. 5. )

58. மதிசேர் சடைமருந்து வன்தொண்ட னார்க்குப்
பொதிசோறு தந்த புகழ்சேர் - நிதிமருந்து
நாளைப்போ வார்காண நந்திவிலக் கும்மருந்து
வாளைச்செய் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : பொதிசோறு= கட்டுச்சோறு. வாளைச்செய்=வாளைமீன்கள் துள்ளிப்பாயும் நன்செய்நிலம்.

**பொழிப்புரை** : வாளைமீன்கள் துள்ளிப்பாயும் நன்செய்நிலங்களுடைய ஆரூர் மருந்து; சடையில் பிறைசூடிய மருந்து, திருக்குருகாவூரில்சுந்தரர்க்குத் தண்ணீர்ப்பந்தல் வைத்துப் பொதிசோறு வழங்கிய புகழ்வாய்ந்தஅருள்நிதியாம் மருந்து, திருநாளைப்போவாராகிய நந்தனார் நேரேகண்டு கும்பிட, தன்னை மறைத்திருந்த நந்தியைச் சற்றே விலகி இருக்கச் செய்தமருந்தாகும்.

**விளக்கம்** : பொதிசோறு தந்தது - " வேனில்உறு வெம்மை தணிப்பதற்கு விரைகுளிர்மென், பானல்மலர்த் தடம்போலும் பந்தரொரு பாலமைத்தே, ஆனமறை வேதியராய் அருள்வேடம் கொண்டிருந்தார் " ; சாலமிகப் பசித்தீர் இப்பொதிசோறு தருகின்றேன் " ( பெரியபு. 3317, 3318.) நந்தனார் பொருட்டு நந்தியை விலங்க அருளியது - " கார்ஏறும்எயில்புன்கூர்க் கண்ணுதலார் திருமுன்பு, போரேற்றை விலங்கஅருள் புரிந்தருளிப் புலப்படுத்தார் " ( பெரியபு. 1062. )

59. புத்தன் தலையில்இடி வீழப் புரிமருந்து
முத்தன்என வேதம் மொழிமருந்து - சித்தனாய்க்
கல்லானை தின்னக் கரும்பு தருமருந்து

மல்ஆர்தென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : புத்தன்= புத்தநந்தி. முத்தன்= இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன். மல்= வளம்.

**பொழிப்புரை** : வளம்பொருந்திய அழகியஆரூர் மருந்து: திருஞான சம்பந்தர்மூலம் புத்தநந்தியின்தலையில் இடிவிழச்செய்த மருந்து, இயல்பாகவே பாசங்களின் நீங்கிய மருந்து, சித்தராக வந்து கல்லானை கரும்பு தின்னச்செய்த மருந்தாகும்.

**விளக்கம்** : புத்தநந்தி தலையில் இடிவிழச் செய்தது - " ஆளுடைய பிள்ளையார் திருவாக்காலே, " உருமிடித்துவிழப் புத்தன் உத்தமாங்கம் உருண்டுவீழ் கெ"னப் பொறாவுரை முன்விட்டார்." ( பெரியபு. 2811 . ) கல்லானைக்குக் கரும்பருத்தியது - ( திருவிளையாடற் புரா. கல்லானைக்குக் கரும்பு அருத்திய படலம் விரித்துரைக்கும். )

60. தூ(சு)ஒலிக்கும் கல்மோதும் தொண்டர்தலை தாங்குமருந்(து)
ஏ(சு)ஒலிகே ளாச்செவிகொள் இன்பமருந்(து) – ஆசை
உடுத்தமருந்(து) அண்டம்கீண்(டு) ஓங்குமருந்து
வடுத்தவிர்த்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை :** தூசு ஒலிக்கும்= ஆடை துவைக்கும். தொண்டர்= திருக்குறிப்புத் தொண்டர். தாங்கு= தாங்கிக்கொண்ட. ஏசுஒலி= பழிப்பேச்சு. ஆசை= திசை. கீண்டு= துளைத்து. வடு= குற்றம்.

**பொழிப்புரை** : குற்றமில்லாத ஆரூர்மருந்து; ஆடைதுவைக்கும் கருங்கல்லில் தனது தலையை மோதிக்கொள்ளத் திருக்குறிப்புத்தொண்டர் முயன்றபோது அடிபடாமல் தாங்கிய மருந்து, பழிச்சொல் ஏதும் கேளாது நீதிவழி நின்ற இன்பமருந்து, திசையை ஆடையாக உடுத்த ( திகம்பரம் ) மருந்து, நான்முகன் காணாது அண்டத்தைத் துளைத்து ஓங்கிய மருந்தாகும்.

**விளக்கம்** : திருக்குறிப்புத்தொண்டர் தலைஅடிபடாமல் கையால் தடுத்தது - " செழும்பாறைமிசைத் , தம்தலையைப் புடைத்து எற்ற அப்பாறை தன்மருங்கு, வந்துஎழுந்து பிடித்தது அணிவளைத்தழும்பர் மலர்ச்செங்கை " ( பெரியபு. 1207.) சிவபிரான் திகம்பரன் - வாங்குமலை வில்லியார் விண்ணுரு நனைத்து அவர்வனைந்திடு திகம்பரம்செவ் வண்ணமாய்ச் செய்வது " ( மீ.பி. தமிழ். நீராடல். 4. )

61 பன்றிபுவி கீண்(டு)அறியாப் பாத மலர்மருந்(து)
ஒன்றிஒன்றா இன்(பு)எற்(கு) உதவுமருந்(து) - என்றும்
அழியாப் புகழ்மருந்(து) அன்பர்எலாம் செல்நல்
வழிதேற்றும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : பன்றி= பன்றியுருக்கொண்ட திருமால். கீண்டு= தோண்டி. ஒன்றி ஒன்றா இன்பு= அத்துவித இன்பநிலை. எற்கு= எனக்கு. தேற்றும்=

தெளிவுபடுத்தும்.

**பொழிப்புரை** : அடியவர்கள் நடக்கவேண்டிய நல்லவழியினை அவர்களுக்குத் தெளிவுபடுத்தும் ஆரூர் மருந்து; பன்றியுருக்கொண்ட திருமால் நிலத்தைத் தோண்டிக்கொண்டு சென்றும் அறிந்துகொள்ள இயலாத திருவடித் தாமரைகளுடைய மருந்து, அத்துவித நிலையில் இன்பம் எனக்கு வழங்கும் மருந்து, எந்நாளும் அழிவற்ற புகழ்வடிவான மருந்தாகும்.

**விளக்கம்** : ஒன்றிஒன்றா இன்பம் - " ஒன்றிரண்டும் இல்லதுவாய் ஒன்றிரண்டும் உள்ளதுவாய் நின்ற சமத்துநிலை நேர்பெறுவது எந்நாளோ ? ( தாயுமானவர். எந்நாட்கண்ணி 15 )

62. அப்பூதி யார்சேயை அண்ணுவிடம் தீர்த்தமருந்(து)
ஒப்(பு)ஓ(து) உறாநின்ற வூர்ப்பூசல் - தப்பின்றிச்
செய்தமனக் கோயி(ல்)குடி சேர்மருந்து செங்கையிலே
வைஅமர்சூல் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : சேய்= மூத்த திருநாவுக்கரசு. அண்ணு= பொருந்திய. ஓதுறாநின்ற= சொல்லமுடியாத. நின்றவூர்ப் பூசல்= திருநின்றவூர்ப் பூசலார். தப்பு= குறை. வைஅமர் சூல்= கூரிய சூலாயுதம்.

**பொழிப்புரை** : தனது செங்கையில் கூரிய சூலாயுதம் ஏந்திய ஆரூர் மருந்து; அப்பூதியடிகளின் மகன் மூத்ததிருநாவுக்கரசினைப் பொருந்திய பாம்பின் விடத்தைத் தீர்த்த மருந்து, தனக்கு ஒப்பாக யாரையும் சொல்லவியலாத திருநின்றவூர்ப் பூசலார் எவ்வகைக் குறையுமின்றி மனத்தால் கட்டிய கோயிலில் குடிபுகுந்த மருந்தாகும்.

**விளக்கம்** : மூத்ததிருநாவுக்கரசின் விடம் தீர்த்தது - " ஒன்றுகொலாம் எனப்பதிகம் எடுத்துஉடையான் சீர்பாடப், பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளை உணர்ந்து எழுந்திருந்தான். " ( பெரியபு. 1478 ) மனக்கோயிலில் குடிகொண்டது - " அன்பரும் அமைத்த சிந்தை ஆலயத்து அரனார் தம்மை, நன்பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தி னோடும், பின்புபூ சனைகள் எல்லாம் பெருமையிற் பலநாள் பேணி " ( பெரியபு. 4192. )

63. இன்பமழ வன்புதல்வி எய்துநோய் தீர்த்தமருந்(து)
அன்பர் பனியால் அடைந்தகொடும் - துன்(பு)அகலப்
பண்ணும் அருமருந்து பாவியேன் கண்மாசு
மண்ணுமருந்து ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மழவன் இன்பப்புதல்வி. நோய்= முயலகன் என்றநோய். கொடும்துன்பு= கொடிய குளிர்சுரம். மண்ணு= கழுவும் - தீர்க்கும்.

**பொழிப்புரை** : ஆரூர் மருந்து; திருப்பாச்சில் ஆச்சிராமத்தில் கொல்லிமழவனுக்கு இன்பம்தரும் அவன் மகளின் முயலகன் என்ற நோயினைத் திருஞானசம்பந்தர் மூலம் " துணிவளர் திங்கள் " பதிகத்தால்

தீர்த்த மருந்து, திருச்செங்கோடு என்கிற கொடிமாடச்செங்குன்றூரில் மக்கள் கொடிய குளிர்சுரத்தால் பெரிதும்துன்புற்றபோது திருஞானசம்பந்தர் மூலம் “திருநீலகண்டம்” பதிகத்தால் தீர்த்தமருந்து, பாவியாகிய என்கண்படல நோயினைத் தீர்க்கும் மருந்தாகும்.

64. ஈசனென ஓர்மொழிப்பேர் எய்து மருந்து
வாசமலர்க் கொன்றை வனைந்தமருந்(து) - ஆசில்
குருமருந்(து) இன்பம் கொடுக்குமருந்(து) ஒண்சீர்
மருவுமருந்து ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : ஈசன்= எப்பொருட்கும் இறைவன். மொழி= சொல்லும். வனைந்த= சூடிய. இன்பம்= வீடுபேற்றின்பம். மருவும்= பொருந்திய.

**பொழிப்புரை** : ஆரூர்மருந்து; எப்பொருட்கும் இறைவனாய்ச்சொல்லப் பெறும் புகழ்மருந்து, மணக்கும் கொன்றைமலர்மாலை சூடிய மருந்து, குற்றமற்ற குருவாகிய மருந்து, வீடுபேற்றின்பம் வழங்கும்மருந்து, ஒளிபொருந்திய சிறப்பெல்லாம் பொருந்திய மருந்தாகும்.

**விளக்கம்** : குரு - “ அன்று கையினால் உண்மைஞானம் கற்பித்த நின் அருளினுக்கு என்னகைம்மாறு காட்டுவேன் ? “ ( தாயுமான. தேஜோமய. 9 )

65. தாயிரங்காய் என்னத் தகுமருந்து சம்பந்தர்க்(கு)
ஆயிரம் செம்பொன் அருள்மருந்து - நோயோ(டு)
இருந்து வருந்துவர்முன் எய்திஅந்நோய் தீர்க்கும்
மருந்துதிரு வாரூர் மருந்து.

**குறிப்புரை** : தாய்= தாயே ( அண்மை விளி )

**பொழிப்புரை** : திருவாரூர் மருந்து; தாயே என்மேல் இரக்கம்காட்டு என்று வேண்டத்தக்க மருந்து, திருஞானசம்பந்தர்க்குத் திருவாவடுதுறையில் ஆயிரம் செம்பொற்காசுகள் அருளிய மருந்து, நோயால் வருந்துகிறவர் முன்தோன்றி நோய்தீர்க்கும் மருந்தாகும்.

**விளக்கம்** : ஆயிரம் பொற்காசுகள் அருளியது - “ கழுமல ஊரர்க்கு அம்பொன் ஆயிரம் கொடுப்பர்போலும் ஆவடு துறைய னாரே “ ( திருமு. 4. திருவாவடுதுறை . 1. )

66. குவிகைசிரம் கொண்(டு)அடியார் கூத்தாட முத்துச்
சிவிகை கவிகை திருச்சின்னம் - புவிபுகழ
ஆளுடைய பிள்ளயார்க்(கு) அன்றருளிச் செய்மருந்(து)ஒள்
வாள்உடைய ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : சிரம் கை குவிகொண்டு= தலைக்குமேல் கைகூப்பி. கவிகை= முத்துக்குடை. ஒள்வாள்= ஒளிரும்வீர கண்டயமென்னும் வீரக்கழல்.

**பொழிப்புரை** : ஒளிபொருந்திய வீரக்கழல் அணிந்த ஆரூர் மருந்து; அடியவர் தம்தலைக்குமேல் கைகுவித்துக் களிப்புடன் கூத்தாட, திருஞான

சம்பந்தர்க்கு முத்துப் பல்லக்கு, முத்துகுடை, திருச்சின்னம் ஆகியவற்றைத் திருநெல்வாயில் அரத்துறையில் அன்று அருளியமருந்தாகும்.

**விளக்கம்** : திருஞானசம்பந்தர்க்கு முத்துச்சிவிகை முதலியன அருளல் - ஏறுதற்குச் சிவிகைஇடக் குடை, கூறிஊதக் குலவுபொற் சின்னங்கள், மாறில்முத்தின் படியினால் மன்னிய, நீறுவந்த நிமலர் அருளுவார் " ( பெரியபு. 2098 ). தலைக்குமேல் கைகூப்புவது சரணாகதி வணக்கமாகும்.

67. வில்கொண்(டு) அடித்த விசயற்(கு) அருள்மருந்து
கல்கொண்ட சாக்கியனார் கண்டமருந்(து) - அல்கொள்
களமருந்து சோழன் கவின்ஆரம் பூண்ட
வளமருந்து ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : அருள்= பாசுபதாஸ்திரம். அல்= இரவு - கருமை. களம்= கழுத்து. ஆரம்= முத்துமாலை.

**பொழிப்புரை** : உறையூர்ச் சோழன் காவிரியில் நீராடும்போது நழுவிய முத்துமாலையை வெண்ணாவலீசர்க்கு அர்ப்பணிக்க அதனை ஏற்றுப்பூண்ட அருள்வளமார் ஆரூர் மருந்து; தன்னை வில்லால் அடித்த விசயனுக்குப் பாசுபதம் என்ற அம்பினை அருளிய மருந்து, சாக்கியர் கல்லால் அடிக்க அதை ஏற்றமருந்து, நஞ்சினால் கருமைகொண்ட கழுத்துடைய மருந்தாகும்.

**விளக்கம்** : சோழனின் முத்தாரம் பூண்டது - " பாரும் விண்ணும் கைதொழப் பாயும்கங்கை செஞ்சடை, ஆரம்நீரோடு ஏந்தினான் ஆனைக்காவு சேர்மினே " ( திருமு. 3. ஆனைக்கா. 7. ) விசயன் விலால் அடித்தது - " வஞ்சகர்பால் ............பஞ்சவரில் ஒருவன் வில்லால் அடித்தபுண்ணும் பார் ....." ( தனிப்பாடல். இராமச்சந்திர கவிராயர்.) விசயற்கு அருளியது - " அருச்சுனர்க்குப் பாசுபதம் கொடுத்தானை " ( திருமு. 4. கச்சிஏகம்பம்.10 ) சாக்கியர்பால் கல்லடிபட்டது - " நாடோறும் சிவலிங்கம் கண்டுஉண்ணும் அதுநயந்து, மாடோர்வெள் ளிடைமன்னும் சிவலிங்கம் கண்டுமனம், நீடோடு களிஉவகை நிலைமைவரச் செயல்அறியார், பாடுஓர்கல் கண்டுஅதனைப் பதைப்போடும் எடுத்துஎறிந்தார். " பெரியபு. 3649. ) கழுத்தில் நஞ்சின் கறை - " கறைமிடறு அணியலும் அணிந்தன்று " ( புறம். கடவுள்வாழ்த்து )

68. கமரில்கை தோற்றிக் கழுத்தரிகை பற்றித்
தமராய்த் தடுத்து விடேல்சத்தம் - அமர
எழுப்பிவிடைக் காட்சிஅன்பர்க்(கு) ஈந்தமருந்(து) என்றும்
வழுத்தவிர்த்த ஆரூர் மருந்த.

**குறிப்புரை** : கமர்= நன்செய்நிலத்து வெடிப்பு. விடேல்= ( முழுமாவடு ஊறுகாயைக் கடிக்கும்போது எழும் ) ஒலிக்குறிப்பு, அமர= ஒப்ப.

**பொழிப்புரை** : எந்தக்காலத்திலும் வழுவேற்படாது செய்த ஆரூர் மருந்து; ( பெருமானுக்குக் கொண்டுவந்த உணவு கைநழுவ, மாவடு ஊறுகாய்

நிலத்து வெடிப்பில் உட்போக வருந்திய அரிவாட்டாயர் தன்கழுத்தை அரிந்துகொள்ள முற்பட்டபோது ) வெடிப்பில் இருந்து தன்கையை வெளிப்படுத்திக் கழுத்தரிய முற்பட்ட கையைத் தடுத்தும், வெடிப்பிலிருந்து மாவடுவைச் சுவைக்கக் கடிக்கும் போது எழும் “விடேல்” என்றது ஒத்த ஒலி எழுப்பியும் அரிவாட்டாயருக்குக் காட்சிகொடுத்த மருந்தாகும்.

**விளக்கம்** : மாவடு ஊறுகாய் கடிக்கும்போது எழும் விடேல் ஒலியும், கழுத்தரிய முற்பட்டகையைத் தடுத்ததும் - “ வீசிய செய்யகையும் மாவடு விடேல்விடேலென், ஓசையும் கமரில்நின்றும் ஒக்கவே எழுந்தவன்றே. “ ( பெரியபு. 925 )

**69.** கல்புணையால் சொற்கோன் கடலேறச் செய்மருந்து
மல்புனை பூதத்தால் மலைபோன்ற - நெல்குவையை
வீடுமறு(கு) எங்குநிறை வித்தமருந்(து) ஒண்சிகரி
மாடுபுனை ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : ஒண்சிகரி= ஒளியுடைய கோபுரங்கள். மாடுபுனை= பக்கங்களில் கொண்ட. கல்புணை= கல்லாகிய தெப்பம். சொற்கோன்= திருநாவுக்கரசர். மல்= வலிமை. வீடு மறுகு= வீட்டிலும் ஆரூர்த் தெரு வெங்கும்.

**பொழிப்புரை** : ஒளியுடைய கோபுரங்களைப் பக்கங்களில் கொண்ட ஆரூர் மருந்து; கல்லையே தெப்பமாகக் கொண்டு திருநாவுக்கரசர் கடலிலிருந்து கரையேற அருளியமருந்து, சுந்தரர்க்குக் குண்டையூர்க்கிழார் தந்த மலைபோன்ற நெற்குவியலை வலிமைமிக்க பூதங்கள் மூலம் பரவையார்வீட்டிலும் ஆரூர்த்தெருவெங்கும் நிறைவித்த மருந்தாகும்.

**விளக்கம்** : பரவையார் வீட்டிலும் ஆரூரெங்கும் நெல்மலை - “ குண்டையூர் நெல்மலையைக் குறட்பூதப் படைகவர்ந்து, வண்டுலாம் குழற்பரவை மாளிகையை நிறைவித்தே, அண்டர்பிரான் திருவாரூர் அடங்கவும் நெல்மலையாக்கி “ ( பெரியபு. 3184. ) கல் தெப்பமானது - “ கல்லினோடு என்னைப் பூட்டி அமண்கையர், ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால், நெல்லு நீள்வயல் நீலக் குடிஅரன், நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேனன்றே “ ( திருமு. 5. திருநீலக்குடி. 7. )

**70.** வீயாச் சிரகிரியின் மேயசெட்டிப் பெண்ணுக்கு
மாயாத் தயில மருந்(து)ஏந்தித் - தாயாய்வந்(து)
அன்பாய் மருத்துவசெய் ஆன்றமருந்(து) ஒண்கடல்சூழ்
மன்பார்சொல் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : வீயா= அழிவற்ற. சிரகிரி= திருச்சிராப்பள்ளி. மேய= வாழ்ந்த. மாயா= ஆற்றல் குன்றாத. ஒண்= ஒளி. மன் பார் சொல்= பெருமைபொருந்திய உலகம் போற்றும்.

**பொழிப்புரை** : ஒளிபொருந்திய கடல்சூழ்ந்த பெருமைபொருந்திய உலகம் போற்றும் ஆரூர் மருந்து; அழிவற்றசிறப்புடைய திருச்சிராப்பள்ளியில் வாழ்ந்த செட்டிப்பெண் இரத்தினாவதிக்கு மகப்பேறு மருத்துவத்தின் பொருட்டு ஆற்றல் குன்றாத தயிலமருந்துடன் தாயாகவந்து அன்புடன் மருத்துவம் செய்த மாட்சிமைப்பட்ட மருந்தாகும்.

**விளக்கம்** : சிராமலை இறைவன் தாயுமானவர். திருவாசகம் இவரைத் " தாயானஈசன் " என்று அண்டத்துக்குத்தாய் என்றுபொதுப்படக்குறிப்பிடும், இதனையொட்டியதே இரத்தினாவதிக்கு மகப்பேறு மருத்துவம் பார்த்தது.

71. கன்(று) இழந்த ஆஇரக்கம் கண்டுதேர் ஊர்ந்தசேய்
கன்(று)உயிர் தந்தமருந்(து) ஆரூரர்க்(கு) - ஒன்றும்
அருச்சனைபாட்(டு) என்ற அருமருந்து சோலை
மருச்செறிதென் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : கன்று= பசுவின் கன்று. ஆ= பசு. சேய் கன்று= மனுநீதிச் சோழன் மகனான வீதிவிடங்கன், பசுவின்கன்று. ஒன்றும்= உளம்ஒன்றிய. அருச்சனை= வழிபாடு. பாட்டு= இறைவன் புகழ்பாடும் பாட்டு. சோலை மரு= சோலைகளும் நறுமணமும் / சோலைமலர் மணம்.

**பொழிப்புரை** : சோலைகளும் நறுமணமும் செறிந்த ஆரூர் மருந்து கன்றை இழந்த பசுவின் துயரம் கண்டு, கன்றின்மேல் தேர்ஊர்ந்த வீதிவிடங்கனுக்கும் கன்றுக்கும் உயிர்தந்த மருந்து, சுந்தரரிடம் இறைவன் புகழை " அவரவர் உளம்ஒன்றிப் பாடுவதே வழிபாடாகும் " என்றுகூறி நெறிப்படுத்திய அருமருந்தாகும்.

**விளக்கம்** : ஒன்றும் அருச்சனை பாட்டே - " அன்பில்பெருகிய சிறப்பின்மிக்க அருச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக என்றார் தூமறை பாடும் வாயார் " ( பெரியபு. 216 ). ஒன்றி வாய்திறந்து பாடும்போது, நம்செவிக்கண் நிரம்பியுள்ள காற்று, அப்பாட்டின் ஒலியை எதிரொலித்து நம்மைக் கேட்கச்செய்வதால், புறத்தே நிகழும் ஒலிகள் நம்செவிக்கண் புகுவதில்லையாதலின் மனச்சலனத்துக்கு வாய்ப்பில்லை. மேலும் வாய்திறந்து பாடும்போது உட்காற்றை - உயிர்வளி இல்லாத கரியமிலவளியை மிகுதியாக வெளிவிடலும், வெளிக்காற்றை - உயிர்வளி மிக்க காற்றை உட்கொள்ளலும் இயல்பாகவே நிகழ்வதால் நம் உடல்நலம் கூடுகிறது. மற்றும் பாடும்பாட்டு இறைவனது பொருள்சேர் புகழுடையதாதலின் நம் உயிர்நலம் - உளநலம் மேம்படுகிறது

72. காலன்கன் றாகக் கறக்கும் பசுவாகி
ஏல உலாய எழில்மருந்து - சால
இறுகு மனத்தேற்(கு) இரங்கும்மருந்(து) அம்தேர்
மறுகுதிகழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : அம்தேர் மறுகு= அழகிய ஆழித்தேரும் அழகிய தேரோடும் வீதியும். ஏல= மிகுதியும். இறுகுமனம்= இரக்கமற்ற மனம்.

**பொழிப்புரை** : அழகிய ஆழித்தேரும் அழகிய தேரோடும் வீதியும் விளங்கும் ஆரூர் மருந்து; யமனை இளங்கன்றாக்கி ஈசனாகியதான் பசுவாக வந்து அரசுலாம் தெருவில் மிகுதியும் உலாவிய அழகிய மருந்து, இரக்கம் மிகுதியும் அற்றமனமுடைய எனக்கு இரங்கியருளும் மருந்தாகும்.

**விளக்கம்** : கன்றும் பசுவும்பற்றிய ஓர்அம்மானைப் பாடல் - " ஈசன் பசுவாகி ஏமன்ஒரு கன்றாகி , வீசுபுகழ் ஆரூரின் வீதிவந்தார் அம்மானை, வீசுபுகழ் ஆரூரின் வீதிவந்தார் ஆமாயின், காசளவு பாலும் கறக்குமோ அம்மானை, கன்றை உதைகாலி கறக்குமோ அம்மானை " ( தனிப்பாடல் )

73. கலத்தில் படைத்த கறிமீண்டு சேயாய்
நலத்தி(ன்)வரச் செய்மருந்து நந்தன் - குலத்தில்
உயர்மறையோ னாய்த்தாள் உறச்செய் மருந்து
மய(வு)அகற்றும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** :. கலம்= உணவு உண்கலம். கறி= பிள்ளைக்கறி. சேயாய்= பிள்ளையாக. தாளுற= திருவடிப்பேறு பெற. மயர்வு= மயக்கம்.

**பொழிப்புரை** : மனமயக்கம் போக்கும் ஆரூர் மருந்து; உணவு உண்கலத்தில் படைத்த சீராளனாகிய கறியை மீண்டும் உயிருடன் சீராளனாக நலமுடன் வரச்செய்த மருந்து, பிற்படுத்தப்பட்ட குலத்து நந்தனாரை, உயர்ந்த மறையவர் குலத்தவராக்கியதுடன் தனது திருவடிப் பேறு பெறவும் செய்த மருந்தாகும்.

**விளக்கம்** : பெரியபுராணத்தில் சீராளன் செய்தியைச் சிறுத்தொண்டர் புராணத்திலும், நந்தனார் செய்தியைத் திருநாளைப் போவார் புராணத்திலும் விரிவாகக் காணலாம்.

74. காட்டமறைக் காட்டில் கதவுதிறக் கும்மருந்து
மீட்(டு)அக் கத(வு)அடைக்கும் மெய்ம்மருந்து - வேட்ட
அதிபத்தர் பொன்மீன்பெற்(று) ஆண்டமருந்(து) அன்பர்
வதியுற்ற ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மறைக்காட்டில் காட்ட= திருமறைக்காட்டில் இறைவனைக்காட்ட. மீட்டு= மீண்டும். வேட்ட= விரும்பிய. வதி= வாழ்வு.

**பொழிப்புரை** : அடியவர் வாழ்கின்ற ஆரூர் மருந்து; திருமறைக் காட்டில் இறைவனை அடியவர்களுக்குக் காட்டும்பொருட்டு அப்பரடிகள் மூலம் கதவைத்திறக்கச் செய்த மருந்து, காப்பின்பொருட்டுத் திருஞான சம்பந்தர் மூலம் திருக்கடைக்காப்பிடச் செய்த ஞானமருந்து, அதிபத்தர் விரும்பியவாறே அவர் காணிக்கையாக்கிய பொன்மீனை ஏற்றுஅவர்க்கு அருள்புரிந்த மருந்தாகும்.

**விளக்கம்** : கதவு திறக்கப்பாடியது -" கண்ணினால் உமைக்காணக் கதவினைத், திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே " ( திருமு. 5. திருமறைக்காடு. இப்பதிகம் முழுவதும் மகுடமாக அமைந்தது கதவு திறக்கவேண்டுதலே.) கதவு திருக் காப்புக்கொள்ளப் பாடியது - " இதுநன்கு இறைவைத்து அருள்செய்க எனக்குஉன், கதவம் திருக்காப்புக் கொள்ளும் கருத்தாலே " ( திருமு. 2. திருமறைக். 1 ) அதிபத்தர் பொன்மீனை இறைவனுக்காக்கியது - ' சீர்த்தொண்டர், பொன்திரள் சுடர்நவமணி பொலிந்தமீன் உறுப்பால், ஒன்றுமற்றிது என்னைஆளு டையவர்க்கு ஆகும், சென்றுபொற்கழல் சேர் "கெனத் திரையொடும் திரித்தார்' . ( பெரியபு. 4013.)

75. பொய்யா மருந்து புனல்சூ டியமருந்து
மெய்யார்க்(கு) ஒளியாய் மிளிர்மருந்து - நையா
உளத்தார்க்(கு) இருளாய் ஒளிக்குமருந்(து) இன்ப
வளத்தனார் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : புனல்= கங்கை. மெய்யார்= ஞானியர். நையா= உருகாத. பவளத்தனார்= பவளம் போன்ற திருமேனியர்.

**பொழிப்புரை** : இனிய பவளம்போன்ற திருமேனியராகிய ஆரூர் மருந்து; அருளுவதில் பொய்யாத மருந்து, கங்கையைச் சூடிய மருந்து, ஞானியர்க்கு ஒளியாக விளங்கும் மருந்து, உருகாத மனமுடையவர்க்கு இருளாக மறைந்துகொள்ளும் மருந்தாகும்.

**விளக்கம்** : சிவன் பவளமேனியன் - " பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும் " ( திருமு. 4. கோயில் )

76. அண்டிவணங்கா அமண(ர்)குரு டாய்ஓடத்
தண்டிஅடி கட்(கு)இருகண் தந்தமருந்து - உண்டிவிரா
நஞ்(சு)அமுதா நாவரசர் நன்(கு)அருந்தச் செய்மருந்து
மஞ்சுதிகழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : அண்டி= சார்ந்து. உண்டிவிரா= பாற்சோற்றுடன் கலந்த. மஞ்சு= மேகம்.

**பொழிப்புரை** : மேகம் உலாவும் ஆரூர்மருந்து; தன்னைச் சார்ந்து வணங்காத சமணர்கள் குருடராகி ஓட, தண்டிஅடிகட்கு இருகண்தந்த மருந்து, நஞ்சுகலந்த பாற்சோற்றை திருநாவுக்கரசர் அமுதமாக உண்ணச்செய்த மருந்தாகும்.

**விளக்கம்** : பெரியபுராணம் 3616 ஆம் செய்யுளில், தண்டியடிகள் கண்பெற்றதை " தொழுது புனல்மேல் எழும்தொண்டர் தூய மலர்க்கண் பெற்றெழுந்தார் " என்றும், சமணர் கண்இழந்ததை " இழுதை அமணர் விழித்தேகண் இழந்து தடுமாற " என்றும் தொட்டுக்காட்டிக் கண்ணிழந்த சமணர் நிலையை 3618, 3619 செய்யுள்களில் விரித்தும் கூறுகிறார். தனக்கு

அளித்த நஞ்சுகலந்த பாற்சோற்றை இறைவன் அமுதாக்கியதைத் திருநாவுக்கரசர், " வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர்தந்த, நஞ்சுஅமுது ஆக்குவித்தார் நனிபள்ளி அடிக ளாரே " ( திருமு. 4. திருநனி. 5 )

77. சொல்லரசை மாவேழம் சூழ்ந்துவணங் கிச்சமணர்க்
கொல்லத் திருப்பு குணமருந்து - பல்லவனைச்
சைவக் கரையேற்று தண்மருந்(து)அன் பர்க்குமல
மைவிலக்கும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மாவேழம்= ஆண்யானை. பல்லவன்= மகேந்திரவர்ம பல்லவன். மலமை= மும்மலஇருள். தண்மை= அருள்

**பொழிப்புரை** : அடியவர்களின் மும்மல இருளைநீக்கும் ஆரூர் மருந்து; திருநாவுக்கரசரின் தலையை இடறவந்த களிறு அவரைச் சுற்றிவந்து வணங்கிச் சமணர்களைக் கொல்லத் திரும்புமாறுசெய்த நற்குணமருந்து, மகேந்திரவர்ம பல்லவனைச் சமணத்துள் ஆழாது சைவக்கரை ஏறச்செய்த அருளுருவமான மருந்தாகும்.

**விளக்கம்** : கொல்லவந்த களிறு வணங்கிமீண்டது - " தலைவனாகிய ஈசன் தமர்களைக் கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமோ " ( திருமு.5. தனித்திருக் குறுந்தொகை. 5 ) பல்லவன் சைவனானதைத் திருச்சிராப்பள்ளிமலைக் குடைவரைக் கல்வெட்டு விரிவாகக் கூறும்.

**இலக்கணக்குறிப்பு** : சைவக்கரை - உருவகம்.

78. நீற்றறைவா கீசருக்கு நீர்வாவி யாய்இளந்தென்
காற்றாய் அமுத கலைமதியாய்த் - தோற்றிச்
சுகம்செய்யச் செய்மருந்து தொன்மறையோர் கூடி
மகம்செய்யும் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : நீற்றறை= சுண்ணாம்புக் காளவாய். தென்காற்று= தென்றல் காற்று. அமுத கலை= இனிய கலை. மகம்= வேள்வி.

**பொழிப்புரை** : தொன்மையான மறைவல்லார் கூடி வேள்விசெய்யும் ஆரூர் மருந்து; சமணர்கள் திருநாவுக்கரசரை இட்ட சுண்ணாம்புக் காளவாய் அவருக்கு நீர்நிறைந்த குளமாக, இளந்தென்றலாய், இனிய கலைவளரும் பிறையாய்த் தோன்றச்செய்து சுகமருளிய மருந்தாகும்.

**விளக்கம்** : " மாசில் வீணையும் மாலை மதியமும், வீசு தென்றலும் வீங்கிள வேனிலும், மூசு வண்டறை பொய்கையும் போன்றதே, ஈசன் எந்தை இணையடி நீழலே. ( திருமு. 5. தனித்திருக் குறுந்தொகை. 1 )

79. திருக்கயிலைக் காட்சிதரி சிக்கக்கை கால் மார்(பு)
உருகலையச் சென்றஅப்பர்க் குத்தம் - திருக்காட்சி
ஐயாற்(று) அருளுமருந்(து) அம்களத்தில் வெய்யகடு
வைஆற்றும் ஆரூர் மருந்து,

**குறிப்புரை** : கலைய= தேய. அம்களம்= அழகிய கழுத்து. கடு= நஞ்சு.

**பொழிப்புரை** : கொடிய நஞ்சினை அழகிய கழுத்தில்தாங்கிய ஆரூர் மருந்து; திருகயிலையில் சிவபிரானைக் கண்டுவணங்கத் தனது கை கால் மார்பு ஆகியன தேய்ந்தும் சென்ற அப்பரடிகட்குத் தமது திருகாட்சியைத் திருவையாற்றில் அருளிய மருந்தாகும்.

**விளக்கம்** : திருவையாற்றில் கயிலைக் காட்சி காணல் - " மாதர்ப் பிறைக் கண்ணியானை ' ( திருமு. 4. ) என்று தொடங்கும் பதிகம் முழுதும்

80. தந்தைக் கொலைசிவ தர்மமாச் சேய்ஞலூர்
வந்தபிள்ளை யார்க்(கு)அருளும் மாமருந்து - சுந்தரர்முன்
ஆற்றிலிட் டுக்குளத்தில் ஆய்ந்(து)எடுத்த பொன்சேயால்
மாற்றுரைத்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : சேய்ஞலூர் வந்தபிள்ளை= சண்டீசர் ஆன விசாரசர்மர். ஆய்ந்து= தேடி. சேய்= விநாயகர்.

**பொழிப்புரை** : சுந்தரர் மணிமுத்தாற்றில் இட்டு ஆரூர்க் கமலாலயத் திருக்குளத்தில் தேடி எடுத்த பொன்னின் மாற்றினைத் தனது மகனான விநாயகர் மூலம் கூறச்செய்த ஆரூர் மருந்து; திருமுழுக்குக்கு வைத்திருந்த பாற்குடத்தைக் காலால் கவிழ்த்த தன் தந்தைக் கொன்ற சேய்ஞலூர்ப் பிள்ளையாகிய விசாரசர்மருக்குச் சண்டீசப்பதம் அருளிய மருந்தாகும்.

**விளக்கம்** : விநாயகர் மாற்றுரைத்தார் என்றசெய்தியை மாற்றுரைத்த பிள்ளையார் என்று அங்குள்ளமை கொண்டு இவ்வாறு கூறினார்.

81. சேரர் பெருமானார் செய்மும் மணிக்கோவை
ஏர்அமையக் கேட்டமருந்(து) ஏயர்கோன் - சீர்வயிற்றுச்
சூலைநம்பி போய்த்தீர்க்கச் சொன்ன மருந்து செங்கழுநீர்
மாலைபுனை ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மும்மணிக்கோவை= திருவாரூர் மும்மணிக்கோவை. ஏர்= நன்மை. நம்பி= சுந்தரர்.

**பொழிப்புரை** : செங்கழுநீர் மாலையணிந்த திருவாரூர் மருந்து; சேரமான் பெருமாள் இயற்றிய திருவாரூர் மும்மணிக்கோவையை நன்மைபொருந்தக் கேட்டமருந்து, சிறந்த ஏயர்கோன் கலிக்காமரின் சூலைநோயை அவரிடம்போய்த் தீர்க்குமாறு சுந்தரர்க்குச் சொன்னமருந்தாகும்.

**விளக்கம்** : ஏயர்கோனின் சூலை தீர்க்குமாறு சுந்தரர்க்குச் சொன்னது - " இன்றுநம் ஏவலாலே ஏயர்கோன் உற்றசூலை, சென்றுநீ தீர்ப்பாயாக " என்றுஅருள் செய (பெரிய. 3553. )

82. சீர்த்தி மதுரையிற்கை தேய்த்ததிருத் தொண்டராம்
மூர்த்திக்(கு) அர(சு)அளித்த முன்மருந்து - பூர்த்திநமி

நந்திநீ ரால்விளக்கு நன்(கு)எரிக்கச் செய்மருந்து
வந்துவிண்சூழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : கைதேய்த்தது= ( பெருமானுக்கு நாடோறும் அரைவைச் சந்தனம் அளித்தபணிக்கு ஏற்பட்ட முட்டுப்பாட்டால்) தன்முழங்கையையே சந்தனமாகத் தேய்த்தது. பூர்த்தி நன்கு= முழுமையாக நன்கு. விண்= தேவர்.

**பொழிப்புரை** : தேவர்கள் வந்து வணங்கும் ஆரூர் மருந்து; மதுரையில் பெருமானுக்கு நாடோறும் அரைவைச் சந்தனம் அளித்தபணிக்கு ஏற்பட்ட முட்டுப்பாட்டினால் தன் முழங்கையையே சந்தனமாக அரைத்த சிறப்புடைய மூர்த்தியாருக்குத் திருநீறு, கண்மணி, சடைமுடியுடன் அரசளித்துஆளச்செய்த முதன்மையானமருந்து, நமிநந்தியடிகள் தண்ணீரால் முழுமையாக நன்கு விளக்கெரிக்கச் செய்தமருந்தாகும்.

**விளக்கம்** : மூர்த்தியார் முழங்கை தேய்த்தது - " நட்டம் புரிவார் அணிநல்திரு மெய்ப்பூச்(சு)இன்று, முட்டும் பரிசாயினும் தேய்க்கும்கை முட்டாதென்று, வட்டம் திகழ்பாறையின் வைத்துமுழங்கை தேய்த்தார் " ( பெரியபு. 992. ) நீரால் விளக்கெரித்தது - விளக்கெரிக்க நெய் இல்லையேல் தண்ணீஊற்றி எரிக்கசொன்ன சமணர்சொல்கேட்டு " நாதர்அருளால் திருவிளக்கு நீரால் எரித்தார் நாடறிய " ( பெரியபு. 1884. )

83. மாமணத்தின் மானக்கஞ் சாறனார் மாமகளார்
பூமணக்கும் கூந்தல்நம் பூணூலுக்(கு) - ஆமென்(று)
அரிந்துவளர் வித்த அருமருந்து நாகம்
வரிந்தவரை ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : வரிந்த= இறுகக்கட்டிய. அரை= இடுப்பு. மாமணம்= திருமணம்.

**பொழிப்புரை** : நாகப்பாம்பை இடைக்கச்சாக இறுகக் கட்டிய ஆரூர் மருந்து; மானக்கஞ்சாறரின் திருமணத்திற்குரிய அழகிய மகளின் பூமணக்கும் கூந்தல் நமது பஞ்சவடிக்கு - மயிரினால் ஆன பூணூலுக்கு - ஆகுமென்று கேட்ட அளவில் அதனை அவர் அரிந்துதரப் பெற்றுப் பின் தலைமுடி மீண்டும் வளரச்செய்த அருமருந்தாகும்.

**விளக்கம்** : மறுநாள் ஏயர்கோனுக்குத் திருமணம் செய்யவிருந்த மானக்கஞ்சாறர் மகளின் நீண்ட கூந்தலை, மாவிரதராக வந்த சிவபிரான் கேட்க அரிந்து கொடுத்தபோது வாங்குவார்போல் இருந்த சிவபிரான் மீண்டும் கூந்தல்நீண்டு வளரஅருளினான். தடையின்றித் திருமணமும் நடைபெற்றது.

84. அன்புருவாம் காரைக்கால் அம்மைதிரு வந்தாதி
இன்புறக் கேட்டமருந்(து) ஏர்முரு - கன்பூண்டி
யில்கவர்ந்த பொன்நம்பி ஏத்தத் தருமருந்து

மல்கலந்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மல்= வளம் - நீர்வளம் நிலவளம் மக்கள்மனவளம்.

**பொழிப்புரை** : நீர்வளம் நிலவளம் மக்கள் மனவளம் ஆகியன கலந்த ஆரூர் மருந்து; அன்பேவடிவான காரைக்கால் அம்மையாரின் அற்புதத் திருவந்தாதியைக் கேட்ட மருந்து, அழகியதிருமுருகன் பூண்டியில் சுந்தரரிடம் கவர்ந்த பொன்னை அவர் ஏத்தியதால் தந்தமருந்தாகும்.

**விளக்கம்** : சுந்தரர் திருமுருகன் பூண்டியில் ஏத்தியபதிகம் " கொடுகு வெஞ்சிலை " என்று தொடங்குவது. இப்பதிகமகுடம் " எத்துக்கு இங்கு இருந்தீர் எம்பிரானிரே " என்ற மகுடமுடையதாகும்.

**85.** உதியர்பிரான் வன்தொண்டரோ(டு) ஐயா(று)ஏக
நதிவிலகி மேற்புறத்தின் நண்ணி - வதிஉதவ
ஆற்றுமருந்(து) ஒண்மன்றத்(து) ஆடும்மருந்(து) என்கவலை
மாற்றுமருந்(து) ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : உதியர் பிரான்= சேரமான்பெருமாள். நதி= காவிரிஆறு. வதி= வழி. உதவ ஆற்று= உதவிசெய்த.

**பொழிப்புரை** : என்மனக்கவலையைப் போக்கும் ஆரூர்மருந்து; சேரமான்பெருமாள் நாயனாருடன். நம்பியாரூரர் திருவையாற்றுக்கு அருள்தரு ஐயாறப்பரை வணங்கச் செல்லும்பொருட்டு, காவிரிஆற்று நீர் மேற்புறம் தேங்கிநின்று வழிஉதவச்செய்த மருந்து, ஒளிரும் பொன்னம்பலத்தில் ஆடும் மருந்தாகும்.

**விளக்கம்** : காவிரி வழிவிட்டது - " விண்ணின் முட்டும் பெருக்காறு மேற்பால் பளிங்கு வெற்பென்ன, நண்ணி நிற்கக் கீழ்ப்பால்நீர் வடிந்தநடுவு நல்லவழிப், பண்ணிக் குளிர்ந்த மணற்பரப்புக்கண்டதொண்டர் "(பெரியபு. 3888)

**86.** தாலி கொடுத்(து)எதிரே சார்குங் கிலியத்தை
ஏலக் கொடுதூபம் இட்(டு)உவந்த - நூலணிந்த
மார்பரைஇல் சென்(று)உண்க மாஎன்ற நன்மருந்து
வார்புகழார் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : எதிரேசார்= எதிரேவந்த. நூல்= பூணூல். உண்கமா= உண்க. வார்= நீண்ட.

**பொழிப்புரை** : நீண்ட புகழுடைய ஆரூர் மருந்து; எதிரேவந்த குங்குலியத்தை, வறுமையிலும் தவறாது குங்கிலியமிட,மனைவிக்குக்கட்டிய தாலியைக்கொடுத்துவாங்கி இறைவனுக்குமிகுதியாகத் தூபம்இட்டுக் களித்த பூணூல் அணிந்த அந்தணராகிய குங்கிலியக் கலயரிடம் " சாலப் பசித்தாய்உன்தன் தடநெடுமனையில் நண்ணிப், பாலினின் அடிசில் உண்டு பருவரல் ஒழிக " என்றதுடன் இல்லத்தில் இருநிதிக்குவையும் சேர்த்த நன்மருந்தாகும்.

**விளக்கம்** : இச்செய்தியைப் பெரியபுராணம் குங்கிலியக் கலய நாயனார் புராணத்தில் விரிவாகக் காணலாம்.

**87.** கழுத்தில் கயிறு கலயனார் பூண்(டு)அன்(று)
இழுத்தபின்நேர் நின்றமருந்(து) யாரும் - வழுத்தக்
குருந்தடியில் வாதவூர்க் கோமானை ஆண்ட
மருந்துதிரு வாரூர் மருந்து.

**குறிப்புரை** : கலயனார்= குங்கிலியக் கலயர். வழுத்த= வணங்க.

**பொழிப்புரை** : திருவாரூர் மருந்து; ( தாடகையின் மானம்பேண முன்னாளில் அவள் மாலையைச் சாத்தும்பொருட்டுத் தன்தலைதாழ்த்திய திருப்பனந்தாள் அருள்தரு செஞ்சடையப்பர் தலையை நிமிர்த்த ) குங்கிலியக்கலயர் தன்கழுத்தில் கயிறு பூட்டி இழுத்தபின்னரே தலைநிமிர்ந்த மருந்து, யாவரும் வணங்க குருந்தமரத்தடியில் எழுந்தருளித்திருவாதவூரர்க்கு அருள்புரிந்த மருந்தாகும்.

**விளக்கம்** : குங்கிலியக் கலயரால் தலைநிமிர்ந்து நேர்நின்றமை - “ நண்ணிய ஒருமை அன்பின் நார்உறு பாசத்தலே, திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பிநிற்க ஒண்ணுமோ “ ( பெரியபு. 863. )

**88.** ஆரூர்ப் பிறந்தார்கள் ஆரும்நமி நந்திநம்
சீரூர் கணங்களெனச் செப்புமருந்(து) - ஏரூரும்
ஆண்பனை காய்க்க அருளுமருந்(து) ஆர்அருள்சேர்
மாண்(பு)அகலா ஆரூர் மருந்து.

**பொழிப்புரை** : நிறைந்த அருள்எல்லாம் ஒன்றுசேர்ந்த மாண்புடைய ஆரூர் மருந்து; நமிநந்தியே ! அழகுமிகும் ஆரூரில் பிறந்தவர்கள் அனைவரும் சிறப்புமிகும் நம் கணத்தவராவார் என்று கூறிய மருந்து, திருஞானசம்பந்தர் மூலம் திருஓத்தூரில் ஆண்பனை காய்க்க அருளியமருந்தாகும்.

**விளக்கம்** : அனைத்துக் குலத்தவருடனும் விழாவில் கலந்து கொண்டதால் தான்தீட்டுப்பட்டதாகக் கருதி, நீராடியபின்னரே வீட்டுக்குள் புகக்கருதிய நமிநந்தியிடம் கனவில் சிவபிரான் கூறியது - “ ஞானமறையோய் ஆரூரில் பிறந்தார் எல்லாம் நம்கணங்கள் ஆனபரிசு காண்பாய் “ என்று அருளிச்செய்து அங்கு எதிரகன்றார்.’ ( பெரியபு. 1897 ) ஆண்பனை காய்க்கச் செய்தது -“ குரும்பை ஆண்பனை ஈன்குலை ஓத்தூர் “ ( திருமு. 1. 11 )

**இலக்கணக்குறிப்பு** : நமிநந்தி - அண்மை விளி.

**89.** வேனில்வெப் பம்தவிர வெள்ளியமுத் தின்குடை
மேல்நிழற்ற வேணுபுர வேந்தர்க்குத் - தானளித்த
தண்மருந்து சங்கத் தமிழ்ப்புலவ ரோ(டு)ஆய்ந்த

வண்மருந்து ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : நிழற்ற= நிழல்தர. வேணுபுர வேந்தர்= சீர்காழித் திருஞான சம்பந்தர்.

**பொழிப்புரை** : திருவாரூர்மருந்து; சீர்காழிஞானசம்பந்தர்க்குக் கோடை வெப்பம் தவிர நிழல்தருமாறு வெண்மையான முத்தபந்தர் அளித்தகருணை மருந்து, சங்கப்புலவர்களுடன் தமிழாய்ந்த ஞானவளமார்ந்த மருந்தாகும்.

**விளக்கம்** : திருஞானசம்பந்தர்க்கு முத்துக்குடை அருளியது - " ஞான சம்பந்தன் நம்பால் அணைகின்றான், மானமுத்தின்சிவிகை மணிக்குடை, ஆன சின்னம் நம்பால் கொண்டு அருங்கலைக், கோன்அவன்பால் அணைந்துகொடும் என " அரத்துறைநாதர் அருளத் திருக்கோயிலில் கண்டு அவற்றைத் திருஞானசம்பந்தர்க்கு வழங்கினர். குடும்பத்துடன் இறைவன் தமிழாய்ந்தது - " தமரநீர்ப் புவனம் முழுதுஒருங்கு ஈன்றாள் தடாதகா தேவிஎன்று ஒருபேர் தரிக்கவந்ததுவும் தனிமுதல்ஒருநீ சவுந்தர மாறன் ஆனதுவும், குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர் கொண்டதும் தண்டமிழ் மதுரம் கூட்டுண எழுந்த வேட்கையால் எனில்இக் கொழிதமிழ்ப் பெருமை யார் அறிவார் " ( மதுரைக்கலம்பகம். 93.)

**90.** நாகைக்கா ரோணத்தில் நாவலூர் நம்பிக்கு
வாகைப் புரவிமணி மாலைமுதல் - ஓகையொடு
தந்த மருந்(து)இளசை சார்மாறர் முன்பசித்து
வந்தமருந்(து) ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : வாகை= மாட்சிமை. இளசை= இளையான்குடி.

**பொழிப்புரை** : ஆரூர் மருந்து; நாகைக்காரோணத்தில் சுந்தரர்க்கு மாட்சிமைபொருந்திய குதிரை, மணிமாலை முதலியவற்றை மகிழ்ந்து தந்தமருந்து, இளையான்குடிமாறர் முன்னே பசியுடன் வந்த மருந்தாகும்.

**விளக்கம்** : சுந்தரர், அருள்தரு காயாரோகணேசுவரரை வேண்டிப் பெற்றன -" முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக்கோவை அவை பூணத் தந்தருளி மெய்க்குஇனிதா நாறும் கத்தூரி கமழ்சாந்தும் அளித்தருளல் வேண்டும் " ( திருமு. 7 நாகைக்காரோணம் பதிகம் பட்டாடை வகை . கந்தம் ஆடை ஆபரணம் அருநிதியம் பொன்சுரிகை பொற்பூ பட்டிகை முப்போதும் கறிவிரவு நெய்ச்சோறு ஒளிமுத்தம்..........கமழ்சாந்து வேண்டியதையும். இவைபெற்றதைப் பெரியபுராணம்பா 3815 ம் குறிக்கிறது. இளையான்குடி மாறர் மனைவியிடம், " தபோதனர் தீரவே பசித்தார் " என்றார்.

**91.** இந்தனம் தாங்கி எழில்மதுரை மாமறுகில்
வந்து விலைபகர்ந்த மாமருந்து - சந்தமலி
போதம் தருமருந்து பூவணத்தில் சென்(று)இரத
வாதம்செய் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : இந்தனம்= விறகு. சந்தம்மலி= நலவிளக்கம்ம்மலிந்த. போதம்= ஞானம். இரதவாதம்= உலோகங்களைப் பொன்னாக்கல்.

**பொழிப்புரை** : பாணபத்திரர்க்காக, அழகிய மதுரைப் பெருவீதியில் விறகுச்சுமை தாங்கிவிற்ற சிறந்தமருந்து, நலமேமலிந்த ஞானம்தரும்மருந்து, திருப்பூவணத்தில் பொன்னனையாளுக்காக இரசவாதம் செய்த மருந்தாகும்.

**விளக்கம்** : விறகு விற்றதைத் திருவிளையாடற் புராணம் விறகுவிற்ற படலத்திலும், இரசவாதம் செய்ததை இரசவாதம் செய்தபடலத்திலும் விரிவாகக் காணலாம். இரசவாதம்பற்றிய செய்தியை, திருவாசகம் " பூவணம் அதனில் பொலிந்து இருந்தருளித் தூவணமேனி காட்டிய தொன்மையும் " ( கீர்த்தித்திரு. 49 - 50 ) என்று சுருங்கச் சுட்டும்.

92. ஆறு சுவைஅமுதம் அன்பின் முகமனொடு
நாறு குழல்கௌரி நன்(கு)ஊட்ட - வீறுபெற
உண்ட முதியமருந்(து) ஒண்காளை யாய்மழவாய்
மண்(டு) அழகார் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : முகமன்= உபசரிப்பு. வீறு= பொலிவு. மண்டு உண்ட= மிகுதியாகச் சாப்பிட்ட.

**பொழிப்புரை** : இனிப்பு கசப்பு உரைப்பு துவர்ப்பு புளிப்பு உப்பு ஆகிய ஆறுசுவைகளுடன் கூடிய உணவை அன்பார்ந்த உபசரிப்புடன் மணக்கும் கூந்தலுடைய கௌரியம்மை ஊட்ட, முதியவராய் வலிமைமிக்க காளையாய் குழந்தையாய்ப் பொலிவுபெற மிகுதியாக உண்டது ஆரூர் மருந்தாகும்.

**விளக்கம்** : இச்செய்தியைத் திருவிளையாடற் புராணம் பால குமார விருத்தனான படலம் விரிவாகக் கூறுகிறது.

93. மலயத் துவசன்பொன் மாலையோ டாட
அலைஅத்தி ஓரேழ் அழைத்த - நிலைமருந்(து)
அட்டசித்தி மாதவர் அறுவர்க்(கு) அருள்மருந்து
மட்(டு)அவிழ்தார் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : பொன்மாலை= மனைவி காஞ்சனமாலை. ஆட= நீராட. அலைஅத்தி= அலைகளுடைய கடல். நிலை= என்றும் நிலைத்த. மட்டு அவிழ்தார்= தேன் சொரியும்மலர் மாலை.

**பொழிப்புரை** : தேன்சொரியும் மலர்மாலையணிந்த ஆரூர் மருந்து; மலயத்துவச பாண்டியன் தன் மனைவி காஞ்சமாலையுடன் நீராட அலைகளுடைய ஏழ்கடல்களையும் அழைத்த மருந்து, மாதவர் அறுவர்க்கு எண்வகைச் சித்திகள் அருளிய மருந்தாகும்.

**விளக்கம்** : இதன் முதல் மூன்றடிகளில் உள்ளசெய்தி இரண்டையும் முறையே திருவிளையாடற்புராணத்தில் ஏழுகடல் அழைத்தபடலம், அட்டமாசித்தி உபதேசித்த படலத்திலும் விரிவாகக் காணலாம்.

94. சிங்கத்தைச் சிம்புளாய்ச் செற்றமருந்(து)) அண்டர்உடல்
அங்கத்தைப் பூண்ட அருமருந்(து) - திங்களொடு
கங்கை அணிமருந்து காமர் மலைபயந்த
மங்கைசேர் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : சிங்கம்= நரசிம்மம். சிம்புள்= சரபப்பறவை. செற்ற= வெறிநீக்கிய. அங்கம்= எலும்புக்கூடு. மலைபயந்த காமர் மங்கை . மலை= மலையரசன் - இமவான். காமர்= அழகிய.

**பொழிப்புரை** : இமவான் ஈன்ற அழகிய பார்வதியை இடப்பாகம் கொண்ட ஆரூர் மருந்து; இரணியனின் குருதி குடித்ததால் வெறிகொண்ட நரசிங்கத்தை , எண்காற் சரபப்பறவையாகி அதனைக்கொன்ற மருந்து, தேவர்களின் எலும்புக்கூட்டை மாலையாக அணிந்த மருந்து,பிறையுடன் கங்கை தரித்த மருந்தாகும்.

**விளக்கம்** : சிம்புளாய்ச் செற்றது - ‘ அஞ்ச லீர்என்று அளித்தனன் சிம்புளாய், வஞ்ச மானுட வாளரி ஆயுளைத், துஞ்சு வித்துஉரி கொண்டுஒளி தோற்றினான், தஞ்ச முண்டவர் தம்சரண் ஆயினான். “ (காஞ்சிப்புராணம். நாரசிங்கேசப் படலம். 12. ) தேவர்களின் எலும்புக்கூட்டை அணிந்தது - “ நரம்போடு எலும்பணிந்து கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ “ ( திருவாச. 265. )

95. மாமை திகழ்மருந்து மாலைத் துழாய்அணிந்த
ஆமை முதுகுஓ(டு) அணிமருந்து - காமன்உயிர்
அன்(று)இரதி வேண்ட அருள்மருந்து வீதிதொறும்
மன்றுதிகழ் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மாமை= அழகு. ஆமைமுதுகு ஓடு= ஆமையின் முதுகாகிய ஓடு. மன்று= பொதுவிடங்கள்.

**பொழிப்புரை** : வீதிகள் தோறும் பொதுவிடங்கள்கொண்ட ஆரூர் மருந்து; அழகு விளங்கும் மருந்து, துளசிமாலைஅணிந்த திருமாலின் கூர்மாவதாரமாகிய ஆமையின் முதுகு ஓட்டினை அணிந்த மருந்து, மன்மதனுக்கு உயிரருள இரதிவேண்ட உயிரருளிய மருந்தாகும்.

**விளக்கம்** : பாற்கடலில் அமுதம்பெற மத்தாக இருந்த மந்தரமலை அமிழாது திருமால் ஆமையாகக் கீழேஇருந்து தாங்கியதால் செருக்குற்று உலகுஅஞ்சுமாறு அவர் அக்கடலைக் கலக்கியதால் உயிர்கள் அஞ்ச சிவபிரான் அவ்வாமையை அழித்து அதனோட்டினை வெண்டலைமாலை நடுவில் கோத்து அணிந்தார். ( காஞ்சிப்புரா. கச்சபேசப்படலம் .)

96. மழுவால் எறிபத்தர் மாய்த்தகைம்மாப் பாகர்
எழுமா(று) அருளுமருந்(து) இன்பின் - வழுவா
அலர்சீர்ச் சிவகாமி யாண்டார்பூங் கூடை

மலர்சேர்த்த ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : மழு= கோடரி. கைம்மா= யானை.

**பொழிப்புரை** : ( தனது பூக்கூடையில் இறைவனுக்காக இருந்த மலர்களைச் சிந்திய யானை, அதைத்தடுக்காத பாகன் இருவரையும் சிவகாமிஆண்டார் மழுவால் எறிந்துகொன்றார். ) அங்ஙனம் கொல்லப்பட்ட யானையையும் பாகனையும் எழுப்பித்தந்த மருந்து, சிவகாமிஆண்டாரின் பூக்கூடையில் மலர்சேர்த்த மருந்தாகும்.

**விளக்கம்** : இவ்வரலாறு பெரியபுராணம், எறிபத்த நாயனார் புராணத்தில் உள்ளது.

**97.** சிலந்தி அரசாய்க்கோச் செங்கணான் என்று
நலம்திகழத் தோன்றிஅன்பு நண்ணி - வலம்திகழ
ஆக்குதளி மேவி அமரும் அருமருந்து
மாக்கவினார் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : தோன்றி= பிறந்து. நண்ணி= பொருந்தி. வலம்= வெற்றி. தளி= திருக்கோவில்.

**பொழிப்புரை** : மிக்க அழகுவடிவான ஆரூர் மருந்து; ஆனைக்கா அண்ணலுக்குத் தன்நூலால் பந்தலிட்ட சிலந்தி கோச்செங்கட்சோழனாகப் பிறந்து, அன்பு பொருந்த, வெற்றிவிளங்க எழுப்பிய மாடக்கோயில்களில் எழுந்தருளிய அருமருந்தாகும்.

**விளக்கம்** : கோச்செங்கணான் காலம் கி.பி 200 - 250 என்றும், இவனைப் பொய்கை ஆழ்வார் குறிப்பதையும், திருமங்கை ஆழ்வார் " எண்தோள் ஈசர்க்கு எழில்மாடம் எழுபது செய்து " என்று குறிப்பதையயும் கூறி, திருவானைக்கா, திரு அம்பர், நன்னிலம், வைகல் முதலியன கட்டியவன் கோச்செங்கணான் என்றும் குறிக்கிறார் டாக்டர். மா. இராசமாணிக்கனார். ( பல்லவர் வரலாறு பக். 11. ) இவன் வரலாற்றைப் பெரியபுராணம் கோச்செங்கட் சோழ நாயனார் புராணத்தில் விரிவாகக் காணலாம். " செங்கண் பெயர்கொண் டவன்செம் பியர்கோன், அங்கட் கருணை பெரிதாயவனே". என்றுபோற்றுவார் திருஞானசம்பந்தர். ( திருமு. 2.திருவானைக்கா. 5 .)

**98.** நலம்பொலியும் சேரர்பிரான் நன்குகொளப் பாதச்
சிலம்பொலிகேட் பித்(து)அருளின் செல்வ - வலன்பொலிநன்
நாவலூர்க் கோன்நண்பு நல்குமருந்(து) அம்பொழில்வாய்
மாவலூர் ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : நலம்= இன்பம் - வீடுபேற்றின்பம். சேரர் பிரான்= சேரமான் பெருமாள். வலன்= வலிமை. மா= வண்டு. வல் ஊர்= விரைந்து பறக்கும்.

**பொழிப்புரை** : அழகிய சோலைகளில் வண்டுகள் விரைந்து பறக்கும்

ஆரூர் மருந்து; சேரமான்பெருமாளுக்கு, வீடுபேற்றின்பம் பொலியும்திருவடிச் சிலம்பொலி கேட்குமாறுசெய்து, அருட்செல்வ வலிமை பொலியும் சுந்தரரின் நட்பினைத் தந்தமருந்தாகும்.

**விளக்கம்** : சேரமானுக்குச் சுந்தரர் நட்பருளல் - ' என்றபொழுதில் இறைவர்தாம் எதிர்நின்(று) அருளாது எழும்ஒலியால் " மன்றினிடை நம் கூத்தாடல் வந்துவணங்கி வன்தொண்டன், ஒன்றும் உணர்வால் நமைப்போற்றி உரைசேர்பதிகம் பாடுதலால் நின்றுகேட்டு வரத்தாழ்த்தோம் " என்றார் அவரை நினைப்பிப்பார் ' ( பெரியபு. 3796.)

99. திருமருகல் செட்டிவிடம் தீர்ந்(து)உய்யச் செய்த
அருமருந்து வேணுபுரத்(து) அன்பர்க்(கு) - இருநதிநீத்(து)
ஓடம் கரைசேர உந்துமருந்(து) அம்பொன்செய்
மாடமலி ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : செட்டி= வணிகன். வேணுபுரத்து அன்பர்= சீர்காழித்திருஞானசம்பந்தர். நதி இரு நீத்து= முள்ளியாற்று நீர்ப்பெருக்கு. உந்து= செலுத்திய. அம் பொன்செய்= அழகுடன் ஒளிரும்.

**பொழிப்புரை** : அழகுடன் ஒளிரும் மாளிகைகள் மலிந்த ஆரூர் மருந்து; திருமருகலுக்கு மாமன் மகளுடன் உடபோக்குவந்த வணிகனைப் பாம்பு தீண்ட அவன் இறந்தபோது திருஞானசம்பந்தர் மூலம் விடம்தீர்த்து மணம்செய்வித்து இருவரையும் வாழச்செய்த அரியமருந்து, திருக்கொள்ளம் பூதூரின் முள்ளியாற்றில் பெருகிய வெள்ளம் கடக்கத் திருஞானசம்பந்தர் அமர்ந்த ஓடம்தானேஓடிக் கரைசேரச் செய்தமருந்தாகும்.

**விளக்கம்** : மாமன் மகளுடன் உடன்போக்குவந்த வணிகனைப் பாம்புதீண்டியதால் அவன்இறக்க, விடம்தீரப்பாடிய பதிகம் " சடையாய் எனுமால் " என்று தொடர்வது. திருக்கொள்ளம் பூதூரில் ( இன்றைய திக்களம்பூர் ) ஓடம்தானே செல்லச் செலுத்தியது - " ஓடம்வந் தணையும் கொள்ளம் பூதூர், ஆடல்பேணிய அடிகளை உள்கச் செல்ல வுந்துக சிந்தை யார்தொழ நல்கு மாறுஅருள் நம்பனே " ( திருமு. 3. திருக்கொள்ளம்பூதூர். 6 ) இப்பதிகமுதல் பத்துப்பாடல்கள் " செல்ல வுந்துக சிந்தை யார்தொழ நல்கு மாறுஅருள் நம்பனே " என்ற மகுடம் உடையன.

100. திருமருந்து வேதச் சிரமருந்(து)ஆ னந்தம்
தருமருந்(து)என் கண்ணோய் தவிர்க்கும் - அருமருந்து
தேமருந்து நேரும் தியாகேசன் என்னும்பேர்
மாமருந்து ஆரூர் மருந்து.

**குறிப்புரை** : திரு= தெய்விகம். வேதச்சிரம்= உபநிடதம். தே= கிருபை - கருணை. மா= பெரிய.

**பொழிப்புரை** : ஆரூர் மருந்து; தெய்விகமருந்து, உபநிடதம் போற்றும்

மருந்து, இன்பம்தரும் மருந்து, எனது கண்ணோய் தீர்க்கும் அரியமருந்து, கருணைவடிவான மருந்து, தியாகேசன் என்ற புகழ்வாய்ந்த பெரியமருந்தாகும்.

## நூற்பயன்

மருந்துமருந்(து) என்றுகவி மாலை புனைந்தேன்
வருந்தும்எளி யேன்இன்னல் மாற்றி - இரும்தன்
பெருமா புகழ்பாடும் பேராத செல்வம்
தரும்ஆரூர் வாழ்தியாகே சன்.

**குறிப்புரை** : இரும்தன்= மிகப்பெரிய. மாபெரு புகழ்.

**பொழிப்புரை** : ஆரூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு தியாகேசப் பெருமானை மருந்து மருந்து என்று இக்கவிமாலையைப் புனைந்தேன். அதனால் அவன் துன்புறும் அடியேனின் துன்பத்தைப் போக்கி, மிகப்பெரிய தனது மாபெரும் புகழினைப் பாடுகின்ற நிலையான செல்வத்தை எனக்கு அவன் அருளுவான்.

**விளக்கம்** : மருந்து மருந்து என்ற அடுக்கில் முன்னது இம்மை நோய்கட்கும் மும்மலங்கட்கும் மருந்தாதலையும், பின்னது அம்மையில் வீடுபேற்றின்பத்தில் அமுதமாதலையும் குறித்தது.

**திருச்சிற்றம்பலம்**

உ

## மகாவித்துவான் தி. மீ. சு. பிள்ளை அந்தாதி.

ஆசிரியர்

**தலைமாணாக்கர். வித்துவான். தியாகராச செட்டியார்**

**************

**விநாயகர் துணை.**

சீர்கொண்ட வான்புகழ் மீனாட்சி சுந்தர தேசிகன்தாள்

நேர்கொண்ட பைந்தமிழ் அந்தாதி என்னும் இயல்அலங்கல்
நார்கொண்(டு) இசைத்துப் புனைய உதவும் நறைஇதழித்
தார்கொண்ட செவ்வந்தி ஆம்பல்பொற் றாமரைத் தாள்மலரே.

**குறிப்புரை** : தேசிகன்= குரு. நேர்= தகுதி இயல்அலங்கல்= இயற்றமிழ் மாலை. நார்= அன்பு. நறை இதழித் தார்= தேன்பொருந்திய கொன்றைமலர் மாலை. செவ்வந்திஆம்பல்= செவ்வந்தி விநாயகர். ஆம்பல்=யானை-விநாயகர். ( திருச்சிராப்பள்ளி மலைக்கோயிலில் எழுந்தருளியுள்ள தலவிநாயகர் திருப்பெயர் அருள்தரு செவ்வந்தி விநாயகர் என்பது.)

**பொழிப்புரை** : சிறப்புப்பொருந்திய மேலான புகழுடைய மீனாட்சி சுந்தரன் என்ற குருவின் திருவடிகளுக்குத் தகுதிவாய்ந்த சிறந்ததமிழால் ஆன இயற்றமிழ் மாலை ஒன்றை அன்பினால் இயற்றிச் சூட்ட, தேன்பொருந்திய கொன்றைமலர் மாலையணிந்த அருள்தரு செவ்வந்தி விநாயகரின் அழகிய செந்தாமரைமலர் போன்ற திருவடிகள் அருள்புரியும்.

**நால்வர் துதி.**

பூவர சைப்புனை வேதியர் சூழ்புக லிக்கரசை
நாவர சைச்செங்கல் பொன்னாய் இலங்க நவின்றதமிழ்ப்
பாவர சைத்திரு வாசகம் ஓதிப் பரமஇன்பம்
மே(வு)அர சைத்துதித் துத்தொழு வாம்எந்த வேலையுமே.

**குறிப்புரை** : பூவசை= உலகத்திற்கு அரசனான சிவபிரானை. புகலிக்கரசை= சீர்காழி அரசனான திருஞானசம்பந்தரை. இலங்க= விளங்க. தமிழ்ப்பாவரசை= தமிழ்ப்பாக்களுக்கு அரசராம் சுந்தரரை. பரமஇன்பம் மேவு அரசை= மேலான இன்பம்பெற்ற மாணிக்கவாசகரை வேலை= பொழுது.

**பொழிப்புரை** : உலகஅரசனான சிவபிரானைத் தமது உள்ளத்தில் சூடிக்கொண்ட மறையோர் வாழும் சீர்காழி அரசராம் திருஞானசம்பந்தரையும், திருநாவுக்கரசரையும், திருப்புகலூரில் செங்கற்களைத் தலையணையாக வைத்து உறங்கிவிழித்தபோது செங்கற்கள் பொன்னாய்மாறியிருந்து கண்டு " தம்மையே புகழ்ந்து "என்ற பதிகம் பாடிய தமிழ்ப்பா அரசராம் சுந்தரரையும், திருவாசகம் பாடி அதனால் மேலான இன்பம்பெற்ற மாணிக்கவாசகரையும் எப்போதும் துதித்தும் தொழுதும் வாழ்வாம்.

**நூல்.**

திருமன்னு பேரருள் மீனாட்சி சுந்தர தேசிகனாய்
மருமன்னு கொன்றையும் வாளர வும்குனி மாமதியும்
கருமன்னு கண்டமும் கண்நுத லும்கரித் தோலும்கரந்(து)
உருமன்னி நின்ற பிரான்கழல் போ(து)என்றும் முன்னுவனே.

**குறிப்புரை** : திரு= விரும்பும் தன்மை. மருமன்னு= மணம்பொருந்திய. வாள்= கொடுமை. குனி மா= வளைந்த அழகிய. கரித்தோல் உரி= உரித்த

யானைத்தோல். கரந்து= மறைத்து. உருமன்னி நின்ற= உருவுடன் பெருமைபொருந்த வாழ்ந்த. பிரான் கழல் போது= என்தலைவனின் திருவடிமலர், முன்னுவன்= சிந்தித்து வணங்குவேன்.

**பொழிப்புரை** : விரும்பும் தன்மையுடைய மீனாட்சிசுந்தர குருவாய், நறுமணம் பொருந்திய கொன்றைமலர்மாலையும், கொடிய விடப்பாம்பும். வளைந்த மூன்றாம்பிறையும். கருமைநிலைத்த திருக்கழுத்தும், நுதற்கண்ணும், போர்த்திய யானைத்தோலும் ஆகியன கொண்ட சிவபிரான், தமது உருவை மறைத்து எம்உருவில் பெருமைபொருந்த வாழ்ந்த எம்தலைவனின் திருவடித்தாமரைகளை எந்நாளும் சிந்தித்து வணங்குவேன். ( சிவபிரானே தன்குருவாக - மகாவித்துவானாக வந்தான் என்றார். )

**விளக்கம்** : குரு சிவபிரானே - “ வண்பதி புரக்கும் மாசி லாமணி, தலைப்படு கலைமதி தாங்காது ஆங்குஅத், தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு, மான்இட னாய வடிவுகொண்(டு) அருளாது, மானிட னாய வடிவுகொண்(டு) அருளி, எற்(பு)அணி பூணா(து) எற்பணி பூண்டு, பாரிடம் சூழாது பாரிடம் சூழ்தர, ஆரூர் அமர்ந்த ஞானசம் பந்த. “ ( பண்டார மும்மணிக். 14 ) “ நன்(று)என்ற - சித்தாந்த மாம்அருணைத் தேவ சிகாமணி செய், சுத்தாத்து வைதச் சுகம். “ ( ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணிமாலை. 9 ).

2. உன்னைஒப் பார்இங்(கு) எவரும்இல்லை ஒப்(பு)உ ரைத்திடின்நீ
நின்னைஒப் பாய்அருள் மீனாட்சி சுந்தர நின்மலஎற்(கு)
அன்னைஒப் பாய்பின்னும் அத்தன்ஒப் பாய்நின்அருளைப்பெற்ற
என்னைஒப் பாரும்உண் டோகடல் சூழும்இ ரும்புவிக்கே.

**குறிப்புரை** : நின்மல= இயல்பாகவே மலமில்லாதவனே. அத்தன்= தந்தை. இரும்= பெரிய.

**பொழிப்புரை** : மீனாட்சி சுந்தரன் ஆகிய இயல்பாகவே மலமில்லாத சிவனே ! உன்னை ஒத்தவர் யாருமில்லை. உனக்கு ஒப்புமை கூறின் உன்னைஒத்தவன் நீயே. நீ எனக்குத் தாய்ஒத்தவன் , மேலும் தந்தையும் ஒத்தவன். கடல்சூழ்ந்த இப்பெரிய உலகில் உனதுஅருள்பெற்ற என்னை ஒத்தவர் யாரும் இல்லை.

**விளக்கம்** : இவர் சிவமேயாதலின் நின்னை ஒப்பார் எவருமில்லை என்றார். “ நின்ஆவார் பிறரின்றி நீயே ஆனாய் “ (திருமு.6 .தனித்திருத்தா. 7.) “ தனக்கு உவமை இல்லாதான் “ (திருக்குறள். 7 )

**இலக்கணக்குறிப்பு** : புவிக்கே - உருபுமயக்கம்.

3. இரும்பினும் வன்மை உளநெஞ்சி னான்என்(று)எண் ணாதுநனி
விரும்பி உவந்தெனை மீனாட்சி சுந்தர மெய்யன்அம்தீங்
கரும்பினும் பாகினும் கண்டினும் இன்பம் கனிந்(து)அசும்(பு)உற்(று)
அரும்பி வலியவந்(து) ஆண்டான் அவன்இன் அருள்அழகே.

**குறிப்புரை** : நனி= மிக. மெய்யன்= ஞானி - சிவன். அசும்பு உற்று= பற்றுக்கொண்டு - அன்பு கொண்டு.

**பொழிப்புரை** : என்னை, இவன் இரும்பைக்காட்டிலும் வலிய மனமுடையவன் என்று எண்ணாமல், மிகவிரும்பி, மகிழ்ந்து மீனாட்சி சுந்தரனாகிய சிவன், அழகிய இனிய கரும்பு, வெல்லப்பாகு, கற்கண்டு இவற்றைக்காட்டிலும் கனிவுகொண்டு, என்மேல் அன்பு அரும்பித் தானேவலியவந்து ஆட்கொண்டான். இது அவனது அருளின் அழகாகும்.

4. அருந்தவம் என்னமுன் செய்தாய்நெஞ் சேஅன்(று) அணிநிழலார்
குருந்தம் அமர்ந்த குருபர னேஇந்தக் கோலம்கொண்டு
திருந்தவந்(து) ஆண்டநம் மீனாட்சி சுந்தர தேசிகன்தாட்(கு)
இருந்தமிழ்ப் பாப்புனைந்(து) ஏத்(து)அ வன்அருள் எய்திடவே.

**குறிப்புரை** : குருந்தம்= குருந்தமரம். குருபரன்= சிவகுரு. இருந்தமிழ்= பெருமைபொருந்திய தமிழ்.

**பொழிப்புரை** : நெஞ்சமே ! முன்பு எத்தகைய தவம்செய்தாயோ அறியேன். முன்நாளில் வாதவூரடிகள் பொருட்டுக் குருந்தமரத்து அழகிய நிழலில் எழுந்தருளியிருந்த சிவகுருவே மானிடச்சட்டைதாங்கி நான்திருந்த, மீனாட்சிசுந்தரனாய் வலியவந்து ஆட்கொண்டான். அவனது அருள்பெற அவன் திருவடிகட்குப் பெருமைபொருந்திய தமிழ்ப்பா தொடுத்துச் சாத்தி அவனை ஏத்து.

**விளக்கம்** : குருந்தின்கீழ் இருந்தது - “ செல்வத் திருப்பெருந்துறையில் நிறைமலர்க் குருந்தம்மே வியசீர் ஆதியே “ ( திருவாச. 456. ).

5. எய்தா நலம்என்னை நெஞ்சே நமக்(கு)இனி இன்நறவைப்
பெய்தார் அணிதன் கழற்கே பணியைப் பெருக்கிடவும்
வெய்தான செய்கைஇல் தன்னடி யாரொடு மேவிடவும்
செய்தான் அருள்நல மீனாட்சி சுந்தர தேசிகனே.

**குறிப்புரை** : இன்நறவு= இனிய தேன்.

**பொழிப்புரை** : இனிய தேனைச்சொரியும் மாலையணிந்த தனது திருவடிகட்கே தொண்டு பெருகச்செய்யவும், கொடியசெய்கை இல்லாத தனது அடியவர் உறவைப் பெறவும் மீனாட்சிசுந்தரகுரு நமக்கு அருள்நலம் செய்தான், அதனால் நெஞ்சமே ! நாம் இனி அடையவியலாத நலம் என்னவுளது ? அனைத்து நலமும் பெறலாம்.

**இலக்கணக்குறிப்பு** : கழல் - தானியாகுபெயர்.

6. தேசில் சிறந்த கதிரவன் போலச் செறிகிரணக்
கா(சு)இல் சிறந்த கவுத்துவம்போலக் கடவுள்அருள்
பேசில் சிறந்த மீனாட்சி சுந்தரப் பேர்ப்பரனே

மாசில் சிறந்த என்சொல் அளவோநின் வார்புகழே.

**குறிப்புரை** : தேசில்= ஒளியில். காசுஇல்= குற்றமில்லாத. கவுத்துவம்= கவுத்துவமணி. பேர்ப்பரனே= பெயருடைய சிவமே. வார்= நீண்ட - பெரிய.

**பொழிப்புரை** : ஒளியில் சிறந்த ஞாயிறு போலவும், மிக்கஒளியுடன் குற்றமில்லாத மணிகளில் சிறந்த கவுத்துவமணி போலவும்,கடவுளரின் அருள்பற்றிக் கூறப் புகுந்தால் அதில் சிறந்த மீனாட்சிசுந்தரம் என்ற புகழ்வாய்ந்த சிவபிரானே ! உனது பெரும்புகழ் குற்றமின்றிச் சிறந்த என்சொல்லளவில் அமைவதோ ? சொல்லுதற்கரியது நின் பெரும்புகழ்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் பல்பொருள் உவமையணி.

7. வளரும் புகழ்புனை மீனாட்சி சுந்தர வள்ளல் கண்டேன்
தளரும் மருங்குளிர் மாலாகிப் பொன்னிறம் சார்ந்தனன்கேழ்
கிளரும் நல்லாழியும் சங்கமும் தந்துபின் கிண்டிவண்டர்
உளரும்தண் ஆர்அவன் தோள்வன மாலை உதவினன்றே.

**குறிப்புரை** : தளரும் மருங்குளிர்= ஒசியும் இடையுடைய பெண்களே. மாலாகி= திருமாலாகி / மனம் மயங்கி. பொன்னிறம்= திருமகள்வாழும் மார்பு / பசலை நிறம். கேழ்கிளரும்= ஒளிவீசும். ஆழி= சக்கரம். சங்கம்= சங்கு. வண்டர் கிண்டி உளரும்= வண்டுகள் கிண்டி ஒலிக்கும். வனமாலை= துளசி மாலை. உதவினன்றே= அப்போதே கொடுத்தான் / கொடுத்தால் நல்லது.

**பொழிப்புரை** : ஒசியும் இடையுடைய பெண்களே ! மேன்மேலும் வளரும் புகழுடைய மீனாட்சி சுந்தரனாகிய வள்ளலைக் கண்டேன். கண்டதும் அவன்மேல் மனம் மயங்கிப் பசலை பூக்கப்பெற்றேன். அதனால் அவன் ஒளிவீசும் சக்கரப்படையையும் வலம்புரிச் சங்கையும் தந்தபின், அவன் தோளிலணிந்த வண்டுகள் கிண்டி ஒலிக்கும் அழகிய தோள்மாலையையும் தந்தால் நல்லது.

**தொனிப்பொருள்** : அவன் திருமாலாகி, திருமகளாகிய என்மார்பினைச் சார்ந்தான்; ஒளிவீசும் சக்கரப்படையையும் சங்கினையும் தந்து, மேலும் வண்டுகள் கிண்டி ஒலிக்கும் தோள்மாலையாகிய துளசிமாலையையும் அப்போதே கொடுத்தால் நல்லது..

8. நன்றே மருவிடும் தீயவெல் லாம்விடும் நன்மையுள(து)
ஒன்றே நுவலுவன் நெஞ்சேநீ கேட்டி ஒருவல்சற்று
நின்றே பெருங்கதி மீனாட்சி சுந்தர நின்மலன்தாள்
என்றே அடைகுதி யான்இது தான்நின் இரக்கின்றதே.

**குறிப்புரை** : நன்று= நன்மை மருவிடும்= வந்துசேரும். ஒருவல்= விலகாதே. பெருங்கதி= சிறந்த அடைக்கலம் புகுமிடம். தாள்நின்றே ஒருவல். ஒருவல்= விலகாதே. என்றே அடைகுதி= என்றைக்குச் சரணடைவாய்.

**பொழிப்புரை** : நெஞ்சமே ! ஒன்று கூறுகிறேன் நீகேள். அதனால்

நன்மைஉளது. நன்மைகளே வந்தடையும், தீமைகள் எல்லாம் உன்னை விட்டோடும், சிறந்த அடைக்கலம் புகுமிடமாகிய மீனாட்சி சுந்தரனாகிய இயல்பாகவே மலமில்லாதவன் திருவடிகளை அடைந்து சற்றும்விலகாதே. இதுவே உன்னிடம் நான் வேண்டுவதாகும்.

9. இருங்கடல் சூழ்புவி வான்துயர் நீங்க எயில்ஒருமூன்(று)
ஒருங்(கு)அடல் செய்தஎன் மீனாட்சி சுந்தர வொண்குருவைக்
கருங்கடல் உண்ட முனிவனொப் பான்வண் கருணையினால்
பெருங்கடல் போன்றென் மனக்கல் குழைந்திடப் பெற்றிடினே.

**குறிப்புரை** : வான்துயர்= மிகப்பெரும்துன்பம். அடல்செய்த= எரித்தழித்த. ஒண்= ஒளி. முனிவன்= அகத்திய முனிவன். மனக்கல்= மனமாகிய பாறை. குழைந்திட= உருக.

**பொழிப்புரை** : பெரிய கடல்சூழ்ந்த உலகின் பெரும்துன்பம்நீங்க,மூன்று அரக்கர்களின் முக்கோட்டைகளையும் ஒருசேர எரித்தழித்த என்மீனாட்சி சுந்தரனாகிய ஒளிபொருந்திய குருவை நினைத்து, கடல்போல் பரந்த என்மனமாகிய பெரும்பாறை உருகுமானால், அவன் வளமான கருணைபூண்டு கடலினை ஒருசேரப் பருகிய அகத்திய முனிவரைப்போல் எளிதில்என்வினை தீர்த்து எனக்கு அருள்புரிவான்.

10. பெற்றாருள் நின்னைப் பெற்றார்போல் பெற்றார்களும் பேண்பிறப்பை
உற்றா ருளும்நின்னைப் போலஉற் றார்களும் உன்அருளை
நற்றா ரணியுள் எனைப்போல்பெற் றார்களும் நாடுரினும்
அற்றார்முற்(று) ஓர்தரு மீனாட்சி சுந்தர மாமணியே

**குறிப்புரை** : பெற்றாருள்= பிள்ளைபெற்றவருள்.. பிறப்பை உற்றார்= பிறந்தவர். நல்தாரணியுள்= நல்லவர் உலகில். நாடுரினும் அற்றார்= ஆராய்ந்தாலும் யாரும் இல்லை.

**பொழிப்புரை** : முழுவதையும் ஆராய்ந்தறிந்த மீனாட்சிசுந்தரனாகிய மாமணியே ! நல்லவர் உலகில் பிள்ளைபெற்றவருள் உன்னைப்பெற்ற பெற்றோர்போல் பிள்ளை பெற்றவரும், விரும்பத்தக்க மனிதராகப் பிறந்தவருள் உன்னைப்போல் பிறந்தவர்களும், உனது அருளை என்னைப்போல் பெற்றவரும் ஆராய்ந்து பார்த்தால் யாருள்ளார் ? யாருமில்லை.

11. மாமணி கண்டம் கரந்(து)எமை ஆட்கொள வந்தவொரு
தூமணி பேரருள் மீனாட்சி சுந்தரத் தொல்பெயர்சிந்
தாமணி இன்பத் தமிழ்ஓர் புலவர் தம(து)உயர்சி
காமணி தன்பதம் யாம்அணி வாமென்றும் கள்ளமற்றே.

**குறிப்புரை** : மா மணிகண்டம்= அழகிய நீலமணி ஒத்த கழுத்து..பெயர்=

பெயருடைய. புலவர்தமது= புலவர்களின். சிகாமணி= தலைமணி.

**பொழிப்புரை** : எங்களை ஆட்கொள்ளும் பொருட்டு, அழகிய நீலமணி ஒத்த கழுத்தை மறைத்துவந்த தூயமணியாகிய பேரருள் வடிவான மீனாட்சிசுந்தரம் என்ற தொன்மையான புகழ்வாய்ந்த சிந்தாமணியும், இன்பம்தரும் தமிழ்வல்ல புலவர்களின் சிறந்ததலைமணியும் ஆகிய அவனது திருவடிகளைக் களங்கமில்லாமல் நம் தலையில் சூடுவோம்.

12. கள்ளத் திருக்குக் கயல்செய்ய வாய்வெண் ணகைபவள
வள்ளத்(து) இருக்குமுத்(து) என்றுபுன் மாதரை வாழ்த்தலின்றி
வெள்ளத் திருக்குண மீனாட்சி சுந்தர மெய்யன்பதம்
உள்ளத் திருக்(கு)உடைந்(து) ஓடும்நெஞ் சேயி(து) உண்மையதே.

**குறிப்புரை** :. கயல் திருக்கு கள்ளம்செய்ய= கெண்டைமீன் போன்றகண் கள்ளம் காட்ட. நகை= பல். பவள வள்ளம்= பவளக்கிண்ணம். வெள்ளத் திருக்குணம்= வெள்ளப்பெருக்கு ஒத்த தெய்விகக் குணங்கள். மெய்யன்= கடவுள். பதம்= திருவடி. உள்ளத்திருக்கு= மனத்து வஞ்சனை. உடைந்து ஓடும்= சிதறி ஓடும்.

**பொழிப்புரை** : நெஞ்சே ! கெண்டைமீன் போன்றகண்கள் கள்ளநினைவு காட்ட, வாயின் வெண்பற்கள் பவளக் கிண்ணத்தில் இருக்கும் முத்தினை ஒக்கும் என்று இழிந்தபெண்டிரை வாழ்த்தாமல், வெள்ளப்பெருக்கு ஒத்த தெய்விகக் குணங்கள் கொண்ட கடவுளாகிய மீனாட்சிசுந்தனின் திருவடிகளை வாழ்த்தினால் மனத்துவஞ்சனை சிதறிஓடும். இது உண்மையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சிவஞான முனிவர் " ஒரோவழி அஃகேனமும் உயிர்போன்று அலகுகாரியம் பெறும் "என்பார். அதனைஉட்கொண்டு " ஓடும்நெஞ் சேஇஃ(து) உண்மையதே " என்பதில் ஆய்தம் உயிர்போல்இங்கு அலகுபெற்றது.

13. **ஆறுபார்த்து உற்ற அச்சக்கிளவி**

உண்மையும் திண்மையும் கண்மையும் ஒண்மையும் ஓங்(கு)அருளின்
தண்மையும் ஓவலில் மீனாட்சி சுந்தர சாமிவெற்பில்
வண்மையன் பாகுன்றம் கான்பல நீந்தி வரினுமயில்
கண்மை குலையக் கலுழ்புனல் யாறு கடக்கரிதே.

**குறிப்புரை** : கண்மை= கண்ணோட்டம். ஒண்மை= புகழொளி. தண்மை= சாந்தம். ஓவல் இல்= நீங்காத. சாமி= சிவம். வண்மை அன்பா=அழகும்அன்பும் உடையவனே. கான்= காடு நீந்தி= கடந்து. மயில் கண் மை= மயிலாகிய தலைவியின் கண்ணில் தீட்டிய மை. குலையக் கலுழ் புனல்= கரையுமாறு பெருகும் கண்ணீர். கடக்கரிதே= கடந்துவருதல் இயலாது.

**பொழிப்புரை** : உண்மை, வலிமை, கண்ணோட்டம், புகழ்ஒளி ஆகியன மிக்கதால் வந்த அருளினால் உண்டான சாந்தம் நீங்காத மீனாட்சிசுந்தரன்

ஆகிய சிவத்தின் மலைக்கண் அழகும் அன்பும் உடைய தலைவனே ! நீ தலைவியின்பொருட்டுக் குன்று காடு என்று பலவற்றைக் கடந்து வந்தாலும், வழிஇடையூறுகளை எண்ணிவருந்தும் மயில்போன்ற இவளது கண்களில் தீட்டப்பெற்ற மை கரையுமாறு பெருகும் கண்ணீர்ஆற்றைக் கடந்து வருதல் அரியதாகும்.

**14. தலைவி பாங்கியிடம் களிறுதரு புணர்ச்சி தந்த தலைவற்கன்றி வேறுஒருவர்க்கான மணமுரசு கூறி வருந்தல்.**

கடவார் அணங்கு கதிர்முலையாய் சக்கரம் கைகொள்கூன்
குடவா ரணர்க்(கு)அருள் மீனாட்சி சுந்தரக் கோன்சிலம்பில்
தடவார ணம்கடிந்தே நமைக்காத்த தலைவர்க்கன்றி
மடவார் அரண்மனைக்(கு) இன்(று)ஆர்ப்ப(து) என்கொல் மணமுரசே.

**குறிப்புரை** : வார் அணங்கு கட கதிர் முலையாய்= கச்சினால் வருந்துவதும் யானைமத்தகம்போல் இறுமாந்ததுமான முலைகளுடையவளே. கைகொள் சக்கரம் கூன் குடவாரணர்= கைகளில் சக்கரமும் வளைந்த சங்கும் ஏந்திய திருமால். சிலம்பு= மலை. தட வாரணம் கடிந்து= பெரிய ஆண்யானையை விலக்கி. மடவார்= மற்றொருத்தி.

**பொழிப்புரை** : கச்சினால் வருந்துவதும், யானை மத்தகம்போல் இறுமாந்ததுமான முலைகளுடையவளே ! கைகளில் சக்கரப்படையையும் சங்கும் ஏந்திய திருமாலுக்கு அருள்புரிந்த மீனாட்சிசுந்தரப் பேரரசனின் மலைக்கண், முன்பு பெரிய ஆண்யானையிடமிருந்து நம்மைக்காத்த தலைவர் பொருட்டல்லாமல் , மற்றொருத்தியின் அரண்மனையில் இன்று மணமுரசு முழங்குகிறதே ! என்ன காரணம் ?

**விளக்கம்** : வேறொருவனுக்கும் ஒருத்திக்கும் நடக்கும்திருமணம்போல், களிற்றிடமிருந்து என்னைக்காத்த என்னவருக்கும் எனக்கும் திருமணம் நடக்கவில்லையே ! என்ற ஏக்கம் உளவியல்படி இதில் புலனாகிறது.

15. மணக்கும் புகழ்வெண் படாம்மேனி போர்த்தி மலிகருமை
அணக்குஞ் சரவுரி நீத்துவந் தேஎனை ஆண்டுகொண்ட
குணக்குன்ற மாம்எழில் மீனாட்சி சுந்தரக் கோன்பதத்தில்
வணக்கும் தலையுடை யேன்உடை யேன்எவ் வளத்தையுமே.

**குறிப்புரை** : வெண்படாம்= வெண்பட்டாடை. மலிகருமை= மிக்க இருள். அண= வருத்தும். பதம்= திருவடி. வணக்கும்= தலைதாழ்த்தி வணங்கும். கோன்= இறைவன்.

**பொழிப்புரை** : மிக்க இருள்போல் வருத்திய களிற்றின் தோலாடை போர்த்தாது, வெண்மையான பட்டாடையைப் புகழ்மணக்கும் திருமேனியில் போர்த்திவந்து, என்னை ஆட்கொண்ட குணக்குன்றாகிய அழகிய

மீனாட்சிசுந்தரன் ஆகிய இறைவனது திருவடிகளை வணங்கும் தலையுடைய நான் அதனால் எல்லாவகை வளமும் உடையவன்.

16. வளம்பட வேண்டுவர் யார்எனில் பூங்கொன்றை மாலையொடு
களம்படு நஞ்சும் கரந்துவந் தேதன் கழற்சரண்என்
உளம்பட ஊன்றிய மீனாட்சி சுந்தர உத்தமன்தாள்
தளம்படு மாமலர் தூஇறைஞ்சா நிற்கும் தக்கவரே.

**குறிப்புரை** : வளம்பட= வளமெல்லாம் உண்டாக. களம்= கழுத்து. கழல்சரண்= வீரக்கழல் அணிந்த திருவடி. தளம்படு மாமலர்=பசியஇலையுடன் சிறந்தமலர்கள். தூ= தூவி. இறைஞ்சா நிற்கும்= வணங்கும்.

**பொழிப்புரை** : உலகில் வளம்எல்லாம் உண்டாக வாழவேண்டியவர் யார் என்றால், மென்மையான கொன்றைமாலையுடன், நஞ்சுதங்கிய கழுத்தையும் மறைத்து வந்து, தனது வீரக்கழல் அணிந்ததிருவடிகளை என் உள்ளத்தில் பொருந்துமாறு ஊன்றியுள்ள மீனாட்சிசுந்தரனாகிய உத்தமனின் திருவடிகளை, பசிய இலையுடன் கூடிய சிறந்த மலர்கள் தூவி வணங்கும் தக்கவரேயாவார்.

17. தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தால்
மிக்கார் அறியப் படும்என நின்னை விரும்பிப்பெற்றோர்
தக்கார் எனநின்றன் னாலுணர்ந் தன்றுகொல் தண்டமிழ்தேர்
மிக்கார் புகழ்தரு மீனாட்சி சுந்தர மெய்ம்மையனே.

**குறிப்புரை** : உணர்ந்தன்று= உணர்ந்தனர். மெய்ம்மை= ஞானம்.

**பொழிப்புரை** : இனிய தமிழ்தேர்ந்த மேலோர் புகழும் மீனாட்சிசுந்தரன் ஆகிய ஞானியே ! இவர் தக்கவர், இவர் தகவில்லாதவர் என்பது அவரவர்க்குள்ள எச்சத்தின்மூலம் சான்றோரால் அறியப்படும் என்பதால், உன்னை விரும்பிப் பெற்றவர்கள் தக்கவராவார் என்பதை அச்சான்றோர் உணர்ந்தனர்.

**இலக்கணக்குறிப்பு** : கொல் - அசைநிலை.

18. மெய்ஒன்று நன்நெஞ்ச மேநின்று கேட்டிவெவ் வீணரொடும்
பொய்யொன்று நெஞ்சக வஞ்சக ரோடும் புணர்ப்(பு)அகற
மையொன்று கந்தர மீனாட்சி சுந்தர வள்ளல்பதத்
தையொன் றுதிஎன்றும் சாரரும் இன்பமும் சாருதியே.

**குறிப்புரை** : ஒன்று மெய்= ஒருண்மை. நின்று= பொறுமையுடன். புணர்ப்பு அகற= நட்பு நீங்க. மை= கருமை. கந்தரம்= கழுத்து. சாரரும்= அடைவதற்கரிய. சாருதி= அடைவாய்.

**பொழிப்புரை** : எனது நல்லமனமே ! ஒருண்மையைப் பொறுமையுடன் கேள். கொடியவராகிய வீணருடனும், பொய்பொருந்திய வஞ்சகரோடும் நட்பு

நீங்க, நஞ்சக்கருமை பொருந்திய கழுத்துடைய மீனாட்சிசுந்தரனாகிய வள்ளலின் திருவடிகளைச் சென்றுஅடைக. அதனால் அடைவதற்கரிய இன்பமும் நீ அடைவாய்.

19. சாரும் பவக்கடல் நின்(று)ஏறி என்றும் தவாதஇன்பம்
கூரும் பராநந்த முத்தி எனும்கரை கூடிஇருந்(து)
ஆரும் படிசெய வல்லது யாதெனின் ஆர்அருளும்
சீரும் புனைகுரு மீனாட்சி சுந்தரன் சேவடியே.

**குறிப்புரை** : பவக்கடல்= பிறவிக்கடல். தவாத இன்பம்= வற்றாமுற்றாப் பேரின்பம். கூரும்= மிகும். பராநந்த முத்தி= மேலான ஆனந்தமயமான முத்தி. ஆரும்படி= அனுபவிக்குமாறு. ஆர்= நிறைந்த.

**பொழிப்புரை** : நாம் சார்ந்துள்ள பிறவிக்கடலிலிருந்து ஏறி, வற்றாமுற்றாப் பேரின்பம் மிக்கதான மேலான ஆனந்தமயமான முத்தி என்னும் கரையடைந்து, அதனை அனுபவிக்குமாறு செய்யவல்லது எது ? என்றால் அது , நிறைந்த அருளும் சிறப்பும் தனக்கேஉரியவராய் அணிந்த குருவாகிய மீனாட்சி சுந்தரனின் சேவடியேயாகும்.

**விளக்கம்** : இதன்கண் " பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவன் அடிசேரா தார் " என்ற திருக்குறள் ( 10 )கருத்துக் காண்க.

20. சேஏ(று) உகைத்தருள் மீனாட்சி சுந்தர தேசிகன்தன்
பூஏறு சேவடி என்சென்னி மீது பொலிந்(து)உறைக
நாஏ றுகஎன் உளத்தும் விளங்க நவின்றதமிழ்ப்
பாஏறி மேவுக வாழ்கஎஞ் ஞான்றும்இப் பாரிடத்தே.

**குறிப்புரை** : சேஏறு= விடை. உகைத்து= செலுத்தி. பூஏறு= பொலிவு பொருந்திய. சென்னி= தலை - அறிவு.

**பொழிப்புரை** : விடையேறிச் செலுத்திவந்து அருள்புரியும் மீனாட்சி சுந்தர குருவின் பொலிவுபொருந்திய சேவடிகள், என் அறிவிற் பொலிவுடன் பொருந்தி வாழ்க, என் நாவிற் பொருந்துக, என்உள்ளத்திலும் விளங்குக, நல்லதமிழ்ப் பாக்களில் பொருந்தி இவ்வுலகில் என்றென்றும் வாழ்க.

**இலக்கணக்குறிப்பு** : சென்னி - இடவாகுபெயர். உறைக, ஏறுக, மேவுக - வியங்கோள் வினைமுற்றுகள்.

21. பாரிடத் தானை உடையானும் கூனல் பணிலம்உறும்
சீரிடத் தானை உகைத்தானும் சீறிச் சினந்துவந்த
போரிடத்(து) ஆனை உரித்தானும் ஞானம் பொலிந்துவிழைந்
தாரிடத் தானைவில் மீனாட்சி சுந்தர ஆரியனே.

**குறிப்புரை** : பாரிடம்= பூதம். தானை= படை. பணிலம்= சங்கு. சீரிடத்தான்= சிறந்த இடதுகையில் ஏந்திய திருமால். உகைத்தான்= விடை

ஊர்தியாகச் செலுத்தியவன். உரித்தான்= உரித்துப் போர்த்தவன். வில்= ஒளி. ஆரியன்= குரு.

**பொழிப்புரை** : பூதப்படை உடையவனும், பெரிய வளைந்த சங்கினைச் சிறந்த இடதுகையில் ஏந்திய திருமாலை விடைஊர்தியாகச்செலுத்தியவனும், தன்னைச் சீறிச் சினந்துவந்த யானையின் தோலை உரித்துப் போர்த்தவனும், ஞானம் பொலிந்த தன்னை விரும்பியவரிடத்தவனும் ஒளிவடிவான மீனாட்சிசுந்தரக் குருவேஆவான்,

**இலக்கணக்குறிப்பு** : விழைந்தாரிடத்தானை - ஐ - அசைநிலை.

22. ஆரியன் நற்குண வாரியன் ஓதிவில் லார்க்கும்அதி
நாரியன் தண்ணருள் மாரியன் செய்ய நறுங்கழுநீர்
வேரியன் பேர்இயல் மீனாட்சி சுந்தர மெய்யன்மிக்க
சீரியன் என்றுது தித்தேஎன் நாவும் சிறப்புற்றதே.

**குறிப்புரை** : ஆரியன்= குரு. வாரியன்= கடலாவான். ஓதி= கல்வி வில்லார்க்கும்= ஒளியுடையவர்க்கும். அதிநாரியன்= மிக்க அன்பன். தண் அருள்= இன்பம்தரும் அருள். மாரியன்= மழையாவான். வேரி= தேன். பேர் இயல்= புகழ்வாய்ந்த இயற்றமிழ். மெய்யன்= வாய்மையாளன்.

**பொழிப்புரை** : இயற்றமிழ் வல்ல மீனாட்சி சுந்தரனாம்வாய்மையனை, குரு, நற்குணக்கடல், கல்விஒளியுடையார்க்கும் மிக்க அன்பன், இன்பம்தரும் மழை, மணக்கும் செங்கழுநீர்மாலைத் தேன்பொருந்தியவன், மிகச்சிறந்தவன் என்றுசொல்லித் துதித்ததால் என்அறிவுடன் நாவும் - சொல்லும் சிறப்புற்றது.

**இலக்கணக்குறிப்பு** : நாவும் - இறந்தது தழுவிய எச்சவும்மை. நா - இடவாகு பெயர்.

23. சிறந்தமெய்ஞ் ஞானமும் கல்வியும் செல்வமும் சீலமுடன்
நிறந்தமெய்ச் சீர்த்தியும் நேரற்ற வாழ்க்கையும் நித்தன்அருள்
உறந்தநல் தேசிகன் மீனாட்சி சுந்தர உத்தமன்தாள்
மறந்தவக்(கு) உண்டுகொல் லோகடல் சூழும்இவ் வையகத்தே.

**குறிப்புரை** : நிறந்த= சீருற்ற. மெய்ச்சீர்த்தி= மெய்ப்புகழ். நேரற்ற= ஒப்பற்ற. நித்தன்= நிலையானவன் - சிவபிரான். உறந்த= முற்றும்பெற்ற.

**பொழிப்புரை** : நிலைத்தவனாகிய சிவபிரான் அருளை முற்றும்பெற்ற குருவாகிய மீனாட்சிசுந்தர உத்தமனது திருவடியை மறந்தவர்களுக்குக் கடல் சூழ்ந்த இவ்வுலகில், சிறந்த மெய்ஞ்ஞானம், கல்வி, செல்வம், நல்லொழுக்கம், சீருற்ற மெய்ப்புகழ், ஒப்பற்ற வாழ்க்கை ஆகியன உண்டோ ? இல்லை.

**இலக்கணக்குறிப்பு** : உண்டு கொல்லோ - கொல் - ஐயக்கிளவி. ஓகாரம் - எதிர்மறை.

24. வையாரும் சூற்படை மீனாட்சி சுந்தர மானடிக்கே
நையாத சிந்தையும் வாழ்த்தாத நாவும் நலத்தபணி
செய்யாத யாக்கையும் கேளாச் செவியும்நல் தேமலரைப்
பெய்யாத கையும் வணங்காத் தலையும் பெறுவ(து) என்னே.

**குறிப்புரை** : வைஆரும்= கூர்மைபொருந்திய. சூல்படை= சூலப்படை. மான்= மகான். பெய்யாத= சொரியாத. பெறுவது என்னே= அடையும் பயன் என்ன ?

**பொழிப்புரை** : கூரிய சூலப்படையுடைய சிவமாகிய மீனாட்சி சுந்தரனாகிய மகானின் திருவடிகளை நினைந்து உருகா மனமும், வாழ்த்தா நாக்கும், நலம்தரும் தொண்டுகள் செய்யா உடம்பும் அவன்புகழ் கேளாச் செவியும்,தேன்பொருந்திய நல்லமலர்களைச் சொரியாக் கையும், வணங்காத் தலையும் வாழ்வில் அடையும் பயன் என்ன ? ஏதுமில்லை.

25. என்நேய நன்நெஞ்ச மேஎன்செய் கேன்எழில் ஏந்திழையார்
வன்நேய மென்முலைக் கேகுழை வாய்அரை மாத்திரையும்
அன்னேயம் ஆர்கண்டன் மீனாட்சி சுந்தர ஆரியன்தாள்
நன்னேயம் உற்றிலை நீநகு மேஇந்த நானிலமே.

**குறிப்புரை** : என்நேயம்= என்அன்பு. எழில்ஏந்து இழையார்=அழகியரான அணிகலன் அணிந்த பெண்டிர். வன்நேயம்= வலிய காமம். குழைவாய்= வாடுவாய். அன்னேயம் - அல்+ நேயம்= இருளுடன் தொடர்புகொண்ட - கரிய. நல்நேயம் உற்றிலை= நல்லன்பு கொள்ளவில்லை.

**பொழிப்புரை** : என்அன்புடைய நல்ல நெஞ்சமே ! நான்என்செய்வேன் ! அழகியரான அணிகலன் அணிந்த பெண்டிரின் வலிமையான காமமூட்டும் மென்மையான முலைதழுவ வருந்துகிறாய். நீ அரைநொடிப்பொழுது கூட, நஞ்சினால் கருமையுற்ற கழுத்துடைய சிவனாகிய மீனாட்சிசுந்தர குருவின் திருவடிகளுக்கு மிக்கஅன்பு கொள்ளவில்லை. அதனால் இவ்வுலகம் உன்னை இகழ்ந்து சிரிக்கும்.

26. நான்என்செய் கேன்என்றன் நெஞ்சம்நில் லாதுநின் நல்லடிகண்
ஊன்என் பணிதவிர் மீனாட்சி சுந்தர உத்தமநீ
தான்என் தனைவலித்(து) ஆண்டனை ஆண்டஅத் தன்மைக்(கு)ஒப்ப
மான்என்ற கண்ணியர்க் கேமயங் காதுஅதை மாற்றுவையே.

**குறிப்புரை** : என் ஊன்பணி= என்னுடலின்பப் பணி ( காமநுகர்தல் ) மான் என்ற கண்ணியர்= மானாகமருளும் பார்வையுடைய மகளிர்

**பொழிப்புரை** : மீனாட்சிசுந்தரனாம் உத்தமனே ! நான்என்னசெய்வேன் ! என்நெஞ்சம் நின்பால் நிலைக்கவில்லை. என்காமநுகர்ச்சி ஆசையைத் தவிர்த்தருள். நீதான் என்னை வலியவந்து ஆட்கொண்டாய். அதுபோலவே

மானாக மருண்ட கண்களுடைய மகளிரின் மயக்கும் பார்வையில் மயங்காது என்மனத்தை மாற்றியருள்க.

27. மாற்றார் புரம்எரி செய்தவில் வீரன் வயங்குதிரு
நீற்றான் நிறைதரு மேனியன் நாகணை நீடுதுயில்
ஏற்றார் கொடியினன் மீனாட்சி சுந்தர ஏந்தல்அடி
மேற்றாம் அலர்புனைந்(து) ஏத்தாப் பிறப்(பு)என்ன வீண்பிறப்பே.

**குறிப்புரை** : மாற்றார்= பகைவராகிய முப்புர அசுரர்கள். நாகஅணை நீடுதுயில் ஏற்றார் கொடியினன்= பாம்புப் படுக்கையில் அறிதுயில் கொண்ட திருமாலாகிய விடையைக் கொடிச்சின்னமாகக் கொண்டவன். ஏந்தல்= அரசன். அடிமேல் அலர் தாம் புனைந்து= திருவடிக்கண் மலர்மாலை சூட்டி..

**பொழிப்புரை** : மேருமலையை வில்லாக, திருமாலினைஅம்பாக ஏந்தி, முப்புரஅசுரர்களின் கோட்டைகளை எரித்தவீரனும், ஒளிவிளங்கும்திருநீற்றால் நிறைந்த மேனியனும், பாம்புப் படுக்கையில் அறிதுயில்கொண்ட திருமால் ஆகிய விடையைக் கொடிச்சின்னமாகக் கொண்டவனும் ஆகிய மீனாட்சிசுந்தரனாம் பேரரசனின் திருவடிக்கண் மலர்மாலை சூட்டி ஏத்தாதவர் பிறப்பு என்ன பிறப்பு ? பயனற்றபிறப்பாகும்.

**விளக்கம்** : இச்செய்யுள், சிலம்பின் ஆய்ச்சியர் குரவையில் படர்க்கைப் பராவலாகவரும் " மூவுலகும் ஈரடியால் " என்றுதொடரும் மூன்று பகுதிகளையும் நினைவூட்டும்.

28. **களிற்றின் வரவு வினாய்த் தலைவன் எதிர்ப்படல்**

வீணை உறழும்முன் கைமட வீர்நும் விளங்குமணிப்
பூணை அணிந்த முலைப்பகை போல்உடல் புண்புணர்ந்து
கோணை முரண்வெங் கரிவந்த(து) உண்டெனில் கூறுவிர்நீர்
மாணை உறுபுகழ் மீனாட்சி சுந்தர மான்வரைக்கே.

**குறிப்புரை** : வீணை உறழும் முன்கை= வீணைபோன்று வழுவழுப்பான முன்கை. மணிப்பூண்= அழகிய அணிகலன். கோணை முரண்= மாறுபட்ட வலிமை. வெங்கரி= சினம் மிக்கயானை. மாண் உறுபுகழ்= மாட்சிமைப்பட்ட மிக்கபுகழ். முலைப்பகைபோல் கோணை முரண்வெங்கரி.

**பொழிப்புரை** : வீணையின் தண்டுபோல் வழுவழுப்பான முன்கையை யுடைய பெண்களே ! ஒளிவிளங்கும் அழகிய அணிகலன் அணிந்த உமதுமுலையுடன் பகைத்தது ஒத்த மத்தகங்களுடன் , மாறுபட்டுப் பகைத்த காரணத்தால் உடலில் புண்பட்ட யானையொன்று, மாட்சிமைப்பட்ட மிக்கபுகழ் பெற்ற மீனாட்சிசுந்தர மகானின் இம்மலைக்கண் வந்ததெனில் கூறுங்கள்.

29. வரையா வளம்பொலி மீனாட்சி சுந்தர வள்ளல்வெற்பில்
விரையார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய் விளங்கிழைகொள்

நரைஆர்இ மின்முலை நன்னூல் இடைஐய நன்குநின்வாய்
உரையால் உணர்வுவந் தார்இனும் உற்றனர் ஒண்புனத்தே.

**குறிப்புரை** : வரையா வளம்= எல்லையற்ற வளம். விரை= நறுமணம். நரை ஆர் இழை= பெருமைபொருந்திய அணிகலன். நன்நூல் ஐய இடை= வலிய நூலொத்த அழகிய இடுப்பு. ஒண்புனத்தே இனும் உற்றனர்.நன்கு நின்வாய் உரையால்.

**பொழிப்புரை** : எல்லையற்ற வளம்பொலியும் மீனாட்சிசுந்தர வள்ளலின் மலைகண், அழகிய உன்வாயாற் கூறிய சொற்கள் காரணமாக, மணக்கும் கருங்கூந்தல், வெண்பற்கள், சிவந்த இதழ்களுடன் ஒளிவிளங்கும் பெருமைபொருந்திய அணிகலன் அணிந்தமுலையுடைய இப்பெண்களோடு, வலியநூலொத்த அழகிய இடையுடையார் இத்தினைப்புனத்துக்கு இன்னும்வந்தனர்.

30. புனத்தே மலர்த்துள வோன்முத லோர்கள்பொன் றாதளித்த
கனத்தே கறுகண்டம் நீத்தபி ரானெந்தக் காலமும்என்
மனத்தே குடிகொண்ட மீனாட்சி சுந்தர மான்அடியார்
இனத்தே மருவப்பெற் றேன்பெரும் பே(று)இதின் என்இனியே.

**குறிப்புரை** : புனம்= கொல்லை. துளவோன்= துளசிமாலையணிந்த திருமால். பொன்றாது அளித்த= சாவாதுகாத்த. கனத்தே கறுகண்டம்= மேகம்போல் கருமைநிறமுடைய கழுத்து. இனம்= அடியார்கூட்டம்.

**பொழிப்புரை** : கொல்லைக்கண் மலர்ந்த துளசிமாலையணிந்த திருமால் முதலியோரைச் சாவாதுகாத்த மேகம்போல் கரியநிறமுடைய தனது கழுத்தை மறைத்துவந்த தலைவனும், எக்காலமும் என்மனத்தில் குடிகொண்டுள்ளவனுமாகிய மீனாட்சிசுந்தரனாகிய மகானின் அடியார் கூட்டத்துடன்பொருந்தி வாழப்பெற்றது நான் பெற்ற பெரும்பேறு, இதைவிட வேறு என்ன உள்ளது ? இதுவே பெறுதற்கரிய பேறு.

31. ஏதம் தவிரும் சுகமே மருவும் இன்பம்விளை
போதம் தழைதரும் முத்தியும் கூடும் பொலிவுமிக்க
நீதம் தழைஅருள் மீனாட்சி சுந்தர நித்தன்மலர்ப்
பாதம் தனைநாத் தழும்புறப் பாடிப் படித்திடினே.

**குறிப்புரை** : நீதம்= நீதி. ஏதம்= துன்பம். போதம்= ஞானம்.

**பொழிப்புரை** : நீதிதழைக்கும் பொலிவுமிக்க மீனாட்சிசுந்தரன் என்னும் பிறப்பிறப்பில்லாக் கடவுளின் - சிவபிரானின் தாமரைமலர்ஒத்த திருவடிகளை நாத்தழும்பேறப் பாடியும் படித்தும் வாழின், துன்பம் அண்டாது, நலமே வந்துசேரும், இன்பம்உண்டாக்கும் ஞானம்தரும், இறுதியில் முத்தியும் வாய்க்கும்.

32. **தலைவிக்குத் தோள்மாலை தருமாறு பாங்கி வேண்டல்**

படிஆர் தருபுகழ் மீனாட்சி சுந்தரப் பண்ணவநின்
வடியார் நறுமலர் மாலை பெறாது மயங்கிநெஞ்சம்
துடியா அரற்றித் துயருள் விழும்எழும் சோரும்மிக்க
கடிஆர் கனங்குழல் கைவளை சிந்தும்எம் காரிகையே.

**குறிப்புரை** : படிதரு ஆர்புகழ்= உலகுபோற்றும் மிக்கபுகழ். பண்ணவன்= கடவுள். வடிஆர்= அழகுமிக்க. துடியா= துடித்து. கடி= நறுமணம்.

**பொழிப்புரை** : உலகுபோற்றும் புகழ்மிக்க மீனாட்சிசுந்தரனாகிய கடவுளே ! உனதுஅழகு பொருந்திய நறுமணம் மிக்க தோள்மாலை பெறாமையால், மணம்மிக்க அடர்ந்த குழலுடைய இவள், மனம் மயங்கி, நெஞ்சுதுடித்து, புலம்பி, துன்பத்துள் ஆழ்வாள், மீண்டு எழுவாள், சோர்வாள், கைவளையல் நெகிழ்வாள். எனவே நின்தோள்மாலை இவட்கு அருள்க.

**விளக்கம்** : தலைவியிடம் நிகழ்ந்தன காமமீதூர்ந்த மெய்ப்பாடுகள்.

33. கைஏந்து கங்கமும் காலேந்து மாயவன் கண்ணுமணிப்
பையேந்து பூணும்ஒண் மையேந்து கண்டமும் பா(று)உலவு
வைஏந்து சூலமும் நீத்(து)எனை ஆள மதித்த(து)என்னே
ஐயேந்து தண்ணருள் மீனாட்சி சுந்தர ஆண்டவனே.

**குறிப்புரை** : ஐ= அழகு. கங்கம்= நெருப்பும். மாயவன்= திருமால். மணிப்பை= அழகிய படம். பூண்= (பாம்பாகிய) அணிகலன். பாறு= அழித்து. வை= கூர்மை. ஐ= அழகு.

**பொழிப்புரை** : அழகுபொருந்திய, தண்ணிய அருள்வடிவான மீனாட்சிசுந்தரனாகிய ஆண்டவனே ! கையில் நெருப்பும், காலில் திருமாலின் தாமரைக்கண்ணும், அழகிய படமுடைய நாகமாகிய அணிகலனும், ஒளிரும் கரிய கழுத்தும், அழித்து உலவும் சூலமும் ஆகியவற்றை நீத்து என்னை ஆட்கொண்டருள மதித்தது வியக்கத்தக்கதாகும்.

**விளக்கம்** : திருமால் கண்சாத்தி வழிபட்டது - " மண்வைத்த குக்கி வளைவைத்த செங்கண்மால், கண்வைத்தும் காணாக் கழலினான் "(திருவிடை மருதூர் உலா. கண்ணி 17, ) " சரணன்றே, மண்துழாய் உண்டார்க்குக் கண்மலரோ(டு) ஒண்மவுலித், தண்துழாய் பூத்த தடம் " ( மதுரைக்கலம். 3 .)

34: ஆண்டான் எனைத்தற்(கு) அடிமை எனத்தன் அருள்அணியாய்ப்
பூண்டான் எழில்குரு மீனாட்சி சுந்தரப் புண்ணியன்தாள்
வேண்டார் பணியார் துதியார் வறிதுசெவ் வேமரம்போல்
நீண்டார் இருந்தும் பயன் என்னை யோஇந் நிலச்சுமையே.

**குறிப்புரை** : செவ்வே= நன்றாக. எழில் குரு= எழுச்சிதரும்குரு.

**பொழிப்புரை** : என்னைத் தனக்குஉரியவனாக ஆட்கொண்டவனும், அருளையே தனது அணிகலனாகப் பூண்டவனும் ஆகிய எழுச்சிதரும்

குருவாம் புண்ணியனாகிய மீனாட்சிசுந்தரனின் திருவடிகளை, விரும்பாதவர், வணங்காதவர், துதிக்காதவர்கள் வீணேநன்றாக மரம்போல் உயரமாக வளர்ந்தும் என்ன பயன் ? நிலச்சுமையே ஆவர்.

35. நிலம்காவல் பூண்டும்என் பேராக்கம் உற்றும்என் நேர்அமரில்
கலங்காத வன்மை அடைந்தும்என் நூல்பல கற்றும்என்பூ
தலம்கா முறுபுகழ் மீனாட்சி சுந்தரத் தாணுவின்தாள்
நலம்கா முறும்அன் பொடுபணிந்(து) ஏத்தும் நலம்இலரே.

**குறிப்புரை** : பேர் ஆக்கம்= மிகப்பெரிய உயர்வு. நேர்அமர்= நேருக்கு நேரான சண்டை. பூதலம் காமுறு= உலகவர் விரும்பும். தாணு= சிவபிரான். நலம்= அருள்.

**பொழிப்புரை** : உலகவர் விரும்பும் புகழுடைய மீனாட்சிசுந்தரனாகிய சிவபிரானின் திருவடியை விரும்பி அன்புடன் வணங்கி ஏத்தும் அருள் இல்லாதவர், உலகைக் காத்தும், மிகப்பெரிய உயர்வுபெற்றும், நேருக்குநேர் சண்டையில் மனம்கலங்காத வலிமை பெற்றிருந்தும், பலநூல்கள் கற்றிருந்தும் என்னபயன் ? பயனில்லை.

36. நல்லார் புகழும் சிரகிரி மேவிய நாதன்கொன்றை
வில்ஆர் தொடைபுனை மீனாட்சி சுந்தர மெய்ம்மையன்தன்
அல்ஆர் மிடறு மறைத்த கருத்தினை ஆய்வுறின்என்
மல்ஆர்வெம் மூல மலம்மாய்க்கும் தன்மை வயங்கியதே.

**குறிப்புரை** : சிரகிரி= சிராமலை - திருச்சிராப்பள்ளி மலை. நாதன்= அருள்தரு தாமானவர். வில்= ஒளி. மெய்ம்மையன்= ஞானி. அல்ஆர்= கருமைபொருந்திய. மல்ஆர் வெம் மூலமலம்= வலிமைபொருந்திய கொடிய ஆணவமலம்.

**பொழிப்புரை** : சான்றோர் புகழும் சிராமலையில் எழுந்தருளியுள்ள அருள்தரு தாயுமானவன் ஆகிய தலைவனும், ஒளிபொருந்திய கொன்றைமாலை சூடியவனுமாகிய மீனாட்சிசுந்தரன் ஆகிய ஞானி தனது கருமைபொருந்திய கழுத்தினை மறைத்துவந்த குறிப்பினை ஆராயின், அதன்மூலம் எனது வலிமைபொருந்திய கொடிய மூலமலமாகியஆணவ ஆற்றலை அழிக்கவந்த அவனது தன்மை விளங்கும்.

37. **தலைவன் தலைவியின் நலம்பாராட்டல்**

வயம்கொண்ட சீர்புனை மீனாட்சி சுந்தர வள்ளல்வெற்பில்
குயம்கொண்ட நுண்ணிடை ஓவிய மேநின் குலவும்இருள்
நயங்கொண்ட மென்குழல் கண்டுமுன் நின்றிட நாணியன்றோ
பயம்கொண்(டு) அரற்றித் திசைதொறும் ஓடும் பயோதரமே.

**குறிப்புரை** : வயம்= வெற்றி. குயம்= முலைகள். இருள் குலவும்.

நயம்= அழகு. பயோதரம்= மேகம்.

**பொழிப்புரை** : வெற்றிபெற்ற சிறப்புடைய மீனாட்சிசுந்தரர் மலைக்கண் வாழும் முலைகளுடன் கூடிய நுண்ணிடை கொண்ட அழகியே ! உனது இருள்போன்று விளங்கும் அழகிய மென்மையான கூந்தலைக்கண்டு நாணமும் அச்சமும் கொண்டு புலம்பியல்லவா மேகம் திசைதோறும் ஓடுகிறது.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

38. **தோழி ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி**

தரக்கும் கொடியவெங் கேழலும் சிங்கமும் தங்குபுழைக்
கரக்குஞ் சரமும் வழங்கும் அதர்இனம் கண்(டு)அரன்பாப்
புரக்கும் தொழில்குரு மீனாட்சி சுந்தரன் போற்றலர்போல்
வரக்குன் றனைய முலையாய் நின்னெஞ்சம் வலித்த(து)என்னே.

**குறிப்புரை** : தரக்கு= புலி. வெங்கேழல்= சினம்மிக்க காட்டுப் பன்றி. புழைக்கரம்= துளையுள்ள கை - துதிக்கை. தங்கு= வாழும். அதர் இனம்கண்டு= வழிவகைகளை ஆராய்ந்து. பாப்புரக்கும்= தூய்மையுடன் காக்கும். போற்றலர்= பகைவர். வர= அஞ்சியஞ்சி வர. வலித்தது= உடன்பட்டது. என்= ஏன்.

**பொழிப்புரை** : புலியும், கொடிய சினம்மிக்க காட்டுப்பன்றியும், சிங்கமும், துளைக்கையுடைய யானையும் தங்கிவாழும் வழிவகையைத் தலைவன் ஆராய்ந்து பார்த்து, சிவபிரானின் தூயகாக்கும் தொழில்புரியும் குருவாகிய மீனாட்சிசுந்தரனின் பகைவரைப்போல் அஞ்சிஅஞ்சிவர உனதுமனம் உடன்பட்டது ஏன்?

39. வல்லார் எனப்படு வார்களும் சீலம் வயங்குறுசீர்
நல்லார் எனப்படு வார்களும் தீய நரகதனில்
செல்லார் எனப்படு வார்களும் தண்மை திரண்டனைய
வில்லார் அருட்குரு மீனாட்சி சுந்தரன் மெய்யன்பரே.

**குறிப்புரை** : தண்மை= அருள். வில்= ஒளி.

**பொழிப்புரை** : அருள்திரண்டாற்போன்ற ஒளிபொருந்திய குருவாகிய மீனாட்சிசுந்தரனின் மெய்யன்பர்கள்தாம், வல்லவர் எனப்படுவார்களும், சீலம்விளங்கும் நல்லவர் எனப்படுவார்களும், கொடிய நரகடையாதவர் எனப்படுவார்களுமாவர்.

**விளக்கம்** : மீனாட்சிசுந்தர குருவின் மெய்யன்பர், வல்லாராய், நல்லாராய், நரகடையாராய் வாழ்வர் என்றார்.

40. அன்னோ உலகில் பலர்நக என்றும் அலைந்துமிளிர்
மின்னோ(டு) உறழ்நுண் இடையார் முயக்கம் விருப்புறுவாய்

பொன்னோ(டு) உறழ்சடை மீனாட்சி சுந்தரப் புண்ணியன்தாள்
என்னோ விருப்புற் றிலாய்நெஞ்ச மேநிற்(கு) இயல்பல்லவே.

**குறிப்புரை** : நக= ஏளனம் செய்ய. மின்னோடு உறழ்= மின்னலை ஒத்த. முயக்கம்= புணர்ச்சி. அன்னோ= அந்தோ. இயல்பு= நற்பலன்.

**பொழிப்புரை** : நெஞ்சமே ! உலகில் பலரும் ஏளனம்செய்ய, நாடோறும் மின்னல்போன்ற இடுப்புடைய மகளிர் புணர்ச்சியை விரும்பி அலைகிறாய். பொன்போலும் சடையுடைய மீனாட்சிசுந்தரன் ஆகிய புண்ணியனின் திருவடிகளில் விருப்பம்கொண்டிலை. இது உனக்கு நற்பலன் தருவதன்று.

41. இயல்ஏய் தருபுகழ் மீனாட்சி சுந்தர என்குருவை
வியல்ஏய் தருநற் குணமலை யேமிளிர் மெய்யன்பருக்(கு)
உயலே புரிகரு ணைக்கட லேஉணர்(வு) ஓங்கப்பெய்யும்
புயலேஎன் றென்று புகலப்பெற் றேன்இ(து)என் புண்ணியமே.

**குறிப்புரை** : இயல்= ஒழுக்கம். ஏய்தரு= பொருந்திய, வியல்= பெருமை.. உயலேபுரி= உய்வைத்தரும். புயல்= மழை.

**பொழிப்புரை** : நல்லொழுக்கம் பொருந்திய புகழ்வாய்ந்த என்குருவாம் மீனாட்சிசுந்தரனைப் பெருமைபொருந்திய நற்குணமலையே, மெய்யன்பு தன்பால் ஒளிர்வோருக்கு உய்வைத்தரும் கருணைக்கடலே, நல்லுணர்வு மேன்மேலும் வளரப்பொழியும் மழையேஎன்று போற்றும்பேறுநான் பெற்றது என்புண்ணியப் பயனாகும்.

42. புண்ணியன் சீலப் புராதனன் தேங்கமழ் பூங்குவளைக்
கண்ணியன் இன்பக் கதிஅருள் நாதன் கவின்றஅருள்
தண்ணியன் அன்பிற் சதாகால மும்நினை தன்னடியர்க்(கு)
அண்ணியன் நம்குரு மீனாட்சி சுந்தர அற்புதனே.

**குறிப்புரை** : சீலப்புராதனன்= ஒழுக்கவடிவான அநாதியன். கண்ணி= மாலை. இன்பக்கதி= வீடுபேறு. நாதன்= தலைவன். தண்ணியன்= இன்பம் வழங்குகிறவன். அண்ணியன் நெருக்கமானவன். அற்புதன்= ஞானி.

**பொழிப்புரை** : நம்குருவாகிய மீனாட்சிசுந்தரன் என்னும் ஞானி, புண்ணியவடிவன், ஒழுக்கவடிவான அநாதியன், தேன்மணக்கும் அழகிய செங்குவளைமலர் மாலை அணிந்தவன், வீடுபேறு அருளும் தலைவன், அழகிய அருள்வடிவான இன்பம் வழங்குகிறவன், தன்னை அன்புடன் எப்போதும் நினையும் தன்அடியவர்க்கு நெருக்கமானவன் ஆவான்.

43. புத்திக்கு நல்லஎண் சித்திக்கு ஞானப் பொலிவினுக்கு
முத்திக்கும் வாய்த்தவர் யாரெனில் சொல்வன் மொழியுந்தொறும்
தித்திக்கும் வான்புகழ் மீனாட்சி சுந்தர தேசிகன்தாள்

பத்திக்(கு) உரிமை அடைந்(து)ஒழு காநிற்கும் பண்பினரே.

**குறிப்புரை** : எண்சித்தி= எட்டுவகைச் சித்திகள். ஒழுகாநிற்கும்= ஒழுகும் - வழுவாது வாழ்கின்ற.

**பொழிப்புரை** : நல்லஅறிவு, எட்டுவகைச் சித்திகள், ஞானத்தில் பொலிதல், முத்திபெறுதல் அனைத்தும்தரப் பொருத்தமானவர் யார்என்றால், அத்தகையவர்; சொல்லுந்தோறும் இனிக்கும் மேலானபுகழுடைய மீனாட்சிசுந்தரன் ஆகிய குருவின் திருவடிகளைப் பத்திசெய்வதற்கு உரிமையுடையவராய் அதில் வழுவாது வாழ்கின்றவரேயாவார்.

**விளக்கம்** : எண்சித்திகள் : அணிமா= நுண்மை. மகிமா= பருமை. லகிமா= மென்மை. கரிமா= விண்டன்மை. பிராத்தி= விரும்பியது அடைதல். பிரகாம்யம்= நிறைவுண்மை. வசித்துவம்= கவர்ச்சி. ஈசத்துமம்=ஆட்சியாளுதல் என்பன.

## 44. உடன்போக்குச் சென்ற தலைவியின் மிக்கிளமை கூறிச் செவிலி வருந்துதல்

பண்ஆர் குதலை முகமன் புகன்றும்இன் பால்அடிசில்
உண்ணா த(து)என்என்(று) பாவையொ(டு )ஊடும் உணர்(வு)உடையாள்
தண்ணார் அருட்குரு மீனாட்சி சுந்தர தற்பரனை
எண்ணார்செல் வெஞ்சுரத்(து) எவ்வாறு சென்றனள் ஏந்திழையே.

**குறிப்புரை** : பண்= இனிமை. முகமன்= உபசாரப் புகழ்மொழி. தற்பரன்= சிவன். வெஞ்சுரம்= கொடிய பாலைநிலவழி.

**பொழிப்புரை** : அணிகலன் அணிந்தவளே ! இனிமைமிக்க குதலை மொழியால் புகழ்ந்து கூறியும், “ இனிய பாற்சோற்றை ஏன் உண்ணமாட்டேன் என்கிறாய் “ என்று தன்பாவையாகிய விளையாட்டுப் பொம்மையுடன் ஊடல்கொள்ளும் உணர்வுஉடைய இவள் ( தலைவி ) பெருமைபொருந்திய அருட்குருவாம் மீனாட்சிசுந்தரனாகிய சிவபெருமானை எண்ணாதவர் செல்லும் கொடிய சுரவழியில் எவ்வாறு சென்றாள் !

## 45. கழிகாம மொழி

ஏந்தும் தரள வடமும் கருகும் இளநிலவும்
காந்தும்இன் பாலோ(டு) அனமும் கசக்கும் கதிர்முலைமேல்
சாந்தும் பொரியும்தன் மீனாட்சி சுந்தர சாமிஅரி
மாந்தும்இன் தேந்தொடை ஈந்(து)எனைச் சேர்ந்து மருவிலரே.

**குறிப்புரை** : ஏந்தும்= அணிந்த. தரளவடம்= முத்துமாலை. இளநிலவு= பிறை. காந்தும்= எரிக்கும். அனம்= அன்னம் - சோறு. கதிர்= கூர்மை. சாந்து= சந்தனம். அரிமாந்தும்= வண்டுகள் பருகும். இன்தேந்தொடை= இனிய தேன்பொருந்திய மலர்மாலை. சேர்ந்து மருவிலரே= கூடித் தழுவவில்லையே.

**பொழிப்புரை** : நான் அணிந்த முத்துமாலை கருகுகிறது, பிறைநிலவும்

என்னை எரிக்கிறது, இனிய பாலும்சோறும் கசக்கிறது, என் சாயாமுலைமேல் தடவிய சந்தனம் பொரிகிறது. எனினும், மீனாட்சிசுந்தரனாகிய சுவாமி, வண்டுகள் இனியதேன்பருகுமாறு தான்அணிந்துள்ள மலர்மாலையை எனக்குத்தந்து, என்னைக்கூடித் தழுவினாரில்லையே.

46. மருந்தே நுகர்செம் மணிப்பூண் ஒருவி நன்மானிடமா
உருத்தே சுடன்ஒளிர் மீனாட்சி சுந்தர வொண்குருஎன்
கருத்தே நிறுத்தும் கழல்தன் சிரத்தில் கவினுறநன்(கு)
இருத்தே எனஇரந் தார்க்(கு)எய் துறாஇன்பம் என்உளதே

**குறிப்புரை** : மருந்து= காற்று. செம்மணிப்பூண்= சிறந்த மாணிக்கமணியுடைய பாம்பாகிய அணிகலன். ஒருவி= நீத்து. என்கருத்தே தன்கழல் சிரத்தில் நிறுத்தும். எய்துறா= அடையவியலாத.

**பொழிப்புரை** : காற்றை உண்ணுவதும், சிறந்த மாணிக்கமமணி உடையதுமாகிய நாகமாகிய அணிகலனை நீத்து, ஒளிரும் நல்லமானிட வடிவுடன் விளங்கும் என்குருவாகிய மீனாட்சிசுந்தரனிடம், “ தங்கள் திருவடியை, நான்அழகுற என்வேண்டுகோளின் வண்ணம் நன்கு என்தலைக்கண் நிறுத்தவேண்டும் “ என்று வேண்டுவார் அடையவியலா இன்பம் ஏதுமில்லை. அனைத்தும் அடைவர்.

47. உள்ளும் பவம்ஒரு கோடி உறினும் உருகவந்த
விள்ளும் பவம்தொறும் மீனாட்சி சுந்தர மெய்ம்மையநீ
எள்ளும் செயலில் புகுத்தா(து)என் பால்நின்குற் றேவலையே
கொள்ளும் படிதொண்ட னாக்கொள்வை யேல்இக் குவலயத்தே.

**குறிப்புரை** : விள்ளும்= தழுவும் - பெறும். பவம்= பிறப்பு. உருகவந்த தொண்டனாக்குவையேல்

**பொழிப்புரை** : மீனாட்சிசுந்தரனாகிய ஞானியே ! உன்னை நினைந்து உருகும்பொருட்டு, நான்பெறும் பிறவிகள்தோறும் நீ என்னைப் பிறர் இகழும்செயலில் ஈடுபடுத்தாமல், நின் குற்றேவலையே ஏற்கும்படியான தொண்டனாக்கினால் நான் தழுவும் பிறப்பு ஒருகோடியாயினும் கவலை இல்லை.

**விளக்கம்** : “ யானேதும் பிறப்பு அஞ்சேன் . . . . . உன்னருள் பெறுநாள் என்றென்றே வருந்துவனே”. ( திருவாச.12 )

48. குவலையம் அன்ன விழியார்குற் றேவல் குயிற்றிஉள்ளக்
கவலைய னாய்உழன்(று) எய்த்தே திரிகடை யேன்இங்ஙனம்
தவல்ஐய நின்அரு ளுக்(கு)அழ காஅன்பர் தங்கட்(கு)அருள்
பவலையம் இல்புகழ் மீனாட்சி சுந்தரப் பண்ணவனே.

**குறிப்புரை** : குவலையம்= கருங்குவளை மலர். குயிற்றி= செய்து.

தவல்= கெடுதல். பவலயம் இல்= பிறப்பில் சேர்த்தல் இல்லாத.

**பொழிப்புரை** : அடியவர்களைப் பிறவியில் சேர்க்காத அருள்வாய்ந்த மீனாட்சிசுந்தரனாகிய சிவமே ! கருங்குவளைமலர் போன்ற விழிகளுடைய மகளிர்க்குக் குற்றேவல் செய்து உள்ளம்கவலைப்படுகிறவனாய்த் துன்புற்றுக் களைத்துத்திரியும் இக்கடையவன், இவ்வாறு கெடுவது தலைவனே ! உனது அருளுக்கு அழகன்று. என்னைக் கடைத்தேற்றி அருள்.

49 பண்ணேன்நின் பாதப் பணிஅப் பணிசெயும் பண்பினரை
நண்ணேன் துதியும் நவிற்றுகிலேன் நெஞ்சு நைந்(து)உருகாத்
திண்ணேன் அருட்குரு மீனாட்சி சுந்தர தேவசற்றும்
எண்ணேன் செலும்கதி என்னே இருந்தஎன் ஏழைமையே.

**குறிப்புரை** : தேவ= இறைவனே. நண்ணேன்= சென்றடையேன். திண்ணேன்= கல்மனத்தினன். ஏழைமையே= அறியாமையே காரணம்.

**பொழிப்புரை** : அருள்வடிவான குருவாய்வந்த மீனாட்சிசுந்தரன் ஆகிய இறைவனே ! நின்திருவடிகட்குத் தொண்டுசெய்யவில்லை, தொண்டுசெய்யும் பண்புடையவர்களைச் சென்றடையவும் இல்லை, உன்னைப் பற்றிய துதி சொல்லவுமில்லை. இங்ஙனம் மனமுருகாமல் வாழும் கல்மனத்தனான நான் சென்றடையும் கதி என்னே ! இத்தனைக்கும் என் அறியாமையே காரணம்.

50. மைதங்கு வாட்கண் மலர்தங்கு பூங்குழல் வாளரவின்
பைதங்கும் அல்குல் படர்முலை மாதர் பணிபுரியா(து)
ஐதங்கு தண்ணருள் மீனாட்சி சுந்தர ஆரியன்தாள்
கைதங்கு மாமலர் தூவிப் பணியவும் கற்றனனே.

**குறிப்புரை** : பை= படம். ஐ= சிவன். ஆரியன்= குரு.

**பொழிப்புரை** : மைஎழுதிய ஒளிபொருந்திய கண், மலர் சூடிய மென்மையான கூந்தல், கொடியநாகத்தின் படமொத்த அல்குல்,தொய்வின்றிப் படர்ந்தமுலை ஆகியனகொண்ட மாதர்க்குப் பணிசெய்யாது, சிவனாகிய பெருமைபொருந்திய அருள்வடிவான மீனாட்சிசுந்தரக் குருவின்திருவடிகளில், என்கைகளில் ஏந்திய மலர்களைத்தூவி வழிபடக்கற்றேன்.

51. **தலைவனின் கல்வியிற்பிரிவைத்**
**தோழி தலைவிக்குக் குறிப்பாற் கூறல்**

கற்றார் புகழ்குரு மீனாட்சி சுந்தர காரணனை
உற்றார் பெருநலம் கல்விஒன் றேநன்(கு) உதவும்எனச்
சொற்றார் நின்கொங்கை துணையக லாநமர் தூயமலர்
வில்தார் அணிகுழல் வெண்ணகைச் செவ்வாய் விளங்கிழையே.

**குறிப்புரை** : வில்தார்= ஒளிபொருந்திய மலர்மாலை - புத்தம் புதுமலர் மாலை. காரணன்= மூலப்பொருளான சிவனை. நமர்= நம்தலைவர்.

**பொழிப்புரை** : புத்தம்புது மலர்மாலை சூடிய கூந்தலும்,வெண்பற்களும், கொவ்வைஇதழ்களுமுடையவளான விளங்கும் அணிகலன் அணிந்தவளே ! உனது இருமுலைகளைவிட்டு அகலாத நம்தலைவர், “ கல்விஒன்றே நன்முறையில் உதவும்; இதன்பொருட்டு, கற்றவர்புகழும் குருவாகிய மீனாட்சிசுந்தரனென்ற சிவனை அடைந்தவர் பெரியநன்மைகள் அடைவர் “ என்று கூறினார். ( கல்வியின்பொருட்டு அவரிடம் சென்றுளார் என்பதைக் குறிப்பால் உணர்த்தினாள். )

52. இழைதாங்கு மென்முலை யார்மயல் வாரி யிடைமுழுகிக்
கழைதாங்கு வேள்படைக் கேயிலக்(கு) ஆம்கடை யேன்அரவக்
குழைதாங்கு பேரெழில் மீனாட்சி சுந்தரக் கோனின்அருள்
மழைதாங்கு கண்கடைக் கேஇலக்காக மருவல்என்றே.

**குறிப்புரை** : இழை= அணிகலன். வாரி= கடல். கழை= கரும்பு. படை= மலர் அம்புகள். அரவக்குழை= நாகக்காதணி.

**பொழிப்புரை** : அனிகலன் அணிந்த முலைகளுடைய மகளிரின் மையற் கடலில் முழுகி, கரும்பினை வில்லாக ஏந்திய மன்மதனின் மலரம்புகட்கு இலக்குஆகும் கடையவனான நான், நாகக்காதணி அணிந்த சிவனாகிய பேரெழில்பொருந்திய மீனாட்சிசுந்தரனாகிய பேரரசனின் அருள்மழைபொழியும் கடைக்கண்களுக்கு இலக்காகப் பொருந்துவது எந்நாளில் !

53. **தலைவன் தந்த கையுறையைத் தலைவி ஏற்றமை தோழிஅறிவேன் எனல்**

மருமாலை வேய்குரு மீனாட்சி சுந்தர மான்வரையில்
கருமாலை வென்ற எழிலார் ஒருவர் கனிந்துநின்று
தருமாலை ஏற்றனள் தன்பாவைக்(கு) என்று தடங்குழைமேல்
பொருமால் அயில்விழி யாய்அறி வேன்பொய்தல் பூம்புனத்தே.

**குறிப்புரை** : மரு= நறுமணம். கருமால்= கரியதிருமால். தன்பாவைக்கென்று தருமாலை ஏற்றனள். குழைமேல் பொரு= குழைக்கண் மோதும். பொய்தல்= தோழி.

**பொழிப்புரை** : பெரியகாதணியைக் கண்மோதும் பெருமைபொருந்திய வேல் ஒத்த கண்களுடையவளே ! மணம்மிக்க மாலையணிந்த மீனாட்சிசுந்தர மகானின் மலைக்கண் உள்ள மலர்ச்சோலையில், தோழியருடன்இருந்தபோது கரியதிருமாலை வென்றஅழகன்ஒருவன், பாவைஒத்த காதலிக்கு அன்புடன் தந்த மாலையை அவள் ஏற்றாள் என்பதை நான் அறிவேன் என்றாள்தோழி.

54. தேமலர்ப் பூங்கொன்றை மீனாட்சி சுந்தர தேசிகன்தன்
பூமலர்ச் சேவடிக் கேஎந்த ஞான்றும் புகலும்தமிழ்ப்

பாமல ரப்புனை நாவும்தந்(து) என்னைப் படைத்தமரை
மாமலர் மேவும் பிரான்திருச் சீரென்றும் வாழியவே.

**குறிப்புரை** : புனை நா= தொடுப்பதற்குரிய நாக்கு. மரை= தாமரை. ( முதற்குறை ) பிரான்= நான்முகன்.

**பொழிப்புரை** : தேன்பொருந்திய மென்மையான கொன்றைமலர் மாலை சூடிய மீனாட்சி சுந்தரகுருவின் பொலிவார்ந்த மலர்போன்ற சேவடிகட்கு எப்போதும் சூட்டத்தக்க தமிழ்ப்பாத் தொடுப்பதற்குரிய நாக்கினினுடன் என்னைப்படைத்தவனாகிய தாமரைமலர்மேல் வாழும் நான்முகனின் சிறப்பு எந்நாளும் வாழ்க.

## 55. தோள்மாலை வேண்டுதல்

வாள்ஏந்து பூண்முலை மைஏந்து கூர்விழி மான்விரிவில்
வேள்ஏந்து பூங்கணை ஆளமே(வு) அஞ்சை விரும்பினை
ஆள்ஏந்து தண்ணருள் மீனாட்சி சுந்தர ஆரியன்பொன்
தோள்ஏந்து பைந்தொடை அன்றிஅன் னாய்மை தொலைத்திடுமே.

**குறிப்புரை** : வாள்= ஒளி. விழிமான்= விழியாகிய மான். விரிவில்= பெரியகரும்புவில்.. ஆள= என்னை ஆட்கொள்ள. மேவு அஞ்சை= பொருந்திய நாணம். எனை ஆளேந்து= என்னைத்தன் ஆளாகக் கொண்ட. மை= மையல் - காதல்மயக்கம்.

**பொழிப்புரை** : ஒளிபொருந்திய அணிகலனுடன் ஏந்திய முலை, மைதீட்டிய கூர்விழியாகிய மான்கொண்ட என்னை, பெரிய கரும்புவில் ஏந்திய மன்மதனின் மலர்க்கணைகள் ஆட்கொள்ள, அதனால் வந்த நாணத்தை விரும்பி, என்னைத் தன்னவளாகக் கொண்ட பெருமைபொருந்திய அருளுடைய மீனாட்சி சுந்தரனாகிய தலைவனின் அழகிய தோளில்படிந்த மாலையாலன்றி, இம்மையல் தொலையாது.

**இலக்கணக்குறிப்பு** : அன்னாய் - அசைச்சொல்.

56. மேவார் அரண்எரி மேவப்பொன் மேருவில் லாஅரியை
ஏவாகக் கொண்டருள் மீனாட்சி சுந்தர எம்மிறைவற்(கு)
ஓவாத பேரன்(பு) உஞற்றாரந் தோசிலர் உற்றுழன்று
சாவார் பிறந்ததற்(கு) என்பய னோஅவர் சார்ந்ததுவே.

**குறிப்புரை** : மேவார் அரண்= பகைவரின் முப்புரம். பொன்மேரு= அழகிய மேருமலை. அரி ஏவா= திருமாலை அம்பாக. உஞற்றார்= மேற்கொண்டு முயலாதார்,

**பொழிப்புரை** : பகைவரது முப்புரங்கள் எரியுண்ண, அழகிய மேருமலையை வில்லாகவும், திருமாலை அம்பாகவும் கொண்டருளிய மீனாட்சிசுந்தரனாகிய எம்தலைவன்மேல் இடைவிடாத பேரன்புகொண்டு

முயலாதவர் சிலர் துன்புற்றுச் சாவார். அவர் இவ்வுலகைச்சார்ந்து பிறந்ததற்கு என்னபயன் ?

### 57. பொருள்வயிற் பிரிவு தோழி கூறுதல்

வேயினும் சீரிய தோளிநின் கொங்கை மிளிர்பொன்தரு
மாயினும் ஆகுக என்(று)அன்பர் செம்பொன் அவாவினராய்த்
தாயினும் நல்லன்எம் மீனாட்சி சுந்தரற் சாரலர்போல்
தீயினும் வெம்மை தரும்கொடும் பாலையில் சென்றனரே.

**குறிப்புரை :** வேய்= மூங்கில். பொன்= பசலை.

**பொழிப்புரை :** மூங்கிலைக்காட்டிலும் வழுவழுப்பான தோள்கள் உடையவளே ! தலைவர், உனது அழகியகொங்கைகள், தனது பிரிவால் பசலை – பொன் - பூத்தாலும் பூக்கட்டும் என்று செம்பொன்னை விரும்பியவராய், தாயினும் நல்லனாகிய மீனாட்சு சுந்தரனைச் சாராதார் போன்ற தீயினும் கொடுமைதரும் பாலைவழியிற் சென்றார்.

**விளக்கம் :** தலைவியின் கொங்கையில் பொன் ( பசலை) பூக்க, எங்கோஉள்ள செம்பொன்னை( காசுபணத்தை ) நாடினார்தலைவர் என்ற நயம்காண்க.

### 58. தலைவன் பாங்கற்குக் குறியிடம் கூறல்

செல்லே கருங்குழல் சேலே விழிச்செருச் செய்மதன்கை
வில்லே நுதல்வெண் மணியே மிளிர்நகை வேய்பசுந்தோள்
வல்லே இளமுலை மீனாட்சி சுந்தர மான்வரைசூழ்
அல்லே தருபைம் பொழிலே இடம்என(து) ஆருயிரே.

**குறிப்புரை :** செல்= மேகம். வெண்மணி= முத்து. வேய்= மூங்கில். வல்= சூதாடு கருவி. அல்= இருள்.

**பொழிப்புரை :** என்ஆருயிராகிய தலைவிக்கு, மேகம்தான் கரிய கூந்தல், கெண்டைமீன்தான் விழிகள், போரிடும் மன்மதனின் வளைந்த கைவில்லே (கரும்பு) நெற்றி, வெள்ளிய முத்தே பற்கள், மூங்கிலே வழுவழுப்பான தோள்கள், சூதாடு கருவியே இளமுலைகள், அவள் பயிலிடம் மீனாட்சிசுந்தர மகானின் மலைப்பக்கத்து இருள்சூழ்ந்த பசிய சோலையே ஆகும்.

### 59. தலைவிக்குத் தோள்மாலைதரப் பாங்கி வேண்டல்

ஆர்வேட்ட செஞ்சடை மீனாட்சி சுந்தர ஆரியநின்
தார்வேட்ட பூங்கொடி அன்னாள் மதியம் தழல்சொரியும்
பீர்வேட்ட கொங்கை யிடைப்பூங் கணைமழை பெய்யவெய்ய
போர்வேட்(டு) அனங்கன் எழுமேயென் றென்று புலம்புறுமே.

**குறிப்புரை :** ஆர்= ஆத்திமலர். தார்= மார்புமாலை. மதியம்= நிலவு. பீர்=

காமத்தால் முலையிடைப் பூக்கும் பசலைநிறம். பூங்கணை= மென்மையான மலரம்புகள். வேட்டு= விரும்பி. அனங்கன்= மன்மதன்.

**பொழிப்புரை** : ஆத்திமலர்களை விரும்பிச்சூடும் மீனாட்சிசுந்தர னாகிய சிவமே, உன்மார்பில் அணிந்துள்ளமாலையை விரும்பும், மென்மையான கொடியொத்த இவள்மேல் நிலா நெருப்பைச் சொரிகிறது, பசலைபூத்த இவள்கொங்கைகளில் தனது மென்மையான மலரம்புகளை மழையாகப் பெய்து போரிட விரும்பி மன்மதன் எழுவான் என்று இவள் புலம்புகிறாள். உன்தோள்மாலை தந்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : என்று என்று - அடுக்குத்தொடர்.

60. புல்லியர் நெஞ்சம் புகுதா விரைஅருள் பூரணன்சீர்
நல்இயல் ஆர்குரு மீனாட்சி சுந்தர நாதன்புகழ்
சொல்லிய நாஒன்(று) உளார்என் இலார்அவன் தூய்ப்புகழ்சொல்
மெல்லிய நாஒன்(று) இலார்என் உளார்இந்த மேதினிக்கே.

**குறிப்புரை** : அருள்பூரணன்= முழுமையான அருள்வடிவன்= சிவபிரான். விரை புகழ்= மணக்கும் புகழ். என் இலார்= என்னஇல்லாதவர் -எல்லாநலனும் உள்ளவர். என் உளார்= என்ன உள்ளவர் - எந்நலனும் இல்லாதவர்.

**பொழிப்புரை** : அற்பர்மனம் புகாத சிவபிரான் ஆகிய நல்லியல்புகள் பொருந்திய மீனாட்சிசுந்தரனின் மணக்கும் புகழ்பேசும் நாஒன்று உடையவர், இவ்வுலகில் எல்லாநலனும் உடையவராவார். அவனது தூயபுகழ் கூறும் நாஒன்று இல்லாதவர் எந்நலனும் இல்லாதவர் ஆவார்.

61. கேதாரம் கச்சி அவிமுத்தம் காழி கிளர்புலியூர்
வேதா ரணிய முதலாம் பதிதரு மேன்மைஅன்பர்க்(கு)
ஆதாரம் ஆய்உறை மீனாட்சி சுந்தர ஆரியன்பூம்
பாதார விந்தம் பணிவோர்க்(கு) எளிது பயன்படுமே.

**குறிப்புரை** : கச்சி= காஞ்சிபுரம். அவிமுத்தம்= காசி. கிளர்= உயர்வு. புலியூர்= சிதம்பரம். பாதாரவிந்தம்= திருவடித்தாமரை.

**பொழிப்புரை** : கேதாரம், காஞ்சிபுரம், காசி, சீர்காழி, உயர்ந்த சிதம்பரம் திருமறைக்காடு முதலிய பதிகளை வணங்குவோர் பெறும்மேன்மையை; இத்தலங்களின் சிறப்புகட்கெல்லாம் ஆதாரமாக வாழும் மீனாட்சிசுந்தரன் ஆகிய சிவபெருமானின் மென்மையான திருவடித்தாமரை, தன்னைப்பணியும் அன்பர்க்கு எளிதில்நல்கும்.

62. பயன்ஆர் தரஅடி யார்எந்த ஞான்றும் பரவுறுசீர்
நயன்ஆர் தருபுகழ் மீனாட்சு சுந்தர நாதன்அன்பர்க்(கு)
அயனார் பதமும் அரியார் பதமும் அடல்குலிசன்
வியனார் பதமும் திரணம தாகும் விரித்திடினே.

**குறிப்புரை** : பயன்= நற்பயன் - வீடுபேறு. நயன்= நன்மை. அயன்= நான்முகன். அரி= திருமால். வியன்= பெருமை. திரணம்= அற்பம். விரித்திடின்= சொல்லப்புகின்.

**பொழிப்புரை** : நர்பயனாகிய வீடுபேற்றை அனுபவிக்க அடியவர் எக்காலத்தும் வணங்கும் சிறப்புடைய நன்மைவடிவான புகழ்வாய்ந்த மீனாட்சிசுந்தரனாகிய கடவுளின் அன்பர்களுக்கு, சொல்லப்புகின் நான்முகன் பதவியும், திருமால்பதவியும், வெற்றிபொருந்திய குலிசப்படை ஏந்திய பெருமைபொருந்திய இந்திரன் பதவியும் அற்பமானவையாகும்.

**விளக்கம்** : பிறப்பும் இறப்பும் இன்றி எஞ்ஞான்றும் பேரின்பமேயாயது வீடுபேற்றின்பம். செய்த புண்ணியப்பலனுக்கேற்ப இன்பம் அனுபவித்தபின் மீண்டும் பிறப்பு இறப்புகட்குட்பட்டவை நான்முகன் முதலியபதவிகள் .எனவே சிவனடியார் வீடுபேற்றின்பமன்றிப் பிற வேண்டாராயினர்.

### 63. தலைவன், ஆறுபார்த்து அஞ்சேலெனல்

விரிக்கும் புகழ்க்குரு மீனாட்சி சுந்தர மெய்யன்வெற்பில்
கரிக்கும் அரிக்கும் கலங்கேன்நின் கொங்கைக் கரிக்கும்அதைப்
பரிக்கும் மருங்குல் அரிக்கும்அல் லாமல் பனிமலரைத்
தரிக்கும் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் தளிரியலே.

**குறிப்புரை** : தளிரியல்= மாந்தளிர் போன்ற மெல்லியல். கரி= யானை. அரி= சிங்கம். பரிக்கும்= தாங்கும்.

**பொழிப்புரை** : குளிர்ந்த மலர்சூடிய கரியகுழலும், வெண்பற்களும், செவ்விதழ்களும் கொண்ட மாந்தளிர்ஒத்த மெல்லியலே ! பெரும்புகழுடைய குருவாகிய மீனாட்சிசுந்தரச் சிவனின் மலைக்கண், வாழும் யானைக்கும் சிங்கத்திற்கும் மனம்கலங்கவில்லை; உனது கொங்கைகளாகிய யானைக்கும். அவற்றைத் தாங்கும் மெல்லிய இடையாகிய சிங்கத்திற்கும் மட்டுமே அஞ்சுகிறேன்.

**விளக்கம்** : யானையின் மத்தகம்போன்று சாயாத கொங்கைகளை யானைகள் என்றும், அந்த யானைகளைத் தாங்கும் சிங்கத்தின் இடைபோன்ற இடைக்கும் அஞ்சுவேன் என்று முறையே தலைவியின் இளமையையும், உடல்நலத்தையும் புகழ்ந்தான். ( சிறுத்த இடை நலத்தின் அடையாளம் என்பது மருத்துவர்கள் முடிபு. )

### 64. தலைவனின் கையுறை ஏற்ற தலைவியின் மகிழ்ச்சியைத் தோழி தலைவனிடம் கூறுதல்

தளிரும் வெளிரும் கரத்தேற்று நின்கைத் தழையைமுலை
குளிரும் படிஒற்றிக் கொண்டாள் அதனைக் குறித்திடில்அம்
மிளிரும் தழையைநன் மீனாட்சி சுந்தர மெய்யன்வெற்பா
ஒளிரும்நின் கையென உன்னினள் போலும் ஒளிஇழையே.

**குறிப்புரை** : தளிரும் வெளிரும்= தளிரும்கூடத் தன்அழகு கெடும். உன்னினள்= நினைத்தாள்.

**பொழிப்புரை** : ஒளிபொருந்திய அணிகலன் அணிந்த தலைவி, நீகொடுத்த கையுறையாகிய தழையை, தளிரும்கூடத் தன்அழகுகெடும் கையில் ஏற்று அதனைத்தன் முலைகளில் ஒற்றிக்கொண்டாள். இதுகுறித்து எண்ணினால் அவ்வொளிபொருந்திய தழையை உனது கையாக நினைத்தாள் போலும்.

65. ஒளிஆர் தருதன் அடித்தொண்(டு) உஞற்ற உரிமையிலா
எளியான் எனஎனை எள்ளா(து) எடுத்தாண்(டு) இருத்துமின்சீர்
அளியார் புகழ்க்குரு மீனாட்சி சுந்தர அற்புதன்தன்
நளிஆர் பணிபுரி யாதே கழித்தனன் நாள்பலவே.

**குறிப்புரை** : உஞற்ற= செய்ய. சீர் இருத்துமின்= சிறப்பில் நிறுத்துங்கள். நளி= பெருமை .

**பொழிப்புரை** : கருணைமிக்க புகழ்வாய்ந்த குருவாகிய மீனாட்சி சுந்தரனாகிய இறைவனுக்குப் பெருமைபொருந்திய தொண்டுசெய்யாது நாட்கள்பல கழிந்தன. ஆதலின் ஒளிபொருந்திய அவனடிக்குத் தொண்டு செய்ய உரிமையில்லா அற்பன் என்று என்னை இகழாது ஏற்றுப் பணிதந்து என்னைச் சிறப்பில் நிறுத்துங்கள்.

66. பல்ஆ தவற்குப் பறித்தபி ரான்வன் பழிசிறிதும்
புல்லாத நற்குரு மீனாட்சி சுந்தர பூரணன்சீர்
கல்லாத மக்கள் பிறப்பில்கற் றார்தம் கழகம்உறல்
இல்லாத கான்திரி மாவாப் பிறத்தல் இனியதுவே.

**குறிப்புரை** : ஆதவற்குப் பல் பறித்தபிரான்= ( தக்கன் வேள்வியில் ) சூரியனின் பற்களைத்தகர்த்த தலைவன். புல்லாத= தழுவாத. மக்கள் பிறப்பில்= மக்களாய்ப் பிறப்பதை விட. கழகம்= சபை. கான் திரிமா= காட்டில் திரியும் விலங்கு.

**பொழிப்புரை** : தக்கன்வேள்வியில் சூரியனின்பற்களைத்தகர்த்தவனும், பழிசிறிதும் தழுவாதவனும் ஆகிய நற்குருவாம் மீனாட்சிசுந்தரனாகிய இறைவனது சிறப்புகளைக் கற்காத மனிதனாகப் பிறப்பதைவிட, கற்றவர் சபையை அடையாததும், காட்டில் திரிவதுமாகிய விலங்காய்ப் பிறத்தல் இனியதாகும்.

67. இனிக்கும் புகழ்க்குரு மீனாட்சி சுந்தர ஏந்தலையே
சனிக்கும் துயர்கெடச் சாராமல் அந்தோ தளர்பசியால்
கனிக்கும் சருகிற்கும் காய்க்கும் அங்காந்துவெங் கான்திரிந்து
பனிக்கும் வெயிற்கும் வருந்துறு வார்சிலர் பாவம்இதே.

**குறிப்புரை** : சனிக்கும் துயர்= பிறக்கும் துன்பம். தளர்பசி= தளர்ச்சிதரும் பசி. அங்காந்து= வாய்பிளந்து - உண்டு.

**பொழிப்புரை** : பிறக்கும் துன்பம் கெட, இனியபுகழ்வாய்ந்த மீனாட்சி சுந்தரனாகிய உயர்ந்தவனைச் சரணடையாமல்,தவம்புரிவதாகச் சொல்லிக் கொடியகாட்டில் கனி, சருகு, காய் ஆகியனஉண்டு திரிந்து, பனி வெயில் ஆகியவற்றால் சிலர் வருந்துவர். அந்தோ ! பாவம்.

68. பாவலர் போற்றுறு மீனாட்சி சுந்தரப் பண்ணவன்தன்
பூஅலர் சேவடிக் கேதுதி என்றும் புகலப்பெறார்
காவலர் ஆயினும் என்னாம் அவர்கள் கற்றார்தமக்கும்
ஏவல ராய்ச்சிறி தும்பய னின்றி மெலிபவரே.

**குறிப்புரை** : பா= காத்தல். பண்ணவன்= கடவுள். அலர்பூ. புகலப்பெறார்= சொல்லாதவர். மெலிபவர்= வருந்துகிறவர்.

**பொழிப்புரை** : காத்தலில்வல்ல திருமால் முதலியவர்களால் போற்றப் பெறும் மீனாட்சிசுந்தரனாகிய கடவுளின் மலர்ந்த பூப்போன்ற சேவடிகளை வணங்கித் துதிகூறாதவர் அரசரேயாயினும் பயனில்லை. அவர்கள் கற்றவர்களுக்கும் ஏவல் செய்பவராய், சிறிதும் பயனின்றி வருந்துபவரே ஆவர்.

69. பவம்காட்டு வெவ்வினைப் பற்றற அன்பர் பராவலுறும்
சிவம்காட்டு சீரருள் மீனாட்சி சுந்தர தேசிகன்தன்
நவம்காட்டு சேவடி யேநாயி னேற்(கு)ஒரு நல்லரணா
எவம்காட்டு தீநிரை யம்காட்டி டாமல் இருப்பதுவே.

**குறிப்புரை** : பவம்= பிறவி. பராவலுறும்= வணங்கும். நவம்= நட்பு. எவம்= துன்பம்.

**பொழிப்புரை** : பிறவியைத்தரும் கொடிய வினைகளின் பற்று விட, அடியவர் வணங்கும் சிவபெருமானைக் காட்டுகிறவராகிய மீனாட்சிசுந்தர குருவின் நட்புகாட்டும் சேவடி, நாயொத்த எனக்கு ஒருநல்ல பாதுகாப்பாக இருந்து துன்பம்தரும் கொடியநரகம் தராமல் இருக்கும்.

70 பத்திசெய் தேஅருள் மீனாட்சி சுந்தரப் பண்ணவற்கு
முத்தி எளிதின் உறலாம் அதைவிட்டு மூடர்சிலர்
சித்திஉண் டென்று வெறிகொள்கஞ் சாஇலை தின்றுதின்று
பித்(து)இரி யார்எந்த ஞான்(று)அவர் முத்தி பெறுவதுவே.

**குறிப்புரை** : சித்தி= மோட்சம் / வீடுபேறு. பித்து இரியார்= பைத்திய நிலையில் விடுபடமாட்டார்.

**பொழிப்புரை** : அருளும் பண்புவாய்ந்த மீனாட்சி சுந்தரன்பால் பத்திசெய்தே எளிதில் வீடுபேறு பெறலாம். அதனைக் கைவிட்டு, மூடர்சிலர்

வெறியூட்டும் கஞ்சாஇலையைத் தின்றால் வீடுபேறு பெறலாம் என்று அதைத் தின்றுதின்று பைத்தியநிலையில் விடுபடாது உள்ளனர். இவர்கள் வீடுபேறு பெறுவது எப்போது ? இவர்கள் வீடுபேறு பெறஇயலாது.

71. **மான் வினாதல்**

பெருமான் அடியர் பிழைமறந்(து) என்றும் பிறங்கும்இன்பம்
தருமான் அருட்குரு மீனாட்சி சுந்தர சாமிவெற்பில்
கருமான் அனைய விழிமட வீர்என் கணைக்குத்தப்பி
ஒருமான் இவண்துள்ளி வந்ததுண் டாயின் உரைமின்களே.

**குறிப்புரை** : பெருமான்= பெருமகான். மானனைய கருவிழி.

**பொழிப்புரை** : பெருமைபொருந்திய அடியவர்களின் பிழைகளை மறந்து, விளங்கும் இன்பம்தரும் மகானாகிய மீனாட்சிசுந்தரனாகிய இறைவனது மலைக்கண் வாழும் மான்போன்று மருளும் கருவிழியுடைய பெண்களே ! என் அம்புக்குத்தப்பி ஒருமான் இங்குத்துள்ளிஓடிவந்ததைக் கண்டது உண்டாயின் கூறுங்கள்.

72. **புனல்தரு புணர்ச்சி தலைவி கூறல்**

உரைசெய் தொறும்உல வாப்பெரும் சீர்புனை உத்தமன்இத்
தரைசெய் தவம்புரை மீனாட்சி சுந்தர சாமிவெற்பில்
விரைசெய் மலர்ச்சுனை வீழ்ந்துயான் அழுங்க விரைந்(து)என்உயிர்
வரைசெய் புயத்தில் தழீத்தந் தனனொரு மன்னவனே.

**குறிப்புரை** : உலவா= எல்லையின்றி வளரும். விரை= நறுமணம். அழுங்க= வருந்த. உயிர்தந்தனன்= உயிர்காத்தான்.

**பொழிப்புரை** : கூறுந்தொறும் எல்லையின்றி வளரும் சிறப்புடைய உத்தமனாக, இவ்வுலகம் செய்த தவத்தை ஒத்தவனாகவுள்ள மீனாட்சிசுந்தர சாமியின் மலைக்கண் உள்ள மலர்களால் மணக்கும் சுனையில் நான்வீழ்ந்து வருந்தியபோது, தனது மலைபோன்ற தோள்களால் என்னைத் தழுவிக் கரைசேர்த்து என்னுயிரை ஒரு மன்னவன் காத்தான்.

73. மன்னும் பவவா ரிதியைச் சுவற்றும் வடவைமனம்
துன்னும்அஞ் ஞான துணங்(கு)அற மாய்க்கும் சுடர்இரவி
பன்னும் கலைஉணர் பாவலர் நாளும் பரவல்உறு
மின்னும் புகழ்க்குரு மீனாட்சி சுந்தர வித்தகனே.

**குறிப்புரை** : பன்னும்= இயற்றும். வித்தகன்= ஞானி. பவ வாரிதி= பிறவிக்கடல். சுவற்றும்= வற்றச்செயும். வடவை= வடவைத்தீ. துன்னும்= பொருந்திய. அஞ்ஞானத் துணங்கு= அறியாமையாகிய இருள். சுடர் இரவி= ஒளிரும் ஞாயிறு.

**பொழிப்புரை** : கலைகளை உணர்ந்த பாவல்லவர்கள் நாடோறும்

போற்றும் ஒளிரும் புகழ்வாய்ந்த குருவாகிய மீனாட்சிசுந்தரனாகிய ஞானி, உயிர்களைத் தொடர்ந்துவரும் பிறவிக்கடலை வற்றச்செய்யும் வடவைத்தீ, மனத்தில்பொருந்திய அறியாமையாகிய இருள் முழுவதையும் அழிக்கும் ஒளிரும் ஞாயிறு ஆவான்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளில் இருவேறு உருவகங்கள் உள.

74. விதிக்கும் தொழிலுடை வேதற்கும் தாமரை மேவியமின்
பதிக்கும் அரிய பதம்பெற வேண்டில் பரவுவர்பால்
கதிக்கும் அருட்குரு மீனாட்சி சுந்தர காரணன்சீர்
துதிக்கும் தொடையில் தொடுப்பாய்எஞ் ஞான்றும் துணைமனனே.

**குறிப்புரை** : விதி= தலைவிதி. வேதன்= நான்முகன். மின்= திருமகள்.

**பொழிப்புரை** : மனமே ! தலைவிதியை எழுதும் தொழில்செய்யும் நான்முகன், செந்தாமரை மலரில்இருக்கும் திருமகளின் கணவன் திருமால் ஆகியவர்களுக்கும் மேலானபேறு - வீடுபேறு - பெறப்போற்றுவோர்க்கு மிக்க அருள்புரியும் குரு மீனாட்சிசுந்தர முதற்பொருளின் சிறப்புகளைக் கவிமாலை யாகப் புனைவாய். அவனே எக்காலத்தும் உனக்குத் துணையாவான்.

75. துணையா வதும்வன் மலக்கருங் குன்றைத் துகள்படுத்தும்
கணையா வதும்பிற விக்கடல் நின்று கரையினுய்க்கும்
புணையா வதும்குரு மீனாட்சி சுந்தர புண்ணியன்என்
துணையா வணம்நிறு வும்பனி மாமலர் ஒண்பதமே.

**குறிப்புரை** : மலக்கருங்குன்று= மும்மலமாகிய வலிய மலை. புணை= தெப்பம். என்துணை ஆ வணம்= எனக்குத் துணயாகுமாறு.

**பொழிப்புரை** : எனக்குத் துணையா விளங்குவதும்,வலிய மும்மலமாம் மலையைத் தூளாக்கும் அம்பாகவிளங்குவதும், பிறவிக்கடலில் இருந்து கரைசேர்க்கும் தெப்பமாக விளங்குவதும், என்குருவாகிய மீனாட்சிசுந்தர புண்ணியன் எனக்குத் துணையாகும் வண்ணம் நிறுவியுள்ள அவனது குளிர்ந்த தாமரைமலர் ஒத்த ஒளிபொருந்திய திருவடியாகும்.

**இலக்கணக்குறிப்பு** : ஆ - ஆக என்பதன் குறுக்கம்.

76. ஒண்ணார் புரம்அவி யக்குறு மூரல்கொள் உத்தமன்சீர்
நன்னா வலர்புகழ் மீனாட்சி சுந்தர நாயகனை
உன்னா உறுசுகம் கொள்ளார் கனத்த உடல்அதனை
மன்ஆ தரவில் சுமத்தலில் என்பயன் மற்றவர்க்கே.

**குறிப்புரை** : புரம்= முக்கோட்டைகள். மூரல்= புன்முறுவல். உன்னா= உன்னி - நினைத்து. மன் மீனாட்சிசுந்தர நாயகன்.

**பொழிப்புரை** : பகைவரின் முக்கோட்டைகள் எரியப் புன்முறுவல் செய்த உத்தமனும், சிறப்புப்பொருந்திய மதிநுட்பம் வாய்ந்த நாவலர்கள்

புகழும் பெருமைபொருந்தியவனுமாகிய மீனாட்சிசுந்தரனாகிய தலைவனை நினைத்து மிக்கசுகம் கொள்ளாதவர் உடலை, ஆதரவுடன் சுமப்பதால் பிறர்க்கு எப்பயனும் இல்லை.

77. மறங்கொள் விழிமட மானார் முயக்கின் மயங்கும்எனை
அறங்கொள்தன் சேவடிக்(கு)ஆம்பணி செய்ய அடிமைகொண்ட
நிறம்கொள் புகழ்க்குரு மீனாட்சி சுந்தர நின்மலன்தன்
திறம்கொள் அருட்(கு)ஓர்கைம் மா(று)அறி யேனித் திகழிடத்தே.

**குறிப்புரை** : மறம்கொள் விழி= அறமல்லாப் பார்வை. முயக்கு= புணர்ச்சி. நிறம்= ஒளி. திறம்= ஆற்றல். கைம்மாறு= பெற்ற அளவு திருப்பித்தருதல். திகழ் இடம்= விளங்கும் உலகு.

**பொழிப்புரை** : அறமல்லாப்பார்வையுடைய மானொத்த இளமகளிரின் புணர்ச்சியில்மயங்கும் என்னை, தனது அறவடிவான சேவடிக்கு உரிய தொண்டுசெய்ய அடிமைபூண்டவனாகிய ஒளிபொருந்திய புகழ்வாய்ந்த குருவாகிய மீனாட்சி சுந்தரனாம் ஆற்றல்வாய்ந்த அருளுக்கு, விளங்கும் இவ்வுலகில் எவ்வகைக் கைம்மாறும் இல்லை.

78.. இனியான் அனையினும் தன்அடி யார்கட்கென் றும்சிறிதும்
முனியான் அருட்குரு மீனாட்சி சுந்தர முத்தன்உளம்
கனியா உவந்(து)எனை ஆட்கொண்(டு) அருளும்முற் காலமதில்
நனியான் புரிந்த பெருந்தவம் வாழிய நன்(கு)உறவே.

**குறிப்புரை** : அனையினும் இனியான். அனை= அன்னை. முத்தன்= இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன் - சிவன். கனியா= கனிந்து.

**பொழிப்புரை** : தாயினும் இனியவனும், தன்அடியாரிடம் சிறிதும் சினமில்லாதவனும் ஆகிய அருளேவடிவான குருவாகிய மீனாட்சிசுந்தரனாம் சிவபிரான், தன் உள்ளம் கனிந்து என்னை ஆட்கொண்டு அருள்புரிந்த முற்காலத்தில் அவ்வருளின்பொருட்டு நான் செய்த பெருந்தவம் நன்மைபொருந்த என்றும்வாழ்க.

**இலக்கணக்குறிப்பு** : வாழிய - இய ஈற்று வியங்கோள் வினைமுற்று.

79. நலமே மலியும்என் நாவே நினைஎன்றும் நான்புகழ்வேன்
சலமே மருவலில் மீனாட்சி சுந்தர சாமிதனைக்
கலமே பவக்கடற் குக்கட லேஅம் கருணைக்குநற்
பலமே அருள்என ஓயாது நீஎன்றும் பாடிடினே.

**குறிப்புரை** : சலம்= வஞ்சனை. பவக்கடற்குக் கலமே. கருணைக்குக் கடலே. பல= ஆற்றல். பாடிடின்= பாடினால்.

**பொழிப்புரை** : நலம்மிக்க என் நாவே ! வஞ்சனை பொருந்தாத மீனட்சிசுந்தரன் ஆகிய இறைவனை, “ பிறவிக்கடல் கடக்கவுதவும்

மரக்கலமே ! அழகிய கருணைக்கு ஒப்பற்ற கடலே ! நீஎனக்கு ஆற்றல் அருள் " என்று ஓயாது பாடுவாயானால் உன்னை எந்நாளும் புகழ்வேன்.

**விளக்கம்** : " ஆற்றல் அருளென்று ஓயாது வேண்டின் " ஆற்றல் கிடைக்கும் என்பது உளவியல் முடிபு. .

80. பாடாத வெய்ய கொடுநாவும் வாழ்கபல் லூழிஎன்றும்
கோடாத பேரரு ளால்தன் அடியர் கள்குற்றமதை
நாடாத தண்குணக் குன்றனை யான்பெரு நன்மையொடு
வாடாத சீர்புனை மீனாட்சி சுந்தர வள்ளலையே.

**குறிப்புரை** : பாடு= கேடு - கெடுதல். வெய்ய= விரும்பத்தக்க. கொடு= வளைந்த. கோடாத= அறத்தில் வளையாத. நன்மை= நலங்கள்.

**பொழிப்புரை** : எந்நாளும் அறத்தில் வளையாத பேருருளால், தனது அடியார்களின் குற்றத்தை நினையாத பெருமைபொருந்திய குணக்குன்றான சிவபிரானின் அளவற்ற நற்குணங்களுடன் கூடிய வாடாத சிறப்புகளைப் புனைந்த வள்ளலாம் மீனாட்சி சுந்தரனைப் போற்றும் கெடுதல் இல்லாத விரும்பத்தக்க வளைந்த நாக்கும் பல்லூழிக்காலம் வாழ்க.

**இலக்கணக்குறிப்பு** : நாவும் வாழ்க என்பதில் உள்ள எச்சவும்மை, அவனைத் தத்தம் வழியில் போற்றும் பிறவுறுப்புகளும் வாழ்க என்பது குறித்தது

81. வள்ளலை ஆர்அருள் மீனாட்சி சுந்தர மாண்குருவை
உள்ளலை நற்பணி ஓவா(து)எஞ் ஞான்றும்உ ஞற்றிடவுள்
கொள்ளலை அன்றி அவன்பணி செய்அன்பர் கூட்டத்தையும்
நள்ளலை தீநெஞ்ச மேஇது நிற்கு நலமலவே.

**குறிப்புரை** : உள்ளலை= நினைக்கவில்லை. உஞற்றி= செய்ய. நள்ளலை= விரும்பவில்லை.

**பொழிப்புரை** : மனமே ! கருணைவள்ளல் ஆகிய மீனாட்சிசுந்தரனாம் மாட்சிமைப்பட்ட குருவை நீ நினைக்கவில்லை. அவன் திருவடிகட்கு உரிய நல்லதொண்டுகளைச் செய்ய எந்தஒருகாலத்திலும் மனம்பற்றவில்லை. மேலும் அவனுக்குத் தொண்டுசெய்யும் அடியவர் கூட்டத்துடன் கூடிவாழவும் விரும்பவில்லை. இது உனக்கு நன்மைதராது. நீ நன்மைபெற இவற்றைச் செய்வாயாக.

82. **கையுறை நல்கல்**

அலையேந்து தண்ணென் பயோததி வந்த அமுதனையாய்
சிலையேந்து நின்முலை போல்விலை இல்லென்று செப்பிமிக்க
விலையேந்து மாமணி தந்தார் எழில்வில் வேளைவென்ற

மலையேந்து தண்ணருள் மீனாட்சி சுந்தர மான்வெற்பரே.

**குறிப்புரை** : பயோததி= பாற்கடல். சிலை ஏந்து= மலையை ஏந்தியது போன்ற. வில் ஐ இல்லை= ஒளி உடையதில்லை. விலைஏந்து=விலைமதிப்பு மிக்க. மாமணி தந்தார்= அழகிய மாணிக்கமணியைக் கையுறையாகத் தந்தார். மலை வில் ஏந்து= மேருமலையை வில்லாக ஏந்திய.

**பொழிப்புரை** : அழகிய மன்மதனை நுதல்விழியால் வென்றவராகிய பெருமைமிக்க அருள்வடிவான மகான் மீனாட்சிசுந்தரரின் மலைக்கண்வாழும் தலைவர், " திருப்பாற்கடலின் அலைகளிடையேவந்த அமுதம் போன்றவளே ! மலையை ஏந்தியதுபோன்ற உனது முலைபோல் ஒளியுடையதில்லை என்று கூறி மிக்கவிலைமதிப்புடைய மாணிக்கமணியைத் தந்தார் " என்று கூறித்தோழி தலைவன் தந்த கையுறையைத்தந்தாள்.

**83.** மானம் தவாத அடியார்க்(கு) அருளின் மலிதருமெய்ஞ்
ஞானம் தவா(து)அருள் மீனாட்சி சுந்தர நாதனையே
கானம் தவாத தமிழால் புகழக்கல் லாமல்அந்தோ
ஈனம்த வாக்கொடி யேன்என்செய் தேன்சற்றும் எண்ணம்அற்றே.

**குறிப்புரை** : மானம் தவாத= தன்நிலையில் சற்றும் கெடாத. அருளின்= அருளும்போது. கானம்= இசை. ஈனம்= இழிநிலை.

**பொழிப்புரை** : தன்னிலையில் சற்றும் கெடாத அடியவர்க்கு அருளும்போது, அளவற்ற மெய்ஞ்ஞானத்தைக் கெடாது அருளும் மீனாட்சிசுந்தரனாகிய தலைவனை, இழிநிலைகெடாத கொடியவனாகிய நான் இசைகெடாத தமிழால் புகழக்கற்காமல், அந்தோ ! சிறிதும் நல்லெண்ணம் இல்லாமல் செய்யக்கூடாதன செய்துவிட்டேன்.

**84.** பாவிற்(கு)ஓர் வந்தனம் அப்பாவை நாளும் பகர்தருநன்
நாவிற்(கு)ஓர் வந்தனம் நான்புரி வேன்வளை நாரணனாம்
தேவிற்(கு) உதவிய மீனாட்சி சுந்தர தேசிகன்தாள்
பூவிற்(கு) உரிமை யுடைத்தாய் விளங்கிப் பொலி(வு)உறினே.

**குறிப்புரை** : வளை= சங்கு. உதவிய= சக்கரம் அருளிய.

**பொழிப்புரை** : சங்கேந்திய திருமாலுக்குச் சக்கரம்அருளிய சிவனாகிய மீனாட்சிசுந்தரக் குருவின் திருவடிமலர்களுக்கு உரிமைஉடையதாய்விளங்கிப் பொலிவுபெறுமானால் அந்தப்பாடலுக்கும், அதைச் சொன்ன நாவுக்கும் தனித்தனியே என்வணக்கம் உரியது.

**86.** பொல்லா தவனாம் மதன்அவன் பூங்கையில் பூண்கழையும்
வில்லா மலரும் கணையா இளந்தென்றல் வெவ்வரவம்
எல்லார் அருட்குரு மீனாட்சி சுந்தர எம்இறைவன்
நல்லா தரவில்தன் தோள்மாலை நல்கிட நாம்பெறினே.

**குறிப்புரை** : மதன்= மன்மதன். பூங்கை= அழகியகை. பூண்= பிடித்த. கழை= கரும்பு. எல்= இகழ்ச்சி.

**பொழிப்புரை** : அருளே வடிவமாகப் பொருந்திய குருவாம் மீனாட்சிசுந்தரன் ஆகிய இறைவன், அன்புகாட்டித் தன்தோள்மாலை தர

நாம்பெற்றால், பொல்லாதவனாகிய மன்மதனின் அழகிய கையில் பிடித்த கரும்புவில்லும், மலர் அம்புகளும் கொடியஅரவு ஆகிய மெல்லிய தென்றல்காற்றும் இகழ்ச்சிக்குரியன வாய்விடும். நம்மை வருத்தா.

**87.** நாமலி வெய்ய பிணிகாள் நடமின் நடமின்நறும்
பூமலி கொன்றையன் மீனாட்சி சுந்தரப் புண்ணியனின்
பாமலி பாவலர் நாவிற்(கு) அடங்காப் படர்புகழான்
தேமலி பேரருள் என்கண்ணும் சாலவும் தேக்கினனே.

**குறிப்புரை** : பூ= மென்மை. படர்= விரிந்த. தே= இனிமை. நாமலி= புகழ்பெற்ற. நடமின் நடமின்= வெளியேறுங்கள் வெளியேறுங்கள்.

**பொழிப்புரை** : நறுமணத்துடன் மென்மையும் மிக்க கொன்றைமலர்மாலை சூடிய சிவனாகிய புண்ணியனும், பாக்கள்மிகப்பாடும் பாவலர்களின் நாவிற்கு அடங்காத விரிந்த புகழுடையவனுமாகிய மீனாட்சிசுந்தரனின் இனிமை மிக்க பேரருளை என்னிடத்திலும் மிகவும் தேக்கியுள்ளேன். எனவே புகழ்வாய்ந்த கொடிய நோய்களே என்னைவிட்டு வெளியேறுங்கள் ! வெளியேறுங்கள் !

**இலக்கணக்குறிப்பு** : நடமின் நடமின் - விரைவுபற்றிய அடுக்குத்தொடர்

**88.** தேமாறி லாஅருள் மீனாட்சி சுந்தர தேசிகன்தோள்
பூமாலை நல்கிடப் பெற்றேன் வெகுண்டு பொருதவந்த
காமா இனிநட வாதுதின் பாய்வில் கரும்பினைஅம்
பாமா மலரைத் தருவாய் என் ஓதிக்(கு) அணிந்திடவே.

**குறிப்புரை** : தேபூமாலை. பொருத= போரிட. தின்பாய் வில்கரும்பினை. ஓதி= கூந்தல்.

**பொழிப்புரை** : என்றும்மாறாத அருள்வடிவான மீனாட்சிசுந்தரன் ஆகிய சிவத்தின் தோள்மாலையை அவன்தரப் பெற்றேன். ஆதலின், என்மேல் சினந்துவந்த மன்மதனே ! உன்வேலை இனிநடக்காது. எனவேஉன்வில்லாகிய கரும்பை நீ தின்பாயாக. உன் அம்புகளாகிய மலர்களை என் கூந்தலில் சூட்டிக்கொள்ளத் தருவாயாக.

**89.** அண்டலர் வாழ்தரு மூஎயில் அன்(று)அழ லால்அவியக்
கண்டவன் பேரருள் மீனாட்சி சுந்தர காரணன்தன்
தண்தரு மாமலர்ச் சீரடிக் கேபுகழ் சாற்றுவதை
விண்டவர் விண்டவ ரேபர மானந்த வீட்டையுமே.

**குறிப்புரை** : அண்டலர்= பகைவர். விண்டவர்= பகைத்தவர்.

**பொழிப்புரை** : பகைவர் வாழ்ந்த முப்புரங்களையும் புன்முறுவல் தீயால் எரித்த சிவனாகிய பேரருள் வாய்ந்த மீனாட்சிசுந்தரனாகிய மூலப்பொருளின் பெருமைதரும் தாமரைமலர் ஒத்த சீரடிக்குக்கூறும் புகழைப் பகைத்தவர் மேலான பேரின்பம்தரும் வீடுபேற்றையும் பகைத்தவராவர்.

**விளக்கம்** : முப்புரங்களாவன ஆணவம், கன்மம், மாயை என்பனவாம். இதனை " முப்புரம் என்பது மும்மல காரியம் " ( திருமந்திரம். 343. ) என்னும்.

**90.** வீட்டை எளிதின்வெம் பாசம் வருத்த விதையெனவே
சேட்டை யறச்செய்(து) அடியார் தமக்குவெந் தீயபவ

வேட்டை இரித்(து)அருள் மீனாட்சி சுந்தர எம்இறைசீர்
பாட்டை உறப்படிப் பேற்கும்இன் றோநற் பரமுத்தியே.

**குறிப்புரை** : சேட்டை= தொந்தரவு. வெந்தீய பவ வேட்டை= கொடிய தீங்குதரும் பிறவித் துன்பம். இரித்து= ஓட்டி. முத்தி இன்றோ= முத்தி இல்லையோ ? உண்டு.

**பொழிப்புரை** : கொடியபாசம் விதையாக வருத்த, அதன் தொந்தரவை முற்றாகத்தீர்த்து, அடியவரின் கொடிய தீங்குதரும் பிறவித்துன்பத்தை ஓட்டி வீடுபேற்றை எளிதின் அருளும் மீனாட்சிசுந்தரனாகிய எமது இறைவனது சிறப்பினைக்கூறும் பாடலை நெஞ்சிலுறப் படிக்கும் - பழகும் - எனக்கும் மேலான முத்திப்பேறு இல்லையோ ? உண்டு.

**விளக்கம்** : ஒருவிதை முளைத்து ஒருமரமாகி. மிகப்பலவிதைகளைத் தர, அவ்விதைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மரமாய் விதைதர இவ்வாறு விதைகளும் மரங்களுமாய் .எல்லையின்றி தொடரும். பாசமும் ஒன்றாய் முளைத்து எத்தனையோ கவடுவிட்டு மேன்மேலும் எல்லையின்றிப் பெருகும் இயல்புடையதாதலின் பாசத்தை விதைஎன்றார்.

**91.** முத்தே எனும்வெண் ணகையார் முலையின் முயங்கிமயல்
பித்தேறி யேகழி யக்கடவேனைப் பெருமறைக்கு
வித்தே எனும்குரு மீனாட்சி சுந்தர மெய்ம்மையன்இன்
பத்தே இருக்கச்செய் தான்இனி ஏது பருவரலே.

**குறிப்புரை** : மயல்= காமமயக்கம். கழிய= சாக. வித்து= மூலம். இன்பத்தே= வீட்டுலகில். பருவரல்= பிறவித்துன்பம்.

**பொழிப்புரை** : இவை முத்துகளே என்றுகூறத்தக்க பற்களுடைய மகளிரின் புணர்ச்சியாலான காமமயக்கத்தில் பித்துமிகுந்து சாகவேண்டிய என்னை ஆட்கொண்டு, பெருமறைகட்கு மூலமாகிய மீனாட்சிசுந்தரனாகிய ஞானி, வீடுபேற்றின்பத்தில் இருக்கச்செய்தான். இனிஎனக்குப் பிறவித்துன்பம் இல்லை.

**92.** வரமா தவர்புகழ் மீனாட்சி சுந்தர வள்ளல்அருள்
தரமா பணிஅவர்க் கேபுரி யா(து)என் தலையதனில்
இரமான் உறுகுழ லார்க்(கு)ஏவல் செய்யென்(று) எழுதிவிட்ட
பிரமா தவநினக் கியான்செய்த(து) என்னை பெரும்பழியே.

**குறிப்புரை** : வரம்= மேன்மை.அருள்தர. இர= இரவு - இருள் மான்= ஒத்த. பெரும்பழி என்னை ?.

**பொழிப்புரை** : மேலான மாதவத்தோர் புகழும் மீனாட்சிசுந்தரனாகிய வள்ளல் அருள்புரிய, அவருக்கே தொண்டுசெய்யாதுஇரு என்றும், இருளொத்த அடர்ந்த கூந்தலுடைய மகளிர்க்கு ஏவல்செய் என்றும் என்தலையில் எழுதிஎன்னைப் பிறப்பில் வீழ்த்திய தவனாகிய நான்முகனே ! இவ்வாறு என்தலையில் எழுத உனக்கு நான்என்ன பெரும்பழி செய்தேன் ?

**( அந்தாதிகுரியன 100 செய்யுட்களாயினும் கிடைத்தவை 92.மட்டுமே )**

திருச்சிற்றம்பலம.